SRI U. V. V. SANSKRIT COLLEGE,
SRIPERUMBUDUR.

# ஸ்ரீ ராமாநுஜன் 116-117.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 10 | விளம்பிஞு ஆவணி, புரட்டாசியீ 1958ஞு ஆகஸ்டு, செப்டம்பரீ | மலர் 8, 9 |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுரம்.

ஓடுமனஞ்செய்கையுரை ஒன்றிநில்லாதாருடனே
கூடிநெடுமாலடிமைகொள்ளுநிலை—நாடறிய
ஓர்ந்தவன்றன்செம்மை உரைசெய்தமாறனென
ஏய்ந்துநிற்கும் வாழ்வாமிவை.

| | | | |
|---|---|---|---|
| ஓடும் | இதரவிஷயங்களில் விரைந்து ஓடுகின்ற | நாடு அறிய | நாட்டார் அறியுமாறு |
| மனம் | நெஞ்சும் | ஓர்ந்து | ஆராய்ந்து |
| செய்கை | காயமும் | | |
| உரை | வாக்கும் (ஆகிய இவை) | அவன்தன் செம்மை | அப்பெருமானுடைய ருஜுத்வ குணத்தை |
| ஒன்றி நில்லாதாருடனே | ஒருவழிப்பட்டு நிற்கப்பெறாத கோணல்பொருந்திய ஸம்ஸாரிகளோடு | உரைசெய்த | அருளிச்செய்த |
| கூடி | சேர்ந்து | மாறன் என | ஆழ்வார் என்று அநுஸந்தித்தவளவிலே |
| நெடுமால் | ஸர்வேச்வரன் | | |
| அடிமைகொள்ளும் நிலை | அடிமைகொள்ளுங் குணத்தை | வாழ்வு ஆம் இவை ஏய்ந்து நிற்கும் | ஸ்வரூபாநுரூபமான வாழ்ச்சிகள் பொருந்தி நிலைநிற்கும். |

* * *—எம்பெருமானை ஆச்ரயிக்குமவர்கள் மனமொழிமெய்களில் வேறுபாடுடையவர்களாகிச் செவ்வைக்கேடரான ஸம்ஸாரிகளாகையாலே அவர்களோடு பரிமாறுவது எம்பெருமானுக்கு இயலுமோ என்கிற சங்கை நீங்குமாறு, நீர் ஏறாத மேடுகளிலே எதையேனுஞ் செய்து நீரேற்றுமாபோலே இவர்களுடைய செவ்வைக்கேடுதானே தனக்குச் செவ்வையாம்படி அவர்களோடே கூடிப்பரிமாறும் ருஜுத்வகுணத்தை * ஓடும் புள்ளேறியென்னும் திருவாய்மொழி முகத்தாலே வெளியிட்டருளின நம்மாழ்வாரை அநுஸந்திக்கவே. நமது வாழ்ச்சி நிலைநிற்கு மென்றதாயிற்று.

ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தை அநுபவித்துப் பேசிவருகின்ற ஆழ்வார், கீழ்த் திருவாய்மொழியில் அவனது இனிமைக்குணமென்கிற பரம போக்யதையை அநுபவித்துப் பேசினார்; இத்திருவாய்மொழியில் அவனது ஆர்ஜவ குணத்தை அநுபவித்துப்பேசுகிறார். ஆர்ஜவமாவது—ருஜுவாயிருக்குந்தன்மை, மனத்திலுள்ளது ஒன்றும், வாயாற் சொல்லுவது வேறொன்றும், காரியத்தில் நடத்துவது பிறிதொன்றுமாயிருக்கை யன்றியே மனமொழி மெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருத்தல்

ஆர்ஜவமெனப்படும். இதற்குத் தமிழில் செம்மை என்று பெயர். இக்குணம் இத்திருவாய்மொழியில் அநுபவிக்கப்படுகிறது.

ஸம்ஸாரிகள், நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிராமல் பலவகைப்பட்டிருத்தலால் அன்னவர்களோடு எம்பெருமான் தான் பரிமாறுமிடத்தில் அவர்கள் போனவழியே தனக்கு வழியாம்படி தான் அவர்கட்குச் செவ்வியனாய்ப் பரிமாறுகை இங்குச் செம்மை எனப்படுகின்றது. ஒருவன் ஒருவனை நோக்கி 'அப்பா! நீ எவ்வூர்?' என்றால் 'நான் தற்காலமிருப்பது இவ்வூர்' என்று விடையளிப்பதும், 'உன் பெயர் என்ன?' என்றால் 'என் பெயர் உண்டு வளர்ந்தான்' என்று விடையளிப்பதும், 'இவ்விடத்திற்கு எப்போது வந்தாய்?' என்றால் 'நீ பார்த்தபோது வந்தேன்' என்று விடையளிப்பதும் இவ்வாறாகக் கேட்பதற்கெல்லாம் கோணலாகவே விடையளிப்பது கௌடில்ய குணத்தின் காரியமாகும். உள்ளதை உள்ளபடியே சொல்லுகையும் செய்கையும் செம்மைக் குணத்தின் காரியமாகும். சக்ரவர்த்தி திருமகனார் பஞ்சவடியில் எழுந்தளியிருந்தபோது சூர்ப்பணகை வந்து, ["ஆகதஸ் த்வமிமம் தேசம் கதம் ராக்ஷஸஸேவிதம், கிமாகமநக்ருத்யம்தே தத்வ மாக்க்யாதுமர்ஹஸி."] ராக்ஷஸர்கள் மிடைந்திருக்கின்ற இவ்விடத்திற்கு நீர் எவ்வாறு வந்தீர்? வந்த காரியமென்ன? என்று கேட்க, அதற்குப் பெருமாள் கோணலான உத்தரம் கூறலாமாயினும் அங்ஙனங் கூறாது 'ஆஸீத் தசரதோ நாம ராஜா' என்று தொடங்கி நேரான மறுமொழி கூறினர்; அவ்விடத்திலே வால்மீகி முனிவன் "ருஜுபுத்திதயா ஸர்வமாக்க்யாதுமுபசக்ரமே." (இராமபிரான் ருஜுவான புத்தியையுடையனாதலால் அனைத்தையும் உள்ளபடியே உரைக்கத் தொடங்கினன்) என்கிறான். இதுவாய்த்து ஆர்ஜவகுணம். ஆளவந்தாரும் ஸ்தோத்ர ரத்நத்தில் "வசீ வதாந்ய:" என்கிற ச்லோகத்தில் ருஜு: என்ற பதத்தினால் இக்குணத்தைப் பேசியருளினர்.

இத்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய திவ்யைச்வர்யஞ் சொல்லுகிறதாக ஆறாயிரப்படியில் திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிச்செய்திருக்கிறார். பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் அதனைப் பக்ஷாந்தரமாக்கி 'இத்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ஆர்ஜவகுணஞ் சொல்லுகிறது' என்று அருளிச்செய்துள்ளார்கள். ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் நம்பிள்ளை திருவடிகள் நிஷ்கர்ஷித்தபடியையே ஆதரித்து "...ருஜுதாம் ... ஜகாத" என்றும் "...ப்ரக்ருதி ருஜுதயா" என்றும் த்ரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலும், "... ஸ்வாராதம் ஸரஸபஜநம் ஸ்வார்ஜவ குணம்" என்று த்ரமிடோப நிஷத் ஸாரத்திலும் ச்லோகமிட்டு இத் திருவாய்மொழிக்கு ஆர்ஜவகுணப்ரதிபாதநமே ப்ரமேயமென்னுமிடத்தை வெளியிட்டருளினர் என்பதும் இங்குக் குறிக்கொள்ளத்தக்கது. இங்கே ஸ்ரீபரகாலஸ்வாமியின் பதினெண்ணாயிரப்படியிலுள்ள சில திவ்ய ஸ்ரீஸூக்திகள் விவேகிகளுக்கு விவேசநீயங்களாம்.

இங்கே ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"இத் திருவாய்மொழிதான் ஸர்வேச்வரனுடைய ஐச்வர்யத்தைச் சொல்லுகிறது என்பாருமுண்டு: அன்றிக்கே 'ஈச்வரத்வலக்ஷணஞ் சொல்லுகிறது' என்பாருமுண்டு. அன்றிக்கே; கீழே * பாடியிலேப்

பிலம் * என்றார்; அப்படியே பாடி அநுபவிக்கிறார் என்பாருமுண்டு. 'ஆர்ஜவகுணஞ் சொல்லுகிறது' என்று பட்டரருளிச் செய்யும்படி. பத்தர், முக்தர், நித்யர் என்று சேதநர்க்கு ஒரு த்ரைவித்யமுண்டிறே; த்ரிவித சேதநரோடும் பரிமாறுமிடத்தில் அவர்கள் தன்னினைவிலே வரும்படி பண்ணுகை யன்றிக்கே, நீரேறுமேடுகளிலே விரகாலே நீரேற்றுமா போலே தன்னை அவர்களுக்கீடாக அமைத்துப் பரிமாறும் என்னுமவ்வழியாலே இவனுடைய ஆர்ஜவகுணம் சொல்லுகிறார்." என்பன. .... .... .... (*)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுரம்—9.

இவையறிந்தோர்தம்மளவில் ஈசனுவந்தாற்ற
அவயவங்கள்தோறுமணையுஞ்—சுவையதனைப்
பெற்று, ஆர்வத்தால்மாறன் பேசினசொல்பேச, மால்
பொற்றாள் நஞ்சென்னிபொரும்.

| | | | |
|---|---|---|---|
| இவை | கீழ்த் திருவாய்மொழிகளில் அநுபவிக்கப்பட்ட திருக்குணங்களை | ஆர்வத்தால் | (அங்ஙனம் அடைந்த) இனிமையினால் |
| அறிந்தோர்தம் அளவில் | அறிந்தவர்கள் பக்கலில் | மாறன் | ஆழ்வார் |
| ஈசன் | எம்பெருமான் | பேசின | அருளிச்செய்த |
| உவந்து | திருவுள்ளமுகந்து | சொல் | (இந்தத்திருவாய்மொழியாகிற) ஸ்ரீஸூக்தியை |
| ஆற்ற | பொறுக்கப்பொறுக்க | | |
| அவயவங்கள் தோறும் | (ஒவ்வொரு அவயவமாக) எல்லா அவயவங்களிலும் | பேச | (நாம்) உச்சரிக்க |
| | | மால் | ஸர்வேச்வரனுடைய |
| அணையும் | வந்து சேர்ந்ததனாலுண்டான | பொன்தாள் | அழகிய திருவடிகள் |
| சுவை அதனை | ரஸத்தை | நம் சென்னி | நமது தலைமீது |
| பெற்று | அடைந்து | பொரும் | வந்துசேரும். |

* * *—இவை என்றது கீழ் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் அனுபவித்த குணங்களையாம். பரத்வம், பஜநீயத்வம், ஸௌலப்யம், அபராதஸஹத்வம், ஸௌசீல்யம், ஆராதனைக்கெளிமை, பரமபோக்யதை, ருஜுத்வம் என்கிற திருக்குணங்கள் கீழ்த்திருவாய்மொழிகளில் முறையே ஆழ்வாரால் அநுபவிக்கப்பட்டன வாதலால் அக்குணங்களை இவை என்று நிர்த்தேசிக்கிறபடி. அக்குணங்களை அறியுமவர்கள் திறத்திலே எம்பெருமான் ஸந்துஷ்டனாய்ப் பொறுக்கப் பொறுக்க ஸகல அவயவங்களிலும் ஸம்ச்லேஷிப்பன் என்று ஒன்றுண்டே, அப்பேற்றை ஆழ்வார்பெற்று அதனாலுண்டான ஆனந்தம் புறவெள்ளமிட்ட சொல்லாகிய இந்தத் திருவாய்மொழியை ஓதுவாரது சென்னித்திடரில் ஸர்வேச்வரனுடைய திருவடிகள் வந்து சேருமென்றாராயிற்று.

இவையறிந்து ஓர்தம்மளவில் எனப்பிரித்து இவற்றையறிந்து ஓர்கின்ற [ஆராய்ச்சி செய்கின்ற] தம்மளவிலே என்று முரைப்பாருளர். .... .... .... (*)

---

# ஸ்ரீராமாநுஜனுக்கு சந்தா செலுத்தியவர்கள்.

74. T. R. சடகோபன் (ராஜாஜி நகர்) பல்லாவரம்.
75. A. கோதண்டராமராஜு, G. T. மதராஸ்.
76. S. பட்டாபிராமப்பிள்ளை, G. T. மதராஸ்.
77. B. A. நரஸிம்மாச்சாரி, வண்டலூர்.
78. கோதை. குட்டியம்மாள், சிங்கபெருமாள்கோவில்.
79. செந்தாமரைகண்ண ஐயங்கார், H. G. C., மேட்டூர்டாம்.
80. ஆயி. வெங்கடாச்சாரியர், டெங்கணீகோட்டை.
81. M. சீதம்மா, திருவல்லிக்கேணி, மதராஸ்.
82. P. B. திருவேங்கிடாசாரியர், பம்பாய்-2.
83. சௌரிராஜ ஐயங்கார், கபிஸ்தலம்.
84. கிடாம்பி ஸ்ரீநிவாஸ ஐயங்கார், டெங்கணீகோட்டை.
85. S. R. ராஜகோபாலன், C. E. C. R. I., அளகப்பா காலேஜ்.
86. V. S. ராமாநுஜாச்சாரி, B. SC., பீர்வால்.
87. S. கிருஷ்ணசாமி ஐயங்கார், அட்வொகேட், கரூர்.



ஸ்ரீ:

# சித்திரபுத்தக வெளியீடு.

வைதிக லௌகிக மஹநீய மண்டலி யென்னும் சித்திரபுத்தகத்தின் முதற்பகுதி வெளி வந்துள்ளது. கிடைக்குமிடம்: க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

பூருவாசாரியர்களின் தனியன்களை நாம் தினப்படி அநுஸந்திக்கும்போது அவர்களின் பெருமைகளை நினைக்க நினைக்க உடல் மயிர்க்கூச்செறிகின்றது. அவர்களது திவ்ய மங்கள விக்ரஹ ஸேவையை நாம் பெற்றிலோமே! என்கிற துக்கம் அளவுகடந்து உண்டாகின்றது. மணவாள மாமுனிகளின் பரமபவித்ரமான திவ்ய ஸ்ரீஸூக்திகளை அடியேன் ஸேவிக்கும் போதெல்லாம் "பரமஸத்வநிதியான இம்மஹாசார்யருடைய திருவுருவத்தை ஸேவிக்கப் பெறாத பாவியோம் பிறப்பு என்னே" என்று பரிதவியாமலிருக்க முடியவில்லை. பூருவா சாரியர்களின் காலத்தில் உருவப்படமெடுக்கும் கருவிகள் இல்லாத காரணத்தினாலேயே அவர்களது திவ்ய மங்கள விக்ரஹ ஸேவை நமக்கு ப்ராப்தமாக வழியில்லையாயிற்று என்பதை அனைவருமறிவர்.

* வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே * என்ற நம்மாழ்வா ரருளிச் செயலும் பழுதாகித் திருநாடு சென்று சேர்ந்த பூர்வாசாரியர்கள் இனி நம்முடைய மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு இலக்காகப் போகிறதில்லை. ஆனாலும், பிற்காலத்திலும் பல மஹான்கள் ஆங்காங்கு விலக்ஷணர்களாய் ஜனிப்பதுண்டு. அறுபது ஆண்டுகட்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்து மறைந்த பெரியார்களின் திருவுருவப்படங்கள் நமக்குக் கிடைக்க வழியில்லாமற் போனாலும், அதற்குப் பிற்பட்ட காலத்து மஹான்களின் உருவப்படங்கள் கிடைக்க வழியுண்டாதலால் இவற்றையாவது பிற்காலத்தவர்கள் இழவாதபடிக்குச் செய்யவேணுமென்கிற அபிலாஷை நமக்கு இளமையிலிருந்தே யிருந்து வந்தது. அதனால் பல வைதிக லௌகிக மஹநீயர்களின் உருவப்படங்களைச் சேகரித்து அடியேனுடைய தமிழ் தெலுங்கு ஸம்ஸ்க்ருத ஹிந்தீ பாஷா மயங்களான மாதாந்தப் பத்ரிகைகளில் அவ்வப்போதுகளில் வெளியிட்டு வந்தேன். "தானே யெழுதிய தன் சரிதை" என்னும் பெயரால் வெளியிடப்பட்டிருக்கின்ற அடியேனுடைய ஸ்வகீய சரித புத்தகத்தில் நூற்றுக்கணக்கான மஹான்களின் உருவப் படங்களை வெளியிட்டிருப்பதைப் பலர் கண்டிருப்பர்கள். அப்படங்களை யெல்லாம் தனியே ஒரு புத்தகமாக்கிச் சிறந்த காகிதத்தில் பதிப்பித்து வைத்தால் அநுபவ ரஸிகர்களுக்குப் பெரிதும் உகப்பாகு மென்று தோன்றியதனால் வைதிக லௌகிக மஹநீய மண்டலி யென்னும் பெயர் பூண்ட புத்தகம் வெளியிடத்தொடங்கினோம். இதில் முதற்பகுதி நம்முடைய வட நாட்டுத் திருப்பதி யாத்திரைப் புறப்பாட்டுக்கு ஞாபக சின்னமாக 12—6—58 ல் வெளியிடப்பட்டது. உலகப் பிரசித்தமான சென்னை ஹோரா அண்டு கம்பெனியின் பதிப்பு ஆதலால் அச்சின் அழகு பற்றித் தெரிவிக்கவேண்டியதில்லை. இடையில் நம்முடைய யாத்திரையினால் இப்புத்தகம் பூர்த்தியாகி வெளிவரத்தடைபட்டது. விஜயதசமிக்குள்ளாகப் பூர்த்தியாகி வெளிவரும். இதன் விலை 2—0—0 ரூ.

## ப்ராஸங்கிகமான மற்றொரு விமர்சம்.

ஆரண்ய காண்டத்தில் ஸீதாவசனமாக மேலே யெடுத்துக்காட்டின ச்லோகம் (47-4) * ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே — ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே * என்கிற ஆநுபூர்வியாக நம் ஆசார்யர்களால் பலவிடங்களில் உதாஹரிக்கப் பட்டுள்ளது. இதை பகவத் விஷயாதிகளிற் காணலாம். ஆசார்ய ஹ்ருதயம் நான்காம் ப்ரகரணத்தில் எட்டாம்பத்தின் ஸாரார்த்தமுரைக்கும் எட்டாவது சூர்ணையில் "அமாநுஷ போகமாக்கினவன்" என்றவிடத்து மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்திலும் விசேஷித்துக் காணலாம். ஸ்ரீராமாயணப் பதிப்புகளிலோ வென்னில், இந்த ஆநுபூர்வி யில்லாமல் * உஷித்வா த்வாதச ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேசநே — உஷித்வா த்வாதச ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேசநே * என்றிவ்விதமாகக் காண்கிறது. பூர்வாசாரியர்களின் காலத் திற்கு ஸந்நிஹிதரான ஸ்ரீ கோவிந்தராஜரும் பூருவர்கள் கொண்ட பாடத்தையிட்டு வியாக்கி யானம் செய்யவில்லை. உஷித்வா இத்யாதியாக மேலே காட்டின பாடமே அவருடைய வியாக்கியானத்திலும் ஏறியுள்ளது. ராகவஸ்ய நிவேசநே என்ற ஸ்தானத்தில் 'இக்ஷ்வா கூணாம் நிவேசநே' என்று வைத்து "ஹ்ரியா பர்த்ருநாமாக்ரஹணம் — [வெட்கத்தினால் பர்த்தாவின் திருநாமத்தைக் கூறவில்லை] என்று மெழுதியுள்ளார் கோவிந்தராஜர். இதற் கடுத்த முன் ச்லோகத்தில் * ஸீதா நாமாஸ்மி பத்ரம் தே ராமபார்யா த்விஜோத்தம — ஸீதா நாம் நாஸ்மி பத்ரம் தே ராமபார்யா த்விஜோத்தம * என்று ஸ்பஷ்டமாக பர்த்தாவின் நாமக்ரஹ ணம் செய்யப்பட்டேயிருக்கிறது. கோவிந்தராஜர் அதைக் குறிக்கொள்ளாதவருமல்லர்; "கஸ்யேதி ப்ரச்நஸ்ய உத்தரம் — ராமேதி" என்று அவ்விடத்தில் வியாக்கியானமுமெழுதி யுள்ளார். பர்த்தாவின் நாமத்தை அடிக்கடி சொல்ல வேண்டிய ஆவச்யகதையுமில்லை. பூருவாசாரியர்கள் கொண்டருளின பாடத்திற்கு மாறான பாடம் கோவிந்தராஜர்க்கு எங்ஙனே ப்ராப்தமாயிற்றென்று தெரியவில்லை. 500, 600 வருடங்களுக்கு முந்தியே ஸ்ரீராமாயணாதிகளில் பாடபேதங்கள் விளையத் தொடங்கி விட்டதாக நாம் நிச்சயிக்க வேண்டி யிருக்கிறது. இது வொரு தனிப்பட்ட ஆராய்ச்சி. இது செய்யுமிடத்து மிக மிக வருத்த முண்டாகிறது. வான்மீகி முனிவரின் திருவாக்கில் ஏதோ ஒருவிதமான பாடம் வெளி வந்திருக்க வேணுமே யொழியப் பல்வேறு வகைப்பட்ட பாடங்கள் வெளிவந்திருக்க நியாய மில்லை. விளைந்திருக்கின்ற பாடபேதங்களோ அபரிமிதம். இதன் தத்துவத்தை எம்பெரு மானே உணரவேணும்.

---

## ஸ்ரீராமாயணத்தில் ஓர் ஆராய்ச்சி

தசரத சக்ரவர்த்தி முதலானவர்கள் மிதிலைமா நகர்க்குச் சென்று திருக்குமாரர்கள் நால்வரின் திருமணத்தை நிறைவேற்றிக் கொண்டு திருவயோத்யைக்கு மீண்டு வந்து சேர்ந்த பின்பு நடந்த செய்தியைத் தெரிவிக்கின்ற பாலகாண்டத்தின் கடைசி ஸர்க்கத்தில் ஸ்ரீபரதாழ்வான் சத்ருக்நாழ்வானோடு கூட கேகய நாட்டிற்கு யுதாஜித்தென்னும் மாதுலரால் அழைத்துச் செல்லப்பட்டானென்பது தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. யுதாஜித்தென்பவர் மிதிலையில் நடந்த விவாஹத்திற்கே வந்திருந்ததாகவும் தெரிவிக்கப் பட்டிருக்கின்றது. மிதிலையி லிருந்து யாவரும் அயோத்யைக்கு வந்து சேர்ந்த பின் அதிக தாமதமில்லாமல் பரத சத்ருக் நர்கள் மாதுல க்ருஹத்திற்குச் சென்று விட்டார்களென்பது நன்றாகத் தெரிய வருகிறது.

* ஆப்ருச்ச்ய பிதரம் சூரோ ராமஞ்ச அக்லிஷ்ட காரிணம். மாதரூச் சாபி நரச்ரேஷ்ட: சத்ருக்னஸஹிதோ யயௌ * (77-25.) என்கிற ச்லோகத்தினால் தெரிவிக் கபபட்ட விஷயமே அயோத்யா காண்டத்தின் ஆரம்பத்திலும் கச்சதா மாதுல குலம் பரதேந ததாநக:, சத்ருக்னோ நித்யசத்ருக்னோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:* என்கிற முதல் ச்லோகத்தினால் அநுவாதரூபேண தெரிவிக்கப்பட்டுள்ளது. அடுத்த ச்லோகங்களில் கேகய நாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பரத சத்ருக்நர்கள் தந்தையான சக்ரவர்த்தியை அடிக்கடி ஸ்மரித்துக் கொண்டிருந்ததாகவும். தந்தையும் அவர்களை அடிக்கடி ஸ்மரித்துக் கொண்டிருந்ததாகவும், ஆனாலும் ஸ்ரீராமனிடத்தில் விசேஷமான அன்புகொண்டிருந்ததாக வும் சொல்லி, இருபது சுலோகங்களினால் ஸ்ரீராமபிரானுடைய அபரிமிதமான திருக்கல்யாண குணங்களை வருணித்து, அவனுக்கு இளவரசு பட்டங் கட்டத் தந்தை பாரித்ததும் சொல்லப் பட்டிருக்கின்றது.

அதன் பிறகு மஹாசபை கூட்டி ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை நிச்சயித்து இராமனுக் குக் கட்டளையிட்டது முதலான சரித்திரங்கள் ஜகத்ப்ரஸித்தமானவை. ஸ்ரீராமாயணத்தில் இந்த ஸந்தர்ப்பத்தை நோக்கும்போது. ஸீதா விவாஹமாகி அயோத்யை வந்து சேர்ந்த பின் சில நாள்களுக்குள்ளாகவே ஸ்ரீராமப்பட்டாபிஷேக ப்ரயத்நமும் வநவாஸமும் நேர்ந்த தாகக் கதையின் போக்கு தெரிய வருகிறது. ஆனால் உண்மை இங்ஙனமிருக்க ஔசித்ய மில்லை போல் காண்கிறது. அதனைச்சிறிது விவரித்துக் காட்டுவோம். மேல் ஆரண்யகாண் டத்தில் நாற்பத்தேழாவது ஸர்க்கத்தில் ராவணனுக்கும் ஸீதைக்கும் நிகழ்கின்ற ஸம்வாதத் தைக் கூறுமிடத்து "ஸமா: த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ; ததஸ்த்ரயோதசே வர்ஷே ராஜா அமந்த்ரயத ப்ரபு:, அபிஷேசயிதும் ராமம் ஸமேதோ ராஜமந்த்ரிபி:* என்று பிராட்டி கூறினதாக வால்மீகி மஹர்ஷியால் உரைக்கப்பட்டுள்ளது. திருக்கலியாணமாகித் திருவயோத்திக்கு வந்து சேர்ந்தபிறகு அவ்விடத்தில் பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஹர்ஷப்ரகர் ஷத்துடன் வாழ்ந்துகொண்டிருந்ததாகவும். பதின்மூன்றுமாண்டில் சக்ரவர்த்தி மகுடாபி ஷேக முயற்சியை மேற்கொண்டதாகவும் இங்கு ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே திருமணமாகி அயோத்யைக்கு வந்து சேர்ந்தவுடனே மகுடாபிஷேக முயற்சி நடை பெறவில்லையென்பதும் மாதுலக்ருஹம் சென்ற பரதாழ்வான் பன்னிரண்டாண்டு அங்கேயே வாஸஞ்செய்து கொண்டிருந்தானென்பதும் தேறி நிற்கிறது.

மாதுலக்ருஹத்திற்குச் சென்ற பரதாழ்வான் இரண்டொரு மாதமோ, ஐந்தாறு மாதமோ அவ்விடத்தில் வாழ்வது உசிதம். பன்னிரண்டாண்டு நெடுக அவ்விடத்திலேயே வாழ்ந்திருந்தானென்பதில் ஔசித்யமில்லையே. ஸ்ரீராம பக்தியே வடிவெடுத்த பரதாழ்வான் இராமனைப் பிரிந்து அத்தனை வருஷம் தரித்திருக்க வல்லவனோ? * தாமேவேக்ஷ்வாகுநாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு * என்று மேலே சொல்லுகிறபடி ஸ்ரீ பரதாழ்வானுடைய குணங்களில் மிகவும் ஆழங்காற்பட்டிருப்பவரான

பெருமாள் தாம் பரதனைப் பிரிந்து அத்தனை காலம் தரித்திருப்பரா? என்று சர்ச்சிக்க இட முண்டாகிறது.

இங்குச்சிலர் சொல்லுவதென்ன வென்றால், விவாஹமானவுடனே மாதுலக்ருஹம் சென்ற பரதாழ்வான் சிலநாட்களிலேயே திரும்பித் திருவயோத்திக்கு வந்துவிட்டானென்றும், மறுபடியும் பன்னிரண்டு வருடங்கள் கழித்து [மகுடாபிஷேக முயற்சிக்கு முன்னை] மாதுல க்ருஹத்திற்கு இரண்டாந்தடவையாகச் சென்றிருந்தானென்றும் சொல்லுகிறார்கள். உண்மை இங்ஙனேயிருந்தால் நன்கு பொருந்தி விடுகிறது. ஆனால் இப்படி நிர்வஹிப்பதற்கு ஸ்ரீராமாயணம் கைகொடுக்கவில்லை. வேறு ராமாயணங்களிலிருந்து இதற்கு ப்ரமாணம் கிடைக்கிறதாவென்று விவேகிகள் விமர்சிக்கவேணும்.

---

## இளைய பெருமாள் அஸத்யவாதியா?

சில மஹான்கள் தங்கள் காலக்ஷேப கோஷ்டியில் இளைய பெருமாளைப் பொய் சொன்னவராக ப்ரசாரம் செய்து வருகிறார்கள்: இது எதைக் கொண்டு? என்றால்; இளைய பெருமாள் திருத்தமையனாரை நோக்கிச் சொன்ன வார்த்தையில் "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று சொன்னார்; 'நான் எதையும் செய்வேன்' என்பது இதன் பொருள். நீர் சொன்ன படியெல்லாம் செய்து முடிப்பேன் என்பது இதன் தாற்பரியம். இப்படிச் சொன்னது ஸத்யமாயிருந்தால் 'லக்ஷ்மணா! நீ காட்டுக்கு வரவேண்டாம்' என்று திருத்தமையனார் இட்ட கட்டளையை நிறைவேற்றியிருக்கவேண்டும். அதை அவர் நிறைவேற்றவில்லை யென்பது சரித்திரத்தினால் ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது. இது மட்டுமேயன்று; பட்டாபிஷேக ஸமயத்தில் 'லக்ஷ்மணா! நீ இளவரசு முடி சூடிக்கொள்' என்று நியமித்தபோதும் * யதா ந ஸௌமித்ரி: ....யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம் * என்னும்படி அதற்கு இளையபெருமாள் இணங்கவேயில்லை. இப்படி அனேக ஸந்தர்ப்பங்கள் காணலாய், ஆகவே இதெல்லாம் * அஹம் ஸர்வம் கரிஷ்யாமிக்கு அடியோடு சேராது. சொன்னபடி செய்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து கொடுத்துவிட்டு அப்படிச் செய்யாத இளைய பெருமாள் எப்படி ஸத்யவாதியாக முடியும்? அஸத்யவாதியே யென்னத் தட்டில்லை—என்று நிரூபணம் செய்கிறார்கள்.

இது மிகவும் அபசாரமான வார்த்தை; ஸதாசார்ய ஸந்நிதானத்தில் படிந்து குனிந்து கேட்டவர்கள் இப்படி யொருகாலும் சொல்லார்கள். பெருமாளை நோக்கி * அஹம் ஸர்வம் கரிஷ்யாமி * என்று சொன்ன இளைய பெருமாளுக்கு 'நீர் சொன்னபடியெல்லாம் நான் கேட்கக் கடவேன்' என்பதா விவக்ஷிதம். தன்னையும் காட்டுக்குக் கூட்டிக்கொண்டு போக வேணுமென்று வேண்டிக்கொள்ளும் ப்ரகரணத்தில் (அயோ. ஸர். 31ல்) உள்ள ச்லோகமிது. தேவரீரும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடியேன் ஸகலவித கைங்கரியங்களையும் செய்யக் கடவேன் என்பதன்றோ இந்த ச்லோகத்திற்குப் பொருள். உடனிருந்து எல்லாவடிமைகளையும் செய்யக்கடவேனென்று சொன்னதற்கு விருத்தமாக இளைய பெருமாள் நடந்துகொண்டதுண்டாகில் அதை யெடுத்துக் காட்டவேணும். பெருமாளுடைய கட்டளையின்படி தான் அநுயாத்திரையை இழந்து விட்டால் அப்போதோ 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்ற வார்த்தை ஸத்யமாய் விடுமே? இப்படியும் ஒரு விபரீத க்ரஹணமுண்டா? இளைய பெருமாள்

* அஹம் ஸர்வம் கரிஷ்யாமி * என்று சொன்னபடியே செய்து நிறைவேற்றின பெருமையை யடைந்தவரேயல்லது அஸத்யம் சொன்ன அபக்க்யாதிக்கு ஆளானவரல்லர்.

உலகத்தில் ஒரு வ்யக்தியின் மீது குணங்களைச் சொல்வது போல் சில தோஷங்களைச் சொல்லுவதுமுண்டு. அந்த ரீதியில் இளைய பெருமாள் பக்கலிலே ஏதேனும் தோஷம் சொல்ல வேணுமானால் பாரதந்த்ர்ய பரிபாகமில்லாதவரென்று சொல்லலாம். பரதாழ்வானுடைய நிஷ்டையின் ஏற்றத்தை விளக்கும் ஸந்தர்ப்பத்தில் 'பெருமாள் சொன்னபடி கேட்டவர் பரதாழ்வான்; அங்ஙனல்லாதவர் இளைய பெருமாள்' என்று நம் பூர்வாசாரியர்களும் இதையருளிச் செய்திருப்பதுண்டு. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியான அவதாரிகையிலே இது காணலாம். இளையபெருமாள் நிர்ப்பந்தித்து அடிமை செய்தவரென்றும், அப்படியன்றிக்கே சேஷியுகந்த வடிமையே சேஷபூதனுக்குக் கர்த்தவ்ய மென்னுமிடத்தை யநுஷ்டித்தவர் பரதாழ்வானென்றும் இருவர்க்குமுள்ள வாசியை அங்கே விவரித்துள்ளார் பெரியவாச்சான் பிள்ளை.

இளைய பெருமாள் மீது குற்றம் சாட்டுவதானால் எவ்விதமான குற்றம் சாட்டலாமென்று பார்க்கவேணும். ஒரு சேவகன் தான் சொன்னபடி நடந்து கொள்ளவில்லை யென்றால் அது வேறு குற்றம்; ப்ரபு நியமித்தபடி நடந்துகொள்ளவில்லை யென்றால் அது வேறு குற்றம். 'கடைக்குப்போய் இன்னது வாங்கி வா' என்று ப்ரபுவினால் கட்டளையிடப்பெற்ற சேவகன் அது செய்திலனென்றால் 'ப்ரபுவின் வாக்கை மீறின ஸ்வதந்திரனிவன்' என்னப் பெறுவனே யொழிய. பொய் சொன்னவன் என்னப் பெறமாட்டான். சேவகன் தான் சொன்னபடி நடந்து கொள்ளாமற் போனால் அப்போது அவன் பொய்யனென்கிற குற்றத்திற்கு ஆளாவான். இளையபெருமாள் 'நான் படை வீட்டிலேயேயிருந்து மாதா பித்ரு சுச்ரூஷை செய்து போருகிறேன்' என்று சொல்லி வைத்திருந்து அது செய்யத் தவறியிருந்தானாகில் அப்போது அவனைப் பொய்யனென்னலாம். இது இல்லவேயில்லை. உடனிருந்து ஸர்வ கைங்கர்யங்களையும் பண்ணுகிறேனென்று சொல்லி, சொன்னதையே செய்து தலைக்கட்டின அவனுக்குப் பொய்யனென்கிற பட்டம் எப்படி ஏற்கும்.

* ந ஹி நிந்தாந்யாயத்தாலே சொன்னவித்தனை யென்று சொல்லுவதற்கும் இங்கு இடமில்லை. இடமிருந்தால் அதை யெடுத்து நிரூபிக்க முன்வரலாம். இளைய பெருமாள் கைங்கரியம் செய்யப் பாரித்தபடியே செய்து தலைக்கட்டினார்; நம்மாழ்வார் தம்முடைய பாரிப்பை மட்டும் திருப்புளியாழ்வாரடியிலிருந்து கொண்டு வெளியிட்டாரே யொழிய காயிகமான கைங்கரியம் சிறிதும் செய்திலராகையாலே ப்ரக்ருத விஷயத்தில் இளைய பெருமாளுக்கே ஏற்றம் பொருந்தும். * ஒழிவில் காலத்துக்கு அடுத்த திருவாய்மொழியான * புகழுநல்லொருவனுக்கு மணவாளமாமுனிகள் இட்டருளின திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்தில் "மகிழ்மாறன் எங்கு மடிமை செயவிச்சித்து வாசிகமாய், அங்கடிமை செய்தான் மொய்ம்பால்' என்றருளிச் செய்திருப்பது காண்க. இது எப்படியாயினும், இளைய பெருமாள் பொய் பேசுபவர் என்கிற உல்லேகம் ஸர்வாத்மநா நிராதார மென்றும் அநிபுணபணிதி யென்றும் கொள்ளக்கடவது.

---

## ஸந்தேஹ பரிஹாரம்

கயா க்ஷேத்ரத்தில் ச்ராத்தம் செய்து விஷ்ணுபாதத்திலும் அக்ஷயவடத்திலும் பிண்டப்ரதாநம் செய்து, ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் ப்ரஹ்மகபாலத்திலும் பிண்டப்ரதானம் செய்தவர்கள் அதன் பிறகு மாதா பிதாக்களுக்கு ப்ரத்யாப்திக ச்ராத்தம் செய்யவேண்டிய ஆவச்யகதையுண்டாவென்று பலர் ஸந்தேஹம் கேட்கிறார்கள். கயா மாஹாத்மியத்திலும் பதரீ மாஹாத்மியத்திலும் பிறகு ப்ரத்யாப்திக ச்ராத்தம் செய்தால் ப்ரத்யவாயமுண்டு என்று சொல்லப்பட்டிருப்பதாகச் சில வசனங்களையும் எழுதிக்கொண்டு வந்து 'ப்ரமாணகதி இப்படியிருக்கும்போது எப்படி ப்ரத்யாப்திக ச்ராத்தம் செய்யலாம்?" என்றும் கேட்கிறார்கள்.

இதைப்பற்றி அல்பஜ்ஞர்களான நாம் என்ன எழுத முடியும்? சிஷ்ட ச்ரேஷ்டர்களின் அநுஷ்டானம் எப்படியுள்ளது என்பதை மட்டுமே நாம் எடுத்துக் காட்ட முடியும். திருப்பதியில் மஹாவித்வத் ஸார்வபௌமராகவும் சிஷ்டாக்ரேஸரராகவும் ஜகத் விக்யாதராகவும் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி பல கால் உத்தரதேச யாத்திரை செய்தருளி கயாச்ராத்த ப்ரஹ்மகபால ச்ராத்தங்களைச் செய்தருளினவர். அந்த ஸ்வாமியின் அநுஷ்டானம் நமக்கு ஸாக்ஷாத்தாகத் தெரியும். அந்த மஹாஸ்வாமி ப்ரத்யாப்திக ச்ராத்தத்தை விட்டதில்லை. விடக்கூடாதென்று தம் அடி பணிந்து கேட்டவர்களுக்கு ஸாதித்துக் கொண்டுமிருந்தார். ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம். காதி. அனந்தாசார் ஸ்வாமியின் அநுஷ்டானமும் இங்ஙனே தானிருந்தது.

பார்வண ச்ராத்தமே பண்ண வேணுமா? ஸங்கல்ப ச்ராத்தம் பண்ணினால் போதுமா? என்று சிலர் கேட்கிறார்கள். கயா க்ஷேத்திரம் இன்ன திக்கிலுள்ள தென்றறியாதவர்களுங்கூட பெரும்பாலும் ஸங்கல்ப ச்ராத்தமே பண்ணிப் போரா நிற்க, இதற்கு நாம் என்ன விடை கூறவல்லோம்? ச்ராத்தத்தை விட்டதாக வல்லாமல் ஏதேனுமொரு படி செய்து தலைக் கட்டினால் போது மென்பதே நாம் சொல்லக்கூடியது.

---

## ஸம்ஸ்க்ருத நாவல்.

தமிழில் எண்ணிறந்த நாவல்கள் தோன்றியுள்ளன; தோன்றிக்கொண்டுமிருக்கின்றன. நாவல்களை வாசிப்பதில் பலருக்கு அபரிமிதமான குதூஹலம். ஊண் உறக்கம் முதலானவற்றையும் மறந்து இரவுபகலாக நாவல்களையே வாசித்துப் போது போக்குபவர்கள் எண்ணிறந்துள்ளார்கள். நாவல்கள் தமிழ் பாஷையில் மட்டுமேயன்று; பல பாஷைகளிலுமுண்டு. இதிஹாஸ புராணங்களிலுள்ள பகவத் கதைகளையும் பக்த கதைகளையும் விட்டிட்டு வீணான நாவல்களை வாசித்துப் பொழுதைப் பழுதாகக் கழிப்பது ஏதுக்கென்று பல பெரியோர்கள் சீறிப் பேசுவது முண்டு. "லோகோ பிந்நருசி:" ஆகையாலே யாருடைய ருசியை யார் தடுக்க முடியும்?

அடியேன் பல துறைகளிலும் நூல்கள் எழுதி வருவதைக் காணும் ஆப்தர்கள் பலர் 'சில நாவல்களும் எழுதலாகாதோ?' என்று சொல்வதுண்டு, அந்த வழியில் இதுகாறும் அடியேனுக்கு ருசி பிறந்ததில்லை. ஸம்ஸ்க்ருத பாஷையில் நாவல் நூல் தோன்றவில்லை யென்கிற குறைமட்டுமே அடியேனுக்கிருந்தது. காதம்பரீ வாஸவதத்தா என்று ப்ரஸித்தமாகவுள்ள ப்ராசீநமஹா ப்ரபந்தங்கள் சில நாவலென்றே கருதப்படவேண்டியவை. நாவலுக்கு வடமொழியில் 'கூவ்யாயிகா—ஆக்க்யாயிகா' என்று பெயர். இக்காலத்து ஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் ஸம்ஸ்க்ருத பாஷையில் நாவலெழுதுவதாக நமக்குத் தெரியவரவில்லை.

இப்போது அடியேன் வடநாட்டுத் திருப்பதி யாத்திரையில் இருந்து வருகிறேனென்பதைப் பலருமறிவர், புரீ ஜகன்னாதத்தில் ஒரு ஸம்ஸ்க்ருத பண்டிதரோடு பேசுகையில் அவர் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒரு நாவல் எழுதக் குதூஹல முண்டாக்கினர். அதை ஜகந்நாதனுடைய நியமனமாக வெண்ணி அன்றே அவ்விடத்தே "நந்தகிசோரகேஸரீ?" என்னும் பெயர் கொண்ட வொரு நாவலை எழுதத் தொடங்கி வழி முழுவதும் அவகாசமுள்ள போதெல்லாம் எழுதிக்கொண்டு வந்து 7—7—58 தேதியில் ஹரித்துவாரத்தில் இதை ஸமாப்தி செய்தேன். இது சிறிய நூலன்று; பெரிய நூலாகவே தலைக்கட்டிற்று. புல்ஸ்கேப் காகிதத்தில் நானூறு பக்கங்களுக்குமேல் எழுதப்பட்டுள்ளது. கதாநாயகனுக்கு நந்தகிசோர கேஸரி யென்று பெயரிடப்பட்டது.

இது தேவநாகராக்ஷரத்தில் அச்சிட ஏற்பாடு செய்யப்பட்டது. நமது வைதிக மநோஹராவில் முழுப் புத்தகமாக விரைவில் வெளிவரும்.

---

உத்தரவித்யாத்ராஜாமே மங்களகிரௌ ந்ருஸிம்ஹஹரே:
வராமே தா நிஷ்க்ருஷ்ட்ய விதம் தத்ஸம் நரஹரி நவாஹு வஜ்யத ॥ என்பதாம்.

இதன் பொருளாவது, வடநாட்டுத்திருப்பதிப் பவித்ரயாத்ராமார்க்கத்தில் மங்களகிரியில் அழகியசிங்கர் திருமுன்பேயிருந்து எழுதப்பட்டவிது அந்த நரஸிம்ஹ பகவானுடைய திருவுகிர் முனைபோன்று வெற்றிபெற்று விளங்குக வென்பதாம். அப்படியே விளங்குமென்பதில் ஐயமுண்டோவென்றும் பலமஹான்கள் தங்கள் ஆணயமெவ மூலமாகத் தெரிவிக்கலானார்கள். இந்த வியாஸம் அன்றுகிடைத்த அவகாசத்திற்கேற்ப அதிக விரிவின்றிக்கே யெழுதப்பெற்றதனுல் விவக்ஷிதங்களான ஆஸாமிகவிஷயங்கள் பல விடுபட்டன வென்கிற மனக்குறையிருந்தது. அக்குறை ஸ்ரீ ஜகந்நாதம் சேர்ந்தவுடனே [அங்கு விசேஷமான அவகாசம் கிடைத்ததனுல்] தீர்ந்ததாயிற்று. அதைப்பற்றி ஸ்ரீ ஜகந்நாத க்ஷேத்ர விஷயங்களெழுதுகையில் விஜ்ஞாபிப்பேன். மங்களகிரியிலிருந்து ஸ்ரீ ஜகந்நாதம் சேருகிறவரையில் அத்புதோபந்யாஸமாலை என்கிற [பதினொரு உபந்யாஸங்கள் கொண்ட] நூல் எழுதி முடிக்கப்பட்டது. அது சென்ற ஸ்ரீராமாநுஜனிதழில் வெளியிடப்பட்டிருப்பதை நண்பர்கள் வாசித்திருக்கிறார்கள்.

## 2. ஸிம்ஹாசலம்

விஜயவாடாவிலிருந்து 13—6—58 இரவு புறப்பட்டு மறுநாள் பகலில் ஸிம்ஹாசலம் சேர்ந்தோம். ஸிம்ஹாசலமென்றே ஸ்டேஷனிருந்தாலும் வால்டேரிலிறங்கி பஸ் மூலமாகச் செல்வது ஸௌகரியம். ஸிம்ஹாசலமென்பது ஏறக்குறைய ஆயிரம் படிக்கட்டுள்ள அதிரமணீய பர்வதோத்தமம். அர்ச்சிராதி மார்க்கம் என்று சொல்லக் கூடியது வழியின் ஸந்நிவேசம். இந்தத் திருமலையின் மீது ஸ்ரீ ஸிம்ஹாத்ரி நாதனுடைய ஸன்னிதி வெகு விஸ்தாரமாக அமைந்திருக்கின்றது. இவ்விடத் தெம்பெருமானுக்கு வருஷத்திற்கு லக்ஷம் ரூபாய்க்கு மேற்பட்ட வருமான மென்று சொல்லப்படுகிறது. அதற்குத் தக்கபடி விசேஷமான போகங்களைக் கண்டருளுகிறார். ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதிகாரிகள் பலர் இங்கு தினப்படியாக வந்து க்ரந்த பாராயணங்கள் செய்து தேவஸ்தான ஸன்மானம் பெறுகிறார்கள். தேசாந்தரிகளுக்கு வஸதி ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படுகிறது. இத்தலத்தெம்பெருமானுடைய திருமேனி ஸேவை வருஷத்தில் ஒருநாள் மட்டுமே [அக்ஷய த்ருதீயையன்று] பக்தர்களுக்கு ப்ராப்தமாகும். மற்ற நாட்களில் சந்தனக்காப்பினால் திருமேனி முழுதும் கவசமணியப் பெற்றுள்ளது. * தெழி குரலருவித் திருவேங்கடத்திற் போலவே இங்கும் அருவிநீர் வீழ்ச்சி விசேஷமாக விருப்பதனுல் தீர்த்த ஸௌகரியத்திற்குக் குறையில்லை. இத்தலத்தில், தேவஸ்தான கார்யாலயத்தில் நரஸிம்ஹாவதார ப்ரபாவம் பற்றித் தெலுங்குபாஷையுபந்யாஸம் நடைபெற்றது. தேவஸ்தானத்தின் சார்பாக விசேஷ ஸத்காரம் செய்யப்பட்டது.

## 3. ஸ்ரீ கூர்மம்

ஸிம்ஹாசலத்திலிருந்து ஸ்ரீகூர்மக்ஷேத்ரம் சேர்ந்தோம். சீகாகுலம் ரோட் என்கிற ஸ்டேஷனில் இறங்கி ஸ்ரீகாகுலம் வழியாய் பதினெட்டாவது மைலில் பஸ் மார்க்கமாக ஸ்ரீகூர்மம் அடையத்தக்கது. இங்கு அழகிய அக்ரஹாரமுண்டு. ஸ்ரீகூர்ம நாதனுடைய ஸன்னிதி விசாலமாகவும் அதிரமணீயமாகவும் அமைந்துள்ளது. ஸன்னிதியைச் சார்ந்து விளங்கும் ஏரிபோன்ற தடாகம் கண்டகாட்சியிலேயே ஸகல தாபங்களையும் ஆற்றக்கூடியது.

இத்தலத்தில் எம்பெருமானுர் சில கால மெழுந்தருளியிருந்து பரிஷ்காரங்கள் செய்தருளின தாகச் சொல்லப்படுகிறது. இஃது உண்மையான தென்றே நம்புவதற்கு இடமுள்ளது. நித்யாராதந நித்யோத்ஸவாதிகள் விலக்ஷண வைகரியாக நடந்து வருகின்றன. சீகாகுலம் ரோட் என்னுமிடத்திற்கு அமதாலவலஸா என்று பெயர். இங்கு ஸ்டேஷனுக்கு அதி ஸமீபத்தில் ஸ்ரீ வேங்கடரமண ஸ்வாமி ஸன்னிதி யொன்று நவீன காலத்தில் ஏற்பட்டிருக் கிறது. மிகவுமழகாக அமைந்திருக்கு மிந்த ஸன்னிதியில் ஸௌகரியமாகச் சிலர் தங்கி யிருக்கலாம். தீர்த்த வஸதி நன்ருகவுண்டு.

## 4. ஸ்ரீஜகந்நாதம்.

ஸ்ரீ கூர்மத்திலிருந்து ஸ்ரீஜகந்நாதம் வந்து சேர்ந்தோம். வடநாட்டினர் இத்தலத்தை புரீ என்றும் ஸ்ரீஜகதீசபுரீயென்றுமே வழங்குவர்கள். நீலாத்ரி யென்பது புராண ப்ரஸித்த மான பெயர். இத்தலத்தின் மாஹாத்மியம் அப்ரமேயமானது. இங்கு விமானத்தின் நுனியில் விளங்குவதொரு சக்ரத்திற்குப் பதிதபாவநசக்ரமென்று பெயர். அதை ஸேவிக்கப் பெறுமவர்கள் ஸகல பாதகங்களினின்றும் விடுபடுவர்களென்பது மெய்ம்மைப் பெரு வார்த்தை. இங்குப் புண்ய தீர்த்த விசேஷங்கள் நாற்றிசையிலும் விளங்குகின்றன. கடலும் இவ்விடத்திற்கு அணித்தாகவுள்ளது. இங்கு ஸ்ரீ வைஷ்ணவமடங்கள் 30, 40 க்குமேல் விளங்குவன. அவற்றுள் எமார்மட மென்கிற ராஜகோபாலமடம், உத்தரபார்ச்வ மடம், தக்ஷிணபார்ச்வமடம், த்ரிமாளீமடம், ஜீயர் ஸ்வாமி மடம், ஸமாதிமடம், ஆசார்யமடம், ஸம்பத் குமாரமடம் என்பவை மிக ப்ரஸித்தமானவை. தேசாந்தரி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தங்குமிடமளிப்பவை. இவற்றுள் எமார்மட மென்கிற ராஜகோபாலமடம் ஸந்நிதி வாசலில் இருப்பதாலும் மிக மிக விசாலமாதலாலும் இம்மடத்து மஹந்துவின் ஸௌஜந்ய ஸௌஹா ர்த்தாதிசயத்தினலும் இதில் இரண்டு நாள் தங்கியிருந்தோம். இவ்விடத்தில் ரதோத்ஸவ மென்பது ஆனிமாதத்தில் நடைபெறும் விசேஷத்திருநாள். பலராமன் கண்ணன் ஸுபத்ரை என்கிற மூன்று திருமூர்த்திகளும் மூன்று பெரிய திருத்தேர்களில் எழுந்தருளியிருந்து மிக விசாலமான திருவீதியில் மஹோத்ஸவம் கண்டருளு மழகு இத்தலத்திற்கு ஏற்றமானது. எமக்கு இங்கு இவ்வுத்ஸவஸேவை யாத்ருச்சிகமாக ப்ராப்தமாயிற்று. கீழ் மங்களகிரிச் செய்திகளெழுதுகையில்—ஒரு மனக்குறையிருந்ததாகவும் அது ஸ்ரீஜகந்நாதத்தில் தீர்ந்ததாக வும் எழுதியிருந்தேன். தயிரரவப்பாடத்திருத்த மறுப்பு என்னும் வியாஸத்தை இத்தலத்தில் ஆசை தீர விரிவாக எழுதினேன். இது அப்போதே அம்ருதலஹரியில் வெளி வந்து ரஸிகர் களால் அநுபவிக்கப்பட்டிருந்தாலும் அந்தப் பத்ரிகை கிடைக்கப் பெருதவர்களும் அநுப விக்கப் பாங்காக இப்போது ஸ்ரீராமாநுஜனிலும் வெளியாகின்றது.

புருஷோத்தம க்ஷேத்ர மென்றும் வழங்கப்படுமித்தலத்தில் ஸம்ஸ்க்ருத விச்வ வித்யாலய மொன்று பிரபலமாய் விளங்குகின்றது. ஸம்ஸ்க்ருத ப்ரவீணர்களான வித்வான் களும் வித்யார்த்திகளும் பலர் இவ்விடத்தில் பரிசயமாணர்கள். ஸௌவாசிதர்களும் சிலருண்டு. இவர்களோடு வார்த்தையாடுகையில் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒரு நாவல் நூல் எழுதவேணு மென்கிற ருசிருசியுண்டாயிற்று. அதனை அவ்விடத்திலேயே எழுதத் தொடங் கினேன். ஙந்திகிசோரகேஸரீ என்று அதற்குப் பெயரிடப்பட்டது. அப்பெயருள்ள வொரு வனைக் கதாநாயகனுக வைத்து இந்த ஆக்க்யாயிகை எழுதப்பட்டது. 20—6—58 ல் எழுதத் தொடங்கப்பட்டவிது தினப்படி இரவும் பகலு மெழுதப்பட்டுவந்து 6-7-58 ல் ஹரித்வாரம் சேர்ந்தவன்று ஸமாப்தி செய்யப்பட்டது. நானூறுபக்கம் எழுதப்பெற்றவிது அச்சிட

அனுப்பப்பட்டுவிட்டது. க்ரமேண அச்சாகி முடிவுபெற்று நமது வைதிகமநோஹரா மூலமாய் முழுப்புத்தகமாக வெளிவரும்.

## 5. கல்கத்தா நகரம்

ஸ்ரீஜகன்னாதத்திலிருந்து நேராகக் கல்கத்தா நகரம் வந்து சேர்ந்தோம். க்ஷேத்ர தீர்த்த யாத்ரா ரஸிகர்களுக்கு இந்நகரில் கர்த்தவ்ய மொன்று மில்லையாகிலும், தர்சநீயமான மஹாநகரமாயிருப்பதாலும், இதைக் கடந்தே மேல் யாத்திரை செல்ல வேண்டியிருப்பதனாலும் இங்கே இரண்டு நாள் தங்கியிருக்க நேர்ந்தது. இங்கே ஸ்டேஷன் ஸமீபத்தில் கங்கை பெருகுகின்றதெனினும் அது வைதிகர்கள் உகக்கும் சுத்தகங்கை யென்னப் பொருத்தமில்லை. இந்த நதியின் கரைக்கு (ஜகன்னாதகாட்) என்று பெயர். இங்கு பலதேவஜீ மந்திரமென்கிற கோவில் நூதன பரிஷ்காரங்கள் செய்யப்பட்டு வாஸயோக்யமாக விளங்குகின்றது. ஆனாலும் நாம் இங்கே தங்காமல் 5, 6 மைலுக்கு அப்பாலுள்ள மிக விசாலமான லக்ஷ்மீ நாராயண மந்திரத்தில் தங்கினோம். இந்த ஸன்னிதி ஸமீப காலத்தில் ஏற்பட்டது. ஸ்ரீவைஷ்ணவ யாத்ரிகள் மிகவும் ஸௌகரியமாகத் தங்கி யிருப்பதற்கு உரியது. இவ்விடத்தில் லக்ஷ்மீ நாராயணன் வைபவமென்பதுபற்றி ஹிந்தியில் சிறியதோர் உபந்யாஸம் நடத்தப்பட்டது.

## 6. கயா க்ஷேத்ரம்

கல்கத்தாவிலிருந்து கயைக்கு வந்து சேர்ந்தோம். வடதேச யாத்திரை செய்பவர்கள் இவ்விடத்தையும் பதரிகாச்ரமத்தையுமே முக்கிய லக்ஷ்யமாகக் கொள்ளுவார்களென்பதைப்பற்றி நாம் எழுதவேணுமோ? கயாச்ராத்தத்தை இங்கு நடத்தி வைக்கத் தென்னாட்டுப் புரோஹிதர்கள் விசேஷமாக இங்குக் குடிகொண்டிருக்கின்றனர். அவர்களே ஸ்தல வஸதிகள் செய்து கொடுக்கிறார்கள். தர்மசாலைகளுமுண்டு. பல்குநீ நதிக்கரையில் ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் காதி, அனந்தாசார்ய ஸ்வாமியினுடைய ஸ்தானம் [ஸ்ரீ ராமாநுஜ மடம்] மிகவும் ஸௌகரியமாக அமைந்திருக்கின்றது. நதிக்கரையில் கயாதீசனுடைய ஸந்நிதி விசாலமாகவும் விளங்குகின்றது. இங்கேதான் விஷ்ணுபாதமென்பது. இந்த பவித்ர யாத்ரையில் கலந்துகொண்ட பலர் இங்கே ச்ராத்தத்தை நடத்தி க்ருத க்ருத்யரானார்கள். இவ்விடத்தில் ராஜ வனவிஹாரீ ப்ரஸாத பூபாலர் என்கிற ஆஸ்திக ச்ரேஷ்டரான வொரு ஜமீன்தாரி வந்திருந்து வைதிக் கோஷ்டியைஸேவித்துமகிழ்ந்தார்.

## 7. காசி க்ஷேத்ரம்

கயையிலிருந்து காசிக்கு வந்து சேர்ந்தோம். இந்நகரின் பெருமையைப் பற்றியோ இங்குள்ள பட்டு பீதாம்பரக் கடைகளின் சிறப்பைப் பற்றியோ அபூர்வமாக நாம் தெரிவிக்கவேண்டியதுண்டோ? எல்லாவகைச் சிறப்புகளிலும் நிகரற்று விளங்கு மிந்நகரில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் அருமைப்பட்டிருக்கிறார்களென்பதொன்றே குறை. இதர மதஸ்தர்களில் பரிகணித வித்வான்களென்று மதிக்கக் கூடியவர்கள் எண்ணிறந்துள்ளார்கள். வித்யாலயங்களும் அபரிமிதங்கள். பதினான்கு வித்யைகளுக்கும் (அல்லது) அறுபத்து நான்கு கலைகளுக்கும் ப்ரபல ப்ரசாரம் காணவேணுமானால் அது இம் மஹாநகரமொன்றில்தான் காணலாகும். கங்கை ஸுப்ரஸந்நமாகப் பெருகிக்கொண்டிருக்கிறது.

யாத்ரிகள் தங்குவதற்கு கங்கைக் கரையிலேயே அனேக ஸ்தானங்களுண்டு. நாகபூர் போஸலாகாட்டில் போஸலா மந்திர மென்னுமிடம் ஸர்வ ப்ரகாரத்தாலும் ரமணீயமானது. இவ்விடத்தில் தங்கியிருந்தோம். இந்நகரில் இருபது வருஷகாலமாக விசிஷ்டாத்வைத வேதாந்தத்தின் அபிவிருத்திக்காக ஸ்ரீ ராமாநுஜ வித்யாலயமென்னும் பெயரால் பெரிய பாடசாலை யொன்று நிறுவப்பட்டு நடைபெற்று வரும் விஷயம் ப்ரஸித்தமானதே.

## 8. ப்ரயாகக்ஷேத்ரம்

காசியிலிருந்து ப்ரயாகக்ஷேத்ரம் வந்தோம். இவ்விடத்தில் த்ரிவேணீ ஸ்நானம் விசேஷமென்பது ஜகத் ப்ரஸித்தம். "கங்காயமுநயோர் மத்யே யத்ர குப்தா ஸரஸ்வதீ" என்கிற ப்ரயாகமாஹாத்மிய வசனத்தின்படி கங்கையுள் யமுனையும் ஸரஸ்வதியும் கூடுமிட மாதலால் த்ரிவேணீ ஸங்கம மெனப்படுகிறது. கங்கா யமுனைகளின் சேர்க்கை ப்ரத்யக்ஷ மாகத் தெரிகிறது. ஸரஸ்வதி மட்டும் குப்தவாஹிநி. வடநாட்டில் இந்த ஸ்தலத்திற்கு விசேஷ மாஹாத்மியம் சொல்லப்படுகிறது. பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமமும் இங்குள்ளது. தாராகஞ்ஜ் என்னுமிடமே இவ்விடத்தில் கங்கைக்கு ஸந்நிஹிதமாதலால் இங்கே தங்கினோம். இங்கு த்ரிதண்டி மடம் என்னுமிடம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் புகலிடம். தர்ம சாலைகளும் பலவுண்டு. பரமார்த்த பூஷண, கோவிந்தாசாரி யென்பவர் ஸ்ரீ வைஷ்ணவர்களின் வஸதிக்காக மிக விசாலமான மந்திரமொன்று இங்கே அமைத்திருக்கிறார். இங்கே சுகமாகத் தங்கினோம். பெரியாழ்வார் வடக்குத் திருவீதிப் பிள்ளைகளின் திருவவதார மஹோத்ஸவாநுபவம் இங்கு ப்ராப்தமாகவே அதைச் சிறப்பாகக் கொண்டாடினோம்.

## 9. சித்ரகூடம்

அடுத்தபடியாக சித்ரகூடக்ஷேத்ரம் வந்துசேர்ந்தோம். சுபகச் சித்ரகூடோ ஸௌ கிரிராஜோபமோ கிரி:, யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவநந்தநே" என்று ஸ்ரீராமாயண ப்ரஸித்தமான அதிசயம் இன்னமும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம் போலே யிராநின்றது. இவ் விடத்து ஸந்நிவேசம் பரமபாவநம், பரமரமணீயம் என்னுமத்தனை. "ரமணீயம் ப்ரஸந் நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா" என்றதற்கு முக்க்ய லக்ஷ்யமாக மந்தாகிநிப்ரவஹிக்குமழகும், ப்ரதக்ஷிணார்ஹமாகப் பர்வதராஜம் ப்ரகாசிக்குமழகும், கரையிலே ஸுகவாஸ யோக்யமாக தர்மசாலைகள் திகழுமழகும் மிகமிக ஆகர்ஷகமாயிருந்தன. இவ்விடத்தில் எத்தனை நாள் வஸித்தாலும் த்ருப்தியே பிறவாது. எமக்கு இரண்டுநாளே யிருக்க ப்ராப்தமாயிற்று. இங்கு ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவவதார மஹோத்ஸவம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

## 10. திருவயோத்யை

சித்ரகூடத்திலிருந்து திருவயோத்யைக்கு வந்து சேர்ந்தோம். ஸப்த புண்யபுரிகளைப் பரிகணனை செய்யும்போது "அயோத்யா மதுரா மாயா" என்று இத்தலமேயன்றோ முற்பட் டிருக்கின்றது. ஸ்ரீ வைகுண்டத்தின் ஒரு கண்டமே மண்ணுலகில் இந்நகராக வந்து தோன் றியதாய்ச் சொல்லப்படுமதில் அதிவாத சங்கையே யில்லை. இங்கு அநுபாவ்ய ஸ்தலங்க ளாக அநேக இடங்கள் காட்டப்படுகின்றன. 'த்ரேதாயுகமெங்கே! கலியுகமெங்கே!' என்று சிலர் சொல்ல நேர்ந்தாலும், அந்தந்த ஸ்தல விசேஷங்களைக் காணும்போது ஆஸ்திகர்களுக்கு மஹத்தான ப்ரதிபத்தியே உண்டாகிறது. ஸந்தத ப்ரவாஹிநியான ஸரயூநதியின் கரையிலே

ஸத்குரு ஸதன மென்னுமிடத்தில் வெகு ஸௌகரியமாகத் தங்கியிருந்தோம். கீர்த்தி மூர்த்தி யான ஸ்ரீமத் யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமியும் அவருடைய தேவியாரும் இத் தலத்தில் விலக்ஷணமாக அமைத்திருக்கின்ற சக்ரவர்த்தித் திருமகனுர் ஸன்னிதி தென்னுட்டி னர்க்குப் புகலிடமாகவுள்ளது. இந்த ஸன்னிதிக்கு அம்மாஜீ மந்திரம் என்றே ப்ரஸித்தி. மஹா ப்ரபுக்கள் மனம் வைத்தால் இந்த ஸன்னிதியை விசேஷமாக அபிவிருத்தி செய்விக்க லாம். ஸ்தல விஸ்தாரமிருப்பதால் இன்னமும் கட்டிடங்கள் அமையவேணுமென்றும், தேசாந்தரிகளுக்கு வஸதி ஸௌகர்யங்கள் அதிசயிக்கவேணுமென்றும் ஆசம்ஸித்தோம்.

## 11. கான்பூர்

திருவயோத்யையிலிருந்து கர்ணபுரி யென்னுமிவ்விடம் வந்து சேர்ந்தோம். இது மிகப்பெரிய நகரம். சுத்த கங்கையில் குடைந்தாடவே இவ்விடம் வந்தோம். இவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவ மந்திரங்கள் பலவுள்ளன. அவற்றுள் ப்ரயாகநாராயண மந்திரம் மிகப்பெரிது. கங்கைக்குச் சிறிது சமீபத்திலுள்ளது. இந்த மந்திரம் மஹாதநிகச்ரேஷ்டரான ஸ்ரீவைஷ்ண வோத்தமர்களால் பரிபாலிக்கப்பட்டு வருவதால் ஸ்ரீ வைஷ்ணவ யாத்ரிகளுக்கு விசேஷித்து ஆதரவு அளிக்கப்படுகிறதிங்கு. ஸ்டேஷன் சமீபத்தில், பண்டித ஹரிநாராயண ஸ்வாமியின் மந்திரமும் வாஸயோக்யமானதே. அது மிகச்சிறியது.

## 12. நைமிசாரண்யம்

கான்பூரிலிருந்து (பாலாமு ஜங்ஷன் வழியாக) நைமிசாரணியம் வந்து சேர்ந்தோம். இந்த க்ஷேத்ரத்தின் மாஹாத்மியம் அபரிமிதமாகச் சொல்லப்படுகிறது. நான்முகக்கடவுள் பகவானை ஸாக்ஷாத்கரிக்க நெடுங்காலம் தவம்புரிய, அரண்யரூபியாக எம்பெருமான் ஸேவை ஸாதித்ததாகவும், இதில் த்ருப்தி பெறுமல் மறுபடியும் தவம்புரிய தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்ததாகவும் சொல்லப்படுகிறது. தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்தவிடம் புஷ்கரமென் றும், அரண்யரூபியாக ஸேவை ஸாதித்த விடம் நைமிசாரணியமென்றும் ப்ரஸித்தமானது. இவ்வரண்யத்திலேயே பல மஹர்ஷிகள் நெடுங்காலம் வஸித்துப் பல புராணங்களை இயற் றினதாகத் தெரியவருகிறது. இங்கே கோமதீ நதி ப்ரவஹிக்கின்றது. இத்தலத்திற்குப் பதிகம் பாடியருளின திருமங்கை யாழ்வார் பாசுரந்தோறும் "நைமிசாரணியத்துளெந் தாய்!" என்று பாடியிருக்கையாலே இங்கே ஒரு ஸன்னிதியிருப்பது போலவும் அந்த ஸன் னிதியிலுள்ள அர்ச்சா மூர்த்தியையே ஆழ்வார் மங்களாசாஸனம் செய்திருப்பது போலவும் பலர் நினைப்பதுண்டு. உண்மை அப்படியில்லை. அரண்ய ரூபியான பகவானையே 'நைமிசா ரணியத்துளெந்தாய்' என்று விளித்துப் பாடினபடி. ஸமீபகாலத்தில் இவ்விடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை ஸ்வாமி திருவடி ஸம்பந்திகளான உத்தராதி வைஷ்ணவர்களால் ஒரு சிறிய ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கிறது. வசதி ஸௌகரியமுண்டு. வேறு தர்மசாலைகளுமுண்டு. சென்ற கார்த்திகை மாஸத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. அஹோ பிலமடாதிபதிகளான ஸ்ரீமத்தேவனார்விளாகம் ஸ்வாமி இந்த நைமிசாரண்யத்திலேயே திரு நாட்டுக்கெழுந்தருள நேர்ந்ததென்பது உலகமறிந்ததே. அந்த மஹாஸ்வாமியின் நீடூழி ஞாபகசின்னமாக இவ்விடத்தில் அஹோபில மடத்தின் சாகையென்னலாம்படியான ஒரு ஆச்ரமம் வெகு ரமணீயமாகவும் பரமபவித்ரமாகவும் அமைந்துள்ளது. இவ்விடத்தில் தென் னுட்டு ஸ்வாமியொருவர் திருவாராதனம் செய்துகொண்டு அதிதி ஸத்கார நிஷ்ணுதராய்

விளங்குகின்றார். அடியேன் சில ஆப்தர்களுடன் இரண்டு நாள் இவ்வாச்ரமத்தையே புக லிடமாகக் கொண்டிருந்து மகிழ்ந்தேன். இத்தலம் மிகவும் விஸ்தாரமான அரண்யம். அங் கெல்லாம் ஸஞ்சரித்து வருவதுதான் நைமிசாரண்ய ஸேவை யெனப்படும். யதாசக்தி கோமதீ நதி தீரம் வரையில் ஸஞ்சரித்து வந்தோம். இவ்விடத்தில் யாத்ரிகளின் வேண்டு கோளுக்கிணங்கி நைமிசாரணியப் பதிகத்தின் ஸாராம்சம் தமிழில் உபந்யஸிக்கப்பட்டது.

## 13. ஹரித்வாரம்

நைமிசாரணியத்திலிருந்து ஹரித்வாரம் வந்து சேர்ந்தோம். ஸப்த புண்யபுரிகளைக் கணக்கிடுகின்ற "அயோத்யா மதுரா மாயா" இத்யாதி ச்லோகத்தில் 'மாயா' என்றது ஹரித்வாரத்தையே யென்பர். ஹரித்வார ஸமீபத்தில் மாயா என்று தனியே யொரு க்ஷேத்ரமுள தென்பாருமுளர். இத்தலம் நாளடைவில் வெகு ரமணீயமான நகரமாய்விட்ட தென்கிறார்கள். உண்மையில் வடநாட்டில் இவ்வளவு ரமணீயமும் பாவனமுமான க்ஷேத் திரம் வேறில்லை யென்று சொல்லலாம். ஒரு நாளும் வற்றாத ப்ரவாஹமுடைய கங்கை இங்கே நிர்மலமாகப் பெருகுகின்றது. அதன் கரையிலே தேவேந்திர பவனம் போன்ற பல மஹாபவனங்கள் வரிசையாக அமைக்கப்பட்டிருக்கின்றன. வேறு பல வீதிகளும் மாட மாளிகைகளும் மலிந்து விளங்குகின்றன. சென்னை உப்பட்டூர் ஆழ்வார் செட்டியாருடைய மிகப் பெரிய தர்மசாலை 'மதராஸீ தர்மசாலை' என்று வழங்கப்படுகிறது. தென்னாட் டினர்க்குப் பெரும்பாலும் இங்கே வஸதி ஸௌகரியமுள்ளது. இதனருகிலுள்ள பிர்லா ஹவுஸ் என்னும் மிக விசாலமான ஸுந்தர மந்திரத்தில் (அல்லது) ரம்யமான ஹர்ம்யத்தில் நாம் தங்கியிருப்பது வழக்கம். இந்த விசை இதைக் காட்டிலும் மிக ரமணீயமான வேறொரு பவனத்தில் தங்கியிருந்தோம். யாத்ரையில் அந்வயித்திருந்தவர்களில் அநேகர் பதரிகாச்ரமம் ஸேவிக்கச் சென்றார்கள். அவர்கள் 15 நாட்களில் ஸுகமாகச் சென்று ஸேவித்துத் திரும்பினார்கள்.

---

இந்த யாத்திரையில் அந்வயித்த ஸ்ரீவைஷ்ண ஸ்வாமிகளின் திருநாமங்களை இதன்கீழ் நிர்தேசிக்கிறேன்.

1 தி. அ. ஸம்பத்குமாராசாரியர் (ஸகுடும்பம்)
2 கோவை வேதவ்யாஸபட்டர் ஸ்வாமி
3 ஆழ்வார்திருநகரி இளையவில்லி சடகோபா சாரியர் ஸ்வாமி
4 தேரழுந்தூர் சௌரிராஜன்
5 அகரம் கண்ணமாசாரியரென்கிற ராகவா சாரியர்
6 பிள்ளைலோகம் வரதாசாரியர்
7 ஸ்ரீபெரும்பூதூர் ஸுந்தராசாரியர்
8 கோ. க. அ. ரங்கராஜாசார்யர் (காஞ்சீ)
9 ஏத்தக்குடி ஸ்ரீநிவாஸாசாரியர்
10 அந்தர்வேதிபாளையம் ஈயுண்ணி சிங்கராசாரியர்
11 திருச்சி வேங்கடாசாரியர்
12 தென்திருப்பேரை தீக்ஷப்பையங்கார்
13 நெல்லூர் சக்ரவர்த்தி வேங்கடாசாரியர்
14 குமாரவாடி வரதாசாரியர்
15-18 பரிசாரகர்கள் நால்வர் (ஆழ்வார்திருநகரி ப்ராந்தம்)

## தம்பதிகளாக வந்த ஸ்ரீ வைஷ்ணவஸ்வாமிகள்.

**19, 20** கன்பாடி பார்த்தசாரதிஐயங்கார்
**21, 22** S. T. ஸ்ரீனிவாஸய்யங்கார், (ரிடையர்ட் போலீஸ் டிப்டி ஸூபரேண்டேண்டண்டு)
**23, 24** M. S. திருமலை ஐயங்கார் (சேலம்)
**25, 26** T. ராமாநுஜய்யங்கார் (சேரங்குளம்)
**27, 28** B. A. பாஷயமையங்கார், தி. நகர்
**29, 30** தி. அ. சதாபிஷேகமையங்கார், கோயில்
**31, 32** A. K. வீரராகவாசாரியர் சேத்துப்பட்டு
**33, 34** கல்யாணபுரம் R. ஸௌந்தரராஜயங்கார்
**35, 36** மன்னார்குடி ரே. ராமஸ்வாமி தீக்ஷிதர்
**37, 38** மன்னார்குடி R. ஸ்ரீநிவாஸய்யங்கார்
**39, 40** S. கோவிந்தய்யங்கார், மதுரை.
**41, 42** அகரம் பத்தங்கி ஸ்ரீனிவாஸாசாரியர்
**43, 44** A. வெங்கடாசாரியர், திருச்சி.
**45, 46** திருவல்லிக்கேணி S. ரங்கசாமிஐயங்கார்
**47, 48** கோந்தமூர் ஸ்ரீனிவாஸய்யங்கார், திருவல்லிக்கேணி

## ஸ்ரீ வைஷ்ணவ ஸ்த்ரீமணிகள்

**49** கோ. க. அ. சூடம்மாள் (காஞ்சீ)
**50** தி. அ. குப்பம்மாள் ,,
**51** பரவஸ்து சீனம்மாள் (கிருஷ்ணா ஜில்லா)
**52** காஞ்சீபுரம் செல்லம்மாள்
**53** திருவல்லிக்கேணி திருமலையம்மாள்
**54** ,, குமுதம்மாள்
**55** சென்னை லக்ஷ்மம்மாள்
**56** தி. நகர் வேங்கடம்மாள்
**57** ஸஹபுரம் ரங்கநாயகம்மாள்
**58—60** திருக்குறுங்குடியம்மாக்கள் மூவர்
**61** தெக்களூர் செங்கமலம்மா
**62** ஆழ்வார்திருநகரி சடகோபம்மா
**63, 64** திருவிந்தளூரம்மாக்கள் இருவர்
**65—68** உத்தரமேரூரம்மாக்கள் நால்வர்
**69—71** ஸ்ரீரங்கம் அம்மாக்கள் மூவர்
**72** மன்னார்குடியம்மா

## பக்த பாகவதர்கள்.

**73** சென்னை G. ரங்கய்ய நாயுடு
**74** ,, P. R. பக்தவத்ஸல நாயுடு
**75** கோவை K. வெங்கடசாமி நாயுடுகாரு
**76** ,, P. N. R. நாராயணஸாமியவர்கள்
**77** ,, திருவேங்கட ராமாநுஜ பாகவதர்
**78** ,, அக்கய்ய நாயுடு
**79** ,, ரத்னசாமி செட்டியார்
**80** ,, பேரய்ய நாயுடு
**81** ,, கோவிந்தஸாமி நாயுடு
**82** சோபனபுரம் ராமசாமி முதலியார்
**83** பூலாம்பாடி ராமசாமி ரெட்டியார்
**84** திருப்பத்தூர் ராமசாமி நாயுடு
**85** கோதாவரீதீரம் ருத்ரராஜு நரஸிம்ஹராஜு
**86** ,, ரங்கராஜு
**87** வாடவல்லி வீரராகவதாஸு
**88** அடபால ராமக்ருஷ்ணய்ய
**89–110** பாகவத ஆண்டாள் கோஷ்டியார்.

## யாத்திரையின் இடையில் திரும்பிச்சென்றவர்களும் இடையில் கூடினவர்களும்.

(லக்கம்)
**8** ஜயபூரிலிருந்து திரும்பினார்.
**45, 46** ஷை
**9, 37, 38** பதரியாத்திரை முடிந்ததும் திரும்பினார்கள்.
**13** கான்பூரிலிருந்து திரும்பினார்.
**19, 20** புஷ்கரத்திலிருந்து திரும்பினார்.
**47, 48** புஷ்கரத்திலிருந்து கூடினார்.
**74, 82** டில்லியிலிருந்து திரும்பினார்கள்.

இவர்களில், 1, 2, 7 லக்கமிடப் பெற்றவர்களும் அடியேனும் தவிர மற்றவர்களெல்லாரும் வதரி சென்று வணங்கி வந்தார்கள். அடியேன் ஸ்வகீயர்களுடன் இரண்டொரு நாள் ஹ்ருஷீகேசமும் லக்ஷ்மண ஜூலாவும் சென்றிருந்து, ஹ்ருஷீகேசத்தில் பரமாப்தரான

ஸ்ரீ சிவானந்த யோகிகளோடு அளவளாவி (8—7—58 இரவில்) அவர்களுடைய நித்ய ஸத்ஸங்க ஸதஸ்ஸில் ஹ்ருஷீகேசனுடைய ப்ரபாவத்தைப்பற்றியும் வேதாந்த ஸித்தமான ஆனந்தத்தைப்பற்றியும் அவர்களது அபேக்ஷைக்கிணங்கி உபந்யஸிக்க ப்ராப்தமாயிற்று. பிறகு அவர்கள் நெடு நாளாக எமக்கும் தமக்குமுள்ள ப்ரேமவிசேஷத்தைப்பற்றி ஆங்கிலத்தில் நீண்டதோர் சொற்பொழிவு நடத்தி ப்ரேம பரீவாஹரூபமான ஸத்காரமும் செய்தார்கள். அத்தலத்தில் அவர்களுடைய பெருமை தினேதினே ஓங்கி வளர்ந்து வருவது குறிப்பிடத்தக்கது.

வதரிவணங்கப் போகிறவர்கள் ஹ்ருஷீகேசத்திலிருந்தே பஸ் மார்க்கமாகப் புறப்பட வேண்டியவர்களாதலால் 9—7—58 காலையில் அவர்களையெல்லாம் பயணப்படுத்திவிட்டு ஹரித்வாரம் வந்து சேர்ந்து 26—7—58 வரை அவ்விடத்திலேயே விரஜாதீரத்திற்காட்டிலும் மிக வினிதாக வாழ்ந்திருந்த மகிழ்ச்சியை என்ன பாசுரமிட்டுத் தெரிவிக்கவல்லேன்? யாவஜ்ஜீவமும் இங்கேயே யிருந்துவிடலாமா எனறே தோன்றியது. இங்கு வாழ்ந்த நாட்களில் செய்ய நேர்ந்த செய்கைகளைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்.

அடியேன் காஞ்சியிலிருந்து புறப்படுவதற்கு நாலு நாள் முன்னே சாங்கரசிரோபூஷா என்கிற ஸம்ஸ்க்ருத க்ரந்த மொன்றை வைதிக மனோஹரா பத்ரிகையின் மூலமாகவும், அதன் மொழி பெயர்ப்பை அம்ருதலஹரீ மூலமாகவும் வெளியிட்டிருந்தே னென்பதை ஸஹ்ருதயர்கள் மறந்திரார்கள். இதன் ப்ரமேயத்தை எல்லாருமறியச் சிறிது நினைப்பூட்டுகிறேன். மயிலை ஸம்ஸ்க்ருத காலேஜில் பண்டிதராக அமர்ந்திருக்கின்ற ப்ரஹ்மஸ்ரீ போலஹம் ராமசாஸ்த்ரிகள் த்ரவிடாத்ரேயதர்சந மென்றொரு வட மொழி நூல் வெளியிட்டிருந்தார். அதில், விசிஷ்டாத்வைத மதப்ரவர்த்தகர்களான பூர்வாசார்யர்களை ப்ராந்தர்களென்றும் வஞ்சகர்களென்றும் மற்றும் பலவிதமாகவும் நிந்தித்திருப்பது வாசாமகோசரம். ஸ்ரீ பாஷ்யத்தின் உபக்ரமத்தில் “ஹ ஹவதெ ஆயாய நகூ தாம விஷீணாாம ஙஹவுஷூ த்ரவு ர்ம வலுவஆ அாயஅாஸெ ஹுகிவுடீ; தநதா நஷாெண ஸூத்ராக்ஷராணி வதாவதாஸ ஹெ” என்றருளிச் செய்திருப்பது பொய்யுரை யென்றும், போதாயநமஹர்ஷி யென்பவர் ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு விவரணமாக வ்ருத்தி க்ரந்தமென்று ஒன்று செய்ததே கிடையாதென்றும், டங்கத்ரமிடாசார்யாதிகள் அந்த வ்ருத்தி க்ரந்தத்திற்கு பாஷ்யம் செய்திருந்தார்களாகச் சொல்லுவதும் பொய்யுரை யென்றும், அவர்கள் அத்வைதிகளே யென்றும், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமானது ஆர்ஷ க்ரந்த மூலகமேயன்றென்றும் இப்படிச் சில அப்ராமாணிக வாதங்களை அந்த போலஹம் சாஸ்த்ரிகள் ஆகாச தாண்டவமாகப் பரப்பியிருந்தார்கள். அவை யத்தனையும் பாமரப்ரதாரண வார்த்தைகளென்பதைப் பத்து பரிச்சேதங்களினால் விபுலமாக நிரூபித்தது நம்முடைய சாங்கரசிரோபூஷாக்ரந்தம். இதற்கு வரியடைவே பதில் சொல்லக் கடமைப்பட்டவர்கள் போலஹம் சாஸ்த்ரிகள். அப்படியிருந்தும் அவர் நமக்கு எழுதிய 25—6—58 தேதியுள்ள கடிதத்தில் “உங்களுடைய பத்து பரிச்சேதங்களுக்கும் ஒரே ஸமயம் பதில் எழுத அவகாசப்படாது” என்று எழுதி விட்டு, ஆனாலும் சாங்கரசிரோபூஷாவின் முகப்பில் “சுவயெயஉவிஜெள ஹிஜெஞூ:” என்றுள்ள இரண்டு பக்கங்களுக்கு மட்டுமே பதில் எழுதியனுப்புவதாகத் தெரிவித்து அங்ஙனமே ஸ்தூலஸ்தூலமான தேவநாகராக்ஷரத்தில் புல்ஸ்கேப் 13½ பக்கம் ஒரு ஸம்ஸ்க்ருத வியாஸம் எழுதியனுப்பினார். இதை நாமே அச்சிட்டுக் கண்டன மெழுதும் படிக்கும் தெரிவித்திருந்தார். நாம் ஹ்ருஷீகேசத்திலிருந்து ஹரித்வாரம் திரும்பி வந்ததும் 10—7—58 ல் இந்த வியாஸம் கிடைக்கப் பெற்றோம்.

சாஸ்த்ரிகள் ஏற்கெனவே தமது நூலில் எழுதியிருந்த விஷயங்களையே பெரும்பாலும் திருப்பித் திருப்பி இதில் எழுதியிருக்கிறார். த்ரமிடபாஷ்யகாரரென்பவர் ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகளால் கொள்ளப்பட்டவர் யாரோ அவரே தான் ஸ்ரீராமாநுஜாசார்யாதிகளாலும் கொள்ளப்பட்டவரென்றும், ஆனால் ஆளவந்தார் நூலில் த்ரமிட பாஷ்யகாரரென்று குறிப்பிடப்பட்டவர் மட்டும் திருவாய்மொழிக்குக் கர்த்தாவான நம்மாழ்வாரே யாவர் என்றும், அந்த நம்மாழ்வாருடைய தமிழ்ப் பிரபந்தங்களை மட்டும் பின்பற்றி ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் முதலான ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் இயற்றின சில நூல்களைத் தழுவியே ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபாஷ்யமியற்றினரென்றும், ஸ்ரீபாஷ்யத்தில் போதாயநவ்ருத்தி க்ரந்தத்திலிருந்து சில வாக்யங்களெடுத்துக் காட்டப்பட்டிருப்பது கேவல கல்பநாமூலக மென்றும், அத்வைத மத ப்ரவர்த்தகர்களான த்ரமிடாசார்யருடைய சில வாக்யங்களை ஸ்ரீ பாஷ்யாதிகளில் ஸ்வமதாநுகூலமாக ஸ்ரீராமாநுஜர் வியாக்கியானித்திருப்பது அஸங்கத மென்றும்........ இப்படிப்பட்ட ஆகாச தாண்டவ வார்த்தாமாலைகளையே சாஸ்த்ரிகள் தம்முடைய வியாஸத்தில் விரித்துள்ளார்.

போதாயநவ்ருத்தி க்ரந்தமே கிடையாதென்றும் அது அவதரித்ததேயில்லையென்றும், * பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்தி மென்று ராமாநுஜர் எழுதியிருப்பது அந்ருதமேயென்றும் இன்று நேற்று எழுதத் தலைப்பட்டார் இந்த ஸத்யவாதி. இவருடைய அதிவிஸ்த்ருத வாக்ப்ரபஞ்சத்தில் இதுதான் தலையாக நிற்கிறது. இது ஸர்வாத்மநா அஸம்பத்தமென்பதை நாம் விரிவாக நிரூபித்திருக்கிறோம். இதில் முக்கியமான விஷயமொன்று கேண்மின்;—ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வர்த்தமாந ஸ்ரீ பரகாலஸ்வாமிகள் ஹயசிர உபாக்கியான மென்னும் க்ரந்தத்தை 1954ல் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். அதில் (பக்கம் 4ல்) டிப்பணியில்—

> "பொயாயநஸ்ஷ ஶீரகஸ ஸூத்ரவ்ருத்யாத்மகஸ்ய ஹாஸ்ஸா நஜாகாஞிக—
> ஶ நகதரு நாஊநிதெ—ஶாஹிதெ குவெதிவிஷதெ ஶ்ருவணஹரூய நாஊகெ ஶ்ருபெ
> ரெ ஆத—யெ—உவா௦ஶ்ருகாணெ"

என்று தொடங்கி யெழுதப்பட்டுள்ளவற்றைக் கவனிக்கவேணும். அவ்வளவுதூரம் போக வேண்டா; இந்த சாஸ்த்ரிகளே அநுவதிக்கும் ஸ்வஸஜாதீயர்களின் க்ரந்தங்களிலிருந்தும் போதாயநவ்ருத்தி க்ரந்தஸத்பாவம் அபலபிக்க முடியாமல் தேறுவதை நாம் சாங்கரசிரோபூஷையில் அசைக்கமுடியாதபடி நிரூபித்திருக்கிறோம். இவ்விஷயங்களைப்பற்றி ஹரித்வாரத்தில் நாம் விரிவாக எழுதுவதற்கு அவகாசமளித்தார் போலஹம்சாஸ்த்ரிகள். அந்த விரிவான வியாஸம் அச்சாகி வெளிவந்துவிட்டபடியால் இங்கு நாம் விசேஷித்து எழுத விரும்புகின்றிலோம். அத்யந்தம் அஸங்கதங்களான விஷயங்களையே எழுதக் கற்றிருக்குமிந்த சாஸ்த்ரிகள் ஸ்ரீ வைஷ்ணவ ஸதாசார்யர்களை ப்ராந்தர்களென்றும் பாமரவஞ்சகர்களென்றும் எழுதி ஸ்வகோஷ்டிகளில் பிரசாரம் செய்வதனால் அவ்வாசார்ய ஸார்வபௌமர்களுக்கு அவத்ய லேசமும் தட்டாது. ஆனாலும் இவருடைய துர்வாதங்களை நாம் ஸப்ரமாணமாகக் கண்டித்தே தீருகிறோம். இவ்விஷயத்தில் இவர் எவ்வளவு எழுதினாலும் அதை உடனுக்குடனே அடுத்த க்ஷணத்திலேயே நாம் களைந்தொழிப்போமென்பதை இவர்தாமும் நன்கறிந்துள்ளார்.

ஹரித்வார வாஸகாலத்தில் அடியேன் புரிந்த தொண்டுகளில் மேலே தெரிவித்த தொண்டு மிகச்சிறிது. மிகப் பெரிய தொண்டும் செய்ய ப்ராப்தமானதை இங்கு ஆனந்தம்

பொங்கி விஜ்ஞாபிக்கிறேன். இந்த யாத்திரையில் வழியில் உத்தரதேசத்து ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர்களோடு வார்த்தையாட நேருங் காலங்களில் அவர்கள் தங்களுடைய வொரு பெரிய மனக்குறையைச் சொல்லிக் கொள்வதுண்டு; அதாவது, தாங்கள் தென்னாட்டில் ஜனிக்கப் பெருமையினாலே தமிழ்ப்பாஷையிலமைந்துள்ள பூர்வாசார்ய திவ்யஸூக்திகளில் திகழும் அர்த்தவிசேஷங்களைத் தெரிந்து கொண்டு களிக்க பாக்யமில்லாமையினால் தங்களுக் குண்டான நிர்வேதத்தைத் தெரிவிப்பதுண்டு. ஹரித்வாரத்தில் வந்திருந்த பண்டிதர்களும் இதே விஷயத்தில் வற்புறுத்தி வார்த்தையாடினார்கள். அப்போது அவர்களின் நிர்வேதத்தைப் பொறுத்திருக்க கில்லாமல் அவர்களுடைய மநோரத பூர்த்தி செய்துவைப்பதாக வாக்குறுதி யளித்தேன். "இன்று முதலாக உங்கள் போல்வார்க்கு மஹோபகாரகங்களான ஸம்ஸ்க்ருத நூல்களை விசேஷமாக வெழுதியச்சிட்டு உபகரிக்கக்கடவேன்" என்றுரைத்து அந்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற அந்த க்ஷணத்திலேயே தொடங்கினேன். ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரவைபவம் முதலாக ஸ்ரீ வைஷ்ணவ ஸதாசார்ய ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த விசேஷங்களை ஸுகபோதமாம்படி யெழுதுவதென்று ஆரம்பித்து மூன்று நாட்களில் நூறுபக்கங்களுக்கு மேலாக எழுதினேன். அதை அச்சிடுவதற்கு சென்னைக்கு அனுப்பவேணுமென்று உத்தேசித்திருக்கையில், ஹரித்வாரத்தில் ஸ்திரவாஸியான வொரு மஹான் எம்பெருமானாலும் மணவாளமாமுனிகளாலும் நியமிக்கப்பட்டவர் போல் என்னிடம் வந்து அவ்யாஜஸ்நேஹங் கொண்டு, தாம் அவ்விடத்தில் ஒரு அச்சுக்கூடத்திற்குத் தலைவனென்பதைத் தெரிவித்து ஏதாவது கைங்கரியம் கொள்ளவேணுமென்று கோரி நின்றார். இப்படியும் ஒரு பகவதநுக்ரஹம் நேர்படுவதே! யென்று விஸ்மய ஹர்ஷ விவசனாகி அன்றுவரை எழுதியிருந்ததை அவரிடம் கொடுத்து இதை யச்சிடலா மென்றேன். அவரும் அதைப் பரமஸந்தோஷத்தோடு பெற்றுக் கொண்டு போய் அன்றே முத்ரணம் செய்யத் தொடங்கி விட்டார். அதிஸுந்தரமான தேவநாகர லிபியில் அச்சிட்டு வருகிறார். அது ஸாதாரணமான வொரு அச்சுக்கூடமாதலால் முத்ரணம் விரைவாக வன்றிக்கே மெதுவாக நடந்துவருகின்றது. ஆயினும் இதில் ஒரு பகுதி ஸமீபகாலத்தில் வெளிவரும். இந்த விசை ஹரித்வார வாஸத்தில் இந்த ப்ரஹ்மானந்தம் பேச்சுக்கு நிலமல்லாததாயிருந்தது.

## 14. குருக்ஷேத்ரம்

ஹரித்வாரத்திலிருந்து குருக்ஷேத்ரம் வந்து சேர்ந்தோம். கீதையின் உபக்ரமம் "தர்மக்ஷேத்ரே குரு க்ஷேத்ரே" என்பதாதலால் இந்த க்ஷேத்ரத்தின் பெருமையைப்பற்றி நாம் எழுதவேண்டியது முண்டோ? 7—8 மைல் தூரம் சென்று தரிசிக்கவேண்டிய பல விசேஷங்கள் இங்குஉண்டு. கீதை அவதரித்தவிடம், பீஷ்மாசார் சரதல்பகதரான விடம், ஸூர்ய குண்டம், பாணகங்கை முதலான பலவிடங்கள் இத்தலத்திற்குச் சிறப்பானவை. ரயில் ஸ்டேஷனுக்கு அருகாமையில் ஸௌகரியமான தருமசாலையுள்ளது.

## 15. புதுடில்லி

குருக்ஷேத்திரத்திலிருந்து டில்லி மாநகர் வந்து சேர்ந்தோம். இது லௌகிகமான மஹாநகரமென்று தோன்ற நின்றாலும் பாண்டவர்கள் ஆண்ட ராஜதானியாகையாலும், கண்ணபிரான் பலகால் பாதாரவிந்த விந்யாஸம் பண்ணினவிடமாகையாலும் தூய பெருநீர் யமுனை பெருகு மிடமாகையாலும் இதுவும் புண்யபுரியாகவே கருதத் தக்கது. இவ்விடத்தில் பிர்லாமந்திரமும் அதைச்சேர்ந்த மஹத்தான தருமசாலையும் யாத்ரிகர்களுக்கு மிகவும் ஸௌக

ரியமான வஸதியாகும். உலகமெங்கும் மஹாதார்மிகரென்று ப்ரஸித்திபெற்றவரான ஜச்கல கிசோர பிர்லா என்கிற மஹானுடைய தர்மசாலை இது. உத்யோகார்த்தமாகத் தென்னாட்டிலிருந்து பலபல மஹான்கள் இம்மஹாநகரத்தில் வந்து பரதிஷ்டிதர்களாயிருக்கிறார்களென்பது ப்ரஸித்தமன்றோ. அன்னவர்களில் ஸ்ரீமத் உ. வே. டாக்டர் ஸர். K. S. க்ருஷ்ணன் அவர்களும், ஸுப்ரஸித்தரான ஸ்பீகர் ஸ்ரீ உ. வே. அனந்தசயனமையங்காரவர்களும், S. R. S. ராகவன் ஸ்வாமிகளும் மற்றும் பல பிரமுகர்களும் இங்கு உபந்யாஸங்களை 5 நாள் நடத்திவைத்தார்கள். இந்நகரில் ஸ்ரீ வைஷ்ணவ மஹாஸபையொன்று ஸ்தாபிக்கப்பட்டு நெடுநாளாகக் காரியம் செய்துவருகிறது. அதனுடைய சார்பிலேயே இவ்வுபந்யாஸங்கள் நடந்தன.

## 16. மதுரை ப்ருந்தாவநாதிகள்

டில்லியிலிருந்து வடமதுரை வந்துசேர்ந்து ப்ருந்தாவன கோகுல கோவர்த்தநாதிகள் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. ப்ருந்தாவனத்தில் ஸ்ரீ கோவர்த்தனம் ஸ்வாமி பூலோக வைகுண்டமாக அமைத்திருக்கிற மஹாஸந்நிதியில் விலக்ஷண பவனத்தில் தங்கியிருக்க நேர்ந்தது. இவ்விடத்தில் தாக்ஷிணாத்ய ஸ்வாமிகளுக்காக கோவர்த்தநாதி வைபவ விஷயமாய் ஒரு உபந்யாஸம் நடத்தப் பட்டது.

## 17. ஆக்ரா—(AGRA)

மதுரா ப்ருந்தாவன கோகுல கோவர்த்தனங்களை ஸேவித்துக்கொண்டு ஆக்ராநகரம் வந்து சேரவேண்டியதாயிற்று. க்ஷேத்ர தீர்த்தயாத்ரா ப்ரகரணத்தில் இந்நகர்க்கு வரவேண்டிய ப்ரஸக்தி இல்லையாயினும் ஆவச்யகதை ஏற்பட்டது. அதாவது, ரைல் மார்க்கத்தில் ப்ராட்கேஜ், மீடர்கேஜ் என்று இரண்டு பிரிவினையுண்டல்லவா? ப்ராட்கேஜ் என்பது பெரியபாதை; மீடர்கேஜ் என்பது சிறியபாதை. சென்னைமாநகரிலிருந்து இதுவரையில் ப்ராட்கேஜ் வண்டித்தொடரில் யாத்திரை நடந்தது. இது ஆக்ராவோடு முடிவு பெறுகிறது. இதற்குப் பிறகு ஜயபூர், புஷ்கரம், உஜ்ஜயினி, நாதத்வாரா, ஸித்தபூர், த்வாரகை முதலான க்ஷேத்ரங்களுக்குச் சிறியபாதையேயொழிய பெரியபாதை கிடையாது. இதுவரை யாத்திரைக்கு உபயோகப்பட்டுவந்த பெரியவண்டித் தொடரை ஆக்ராவில் விட்டுவிட்டு, இங்கிருந்து இருபது நாள் யாத்திரைக்குச் சிறியவண்டித் தொடரைப் பற்றவேண்டியதாயிற்று. இதையும் ரைல்வே கம்பெனியார் ஸௌகரியமாகவே ஏற்பாடு செய்து வைத்திருந்தார்கள். இதற்கும் சேர்த்தே முன்னம் மொத்தப்பணம் செலுத்தப்பட்டிருந்தது. இந்த வண்டிமாறுதல் ஆக்ராவில் ஆகவேண்டியிருந்ததனால் இதற்காகவே இங்கு வரவேண்டியதாயிற்று. இங்கே விடப்பட்ட பெரியவண்டித் தொடர் அஹமதாபாத் ஸ்டேஷனில் போயிருந்து எங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

ஆக்ராவில் மிகச் சிறந்த கண்காட்சியுள்ளது. 'தாஜ்மஹால்' என்று சொல்லுவர்கள். சில நூற்றாண்டுகட்கு முன்பிருந்த ஒரு மொகலாய் அரசன் (ஷாஜஹான்) தன்னுடைய மனைவியின் (மும்தாஜ்) ஸ்மாரக சின்ஹமாகக் கட்டுவித்த கட்டிடம் இது. இதன் சிறப்பை நாம் என்னவென்று எழுதுவது? ஆச்சரியமான ஸன்னிவேசம் என்று இவ்வளவு தான் எழுதலாம். துருஷ்க ப்ரபுவின் இடம் என்கிற ஒரு அவத்யமே இதற்குச் சொல்லத் தக்கதாகவுள்ளது. பகவத் விபூதியென்று நினைத்துப் பார்க்குமளவில் இதற்கீடானவொரு

ஸன்னிவேசம் நாம் கண்டதில்லையென்று சொல்லலாம். இதன் ஸமீபத்தில் யமுனையாறு பெருகுகின்றது. * தூய பெருநீர் யமுனைத் துறைவனுக்கு இப்படிப்பட்ட ரம்யமான ஹர்ம்யமொன்று அமையவேண்டுமென்று ஆசாஸித்தோம். இவ்வளவு அதிசயமாகச் சொல்லப்படுகிற இந்த மஹத்தான இடத்தையும் பரமாணுவாக்கும்படியான மற்றொரு கட்டிடம் சிலவாண்டுகளாக இந்நகரின் ஸமீபத்தில் தயால்பாக் என்னும் ஸ்தலத்திலேயே அமைக்கப்பட்டு வருகிறது. அது பல பல கோடி ரூபாய்ச் செலவில் அமைகின்றதென்றும் முடிவுபெறுவதற்கு இன்னும் பத்தெட்டு வருஷங்களாகு மென்றும் சொல்லுகிறார்கள். இந்நகரில் ஸ்டேஷன் ஸமீபத்திலேயே தருமசாலையுள்ளது.

## 18 ஜயபூர்

ஆக்ராவிலிருந்து ஜயபூர் வந்து சேர்ந்தோம். இது புராதனமான ராஜஸ்தானம். இப்போது ராஜஸ்தானங்களின் நிலைமை உலகமறிந்ததே. இவ்விடத்தில் க்ஷேத்ர தீர்த்த விசேஷம் ஒன்று மில்லையாயினும் நகர்ச்சிறப்பு அவசியம் காணத்தக்கது. மிக விசாலமான வீதிகளும், ஒரே ரீதியான உயர்ந்த மாடமாளிகைகளும் கண்ணைக்கவர்கின்றன. இவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவ ப்ரபுக்கள் வியாபார நிமித்தமாக விசேஷமாய்க் குழுமியிருக்கிறார்கள். ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்குவதற்கு ஸௌகரியமளிக்கும் மந்திரங்களும் இங்குப் பலவுண்டு. அவற்றுள், ராம்நகர்கஞ்ஜ் என்னுமிடத்தில் (ஊர்க் கோடியில்) மிக விசாலமான லக்ஷ்மீ நாராயண மந்திரமுள்ளது; அதிலே ஆனந்தமாகத் தங்கியிருந்தோம்.

## 19. அஜ்மீர், புஷ்கரம்

ஜயபூரிலிருந்து அஜ்மீர் ஸ்டேஷன் வந்து சேர்ந்து, இங்கிருந்து ஏழாவது மைலிலுள்ள புஷ்கர க்ஷேத்ரம் சேர்ந்தோம். ஸ்டேஷனிலிருந்து ஒரு மணி காலத்திற்குள் க்ஷேத்ரம் சேரும்படியான ஸாதனங்களுண்டு. இவ்விடத்தில் பகவானே தீர்த்தரூபியாக ஸேவை ஸாதிப்பதனால் அந்த தீர்த்த விசேஷத்திற்கே புஷ்கரமென்று திருநாமம். அந்தப் பெயரை யிட்டே ஊர் வழங்கப் பெறுகின்றது. தென்னாட்டில் எம்பெருமானுடைய திருநாமத்தை யிட்டே * வானமாமலை யென்று ஊர் வழங்கப் பெற்றது போலவே இதுவுமென்று கொள்ள லாம். இந்த தீர்த்தவிசேஷமே இவ்விடத்திற்கு ஏற்றம். இங்கு இரண்டு ஸன்னிதிகளுண்டு. ஒன்று நூறு வருஷங்களுக்கு முன்பு காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் ஆத்ய அனந்தாசார்ய ஸ்வாமியால் ப்ரதிஷ்டாபிதமானது. மற்றொன்று ஸமீப காலத்தில் மார்வாடத்திலுள்ள டீட்வாணு மகனீராம் ஸேட்ஜீ அவர்களால் வெகு ரமணீயமாக அமைக்கப்பட்டது. இதற்கு ரமாவைகுண்டமென்று பெயர். முந்தின ஸன்னிதிக்கு ரங்கஜீமந்திர மென்று பெயர். இரண்டு ஸன்னிதிகளிலும் தேசாந்தரிகள் தங்குவதற்கு ஸ்தல ஸௌகரியம் நன்றாகவுண்டு. இரண்டிடத்திலும் தங்கியிருந்தோம்.

## 20. இண்டோர் நகரம்

புஷ்கரத்திலிருந்து உஜ்ஜயினீ செல்லும் வழியில் இண்டோர் நகரத்தில் இரண்டொரு நாள் தங்கநேர்ந்தது. இங்கு க்ஷேத்ர தீர்த்த விசேஷமொன்றுமில்லை யெனினும் மஹாநகரங் களில் பரிகணிதமாகையாலே இது தர்சநீயமாயிற்று. இவ்விடத்தில் யசவந்தகஞ்ஜென்னு மிடத்தில் பிரதிவாதிபயங்கராசார்ய பீடமொன்று உண்டு. அதற்கு ராமாநுஜகூடமென்று

பெயர். தென்னாட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இது மிகச் சிறந்த புகலிடம். இதற்கு மிக அருகாமையில் மிக விசாலமான தர்மசாலையுமுண்டு. இவ்விடத்தில் பகவத் ராமாநுஜ கருணை யென்பதுபற்றி ஹிந்தி யுபந்யாஸம் நடத்தப்பட்டது.

## 21. உஜ்ஜயிநி

இண்டோரிலிருந்து உஜ்ஜயிநீ க்ஷேத்ரம்வந்து சேர்ந்தோம். *அயோத்யா மதுரா மாயா* என்கிற ச்லோகத்தில் அவந்திகா என்னப்பட்ட க்ஷேத்திரம் இதுவே. கண்ணபிரான் பலராமனோடும் குசேல முனிவரோடும் ஸாந்தீபநி முனிவரிடத்தில் அறுபத்துநான்கு கலைகளைப் பயின்றதாகச் சொல்லுமிடம் இதுவே. இங்கு ஸாந்தீபநியாச்ரமம் முதலான விடங்கள் காணத்தக்கவை. இங்கு க்ஷிப்ராநதி நிர்மல ப்ரவாஹமாகப் பெருகுகின்றது. அதன் கரையில் மிகப் பெரிய ராமாநுஜகூடம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் புகலிடமானது. "ராமகாட் ராமாநுஜகூட" என்றால் இவ்விடத்தில் கொண்டுவிடுவர்கள். இவ்விடத்தில் அஸ்மத்குல கூடஸ்த ப்ரதிவாதிபயங்கராசார்ய திருவவதார நக்ஷத்ரோத்ஸவ பரிபாலனம் ப்ராப்தமாயிற்று.

## 22. நாதத்வாரா

உஜ்ஜயினியிலிருந்து நாதத்வாரா வென்கிற க்ஷேத்திரத்திற்கு வந்தோம். இத்தலம் நமது தென்னாட்டினர்க்கு விசேஷமாகத் தெரியாது. உதயபுர ராஜதானியில் வல்லபாசார்யர்களின் ஆதீனத்திலுள்ளது இத்தலம். வல்லபர்கள் ஸ்ரீ க்ருஷ்ணபக்தியில் மிகச் சிறந்தவர்கள். கண்ணனையல்லது வேறு தெய்வமறியாரிவர்கள். இவ்விடத்து விபவங்கள் வாசாமகோசரம். ஸன்னிதி மிகவும் விசாலமானது. தினப்படி ஆயிரக்கணக்கான ஸேவார்த்திகள் வந்து தொழுகிறார்கள். இங்கு தினந்தோறும் இரண்டாயிர ரூபாய்களுக்குமேல் போகங்களுக்காகச் செலவு செய்யப்படுகிறது. சிப்பந்திகளின் சம்பளம் மட்டும் ஒரு நாளைக்கு ஐயாயிரம் ரூபாயாகிறது. எனவே மாதமொன்றுக்கு ஒன்றரை லக்ஷம் ரூ. செலவாகிறது சம்பளவகையில் மாத்திரமே இது. நமது நாட்டில் திருவேங்கடமுடையானுடைய ஐச்வரியத்தை ஏகதேசமாக நினைக்கச் செய்து விடுகிறது இத்தலத்து ஸம்ருத்தி ஊரில் தர்மசாலைகள் நிரம்பியிருக்கின்றன. தீர்த்த வஸதிகளுக்கும் குறையில்லை. ஸ்ரீயுதகோஸ்வாமி திலகாயித கோவிந்தலாலஜீ என்கிற வல்லபாசார்யர் இத்தலத்தில் ராஜகுரு பீடத்தில் அமர்ந்திருக்கிறார். இவர் நம்மை ஆஸ்தானத்திற்கு வரவழைத்து பகவத்குணாநுபவபரமான உபந்யாஸம் கேட்டு ஸ்வகீய பண்டிதமண்டலிகளுடன் ஆனந்தித்துப் பீதாம்பராதிகளால் விசேஷஸத்காரம் செய்தார்.

---

# அபம்ருத்யுவுக்குத் தப்பிப் பிழைத்த அதிசயம்.

திருநாடு சென்றவர்கள் மீள்வதில்லை யென்ற நூற்கொள்கைக்குமாறாக அடியேன் மீண்டு வந்ததோர் அதிசயவார்த்தையை ஆப்தர்களறிய விஜ்ஞாபிக்கிறேன். நாதத்வாராவிலிருந்து ஆவணி மாதப்பிறப்பன்று (17—8—58) மாலை ஸபரிவாரனாய்ப் புறப்பட்டு ஸித்தபூ

ரென்கிற மாத்ருகயா க்ஷேத்திரம் செல்லா நின்றேன். ஸாயம் ஆறரைமணிக்கு ரைல் ஏறியாயிற்று. எமக்கு ஸ்பெஷல் போகிவண்டி யிருந்தாலும் ஆக்ராவிலிருந்து மீட்டர்கேஜ் பாதைக்கு ஏற்பச் சிறுவண்டித் தொடர் அமைந்ததனால் அதில் பெருந்திரளோடு கூடியிருக்கப் பாங்கில்லாமல் ஸௌகரியத்தை யுத்தேசித்து வேறொரு வண்டியில் இருந்து வந்தேன். அதிலும் நம்மவர்கள் பலர் உடனிருந்தார்கள். அதில் ஜனஸங்கம் அதிகமாக ஏற்பட்டதனால் நம்முடைய ஸ்பெஷல் வண்டிக்கே போய்ச் சேருவோமென்றெண்ணி அந்த வண்டியிலிருந்து இறங்கிவிட்டேன். அந்த ஸ்டேஷன் சிறியதாகையாலே நமது ஸ்பெஷல் வண்டித்தொடர் ப்ளாட்பாரத்தைக் கடந்து அப்பால் சிறிது தூரத்தில் (எஞ்ஜின் பக்கத்தில்) நின்றிருந்தது. அவ்வளவுதூரம் நான் நடந்து செல்வதற்குள் வண்டி புறப்பட்டு விட்டது. அப்போது இரவு பத்தேகால்மணி. எப்படியாவது நமது வண்டியில் ஏறிவிடவேணு மென்னு மாசையினால் சிறிது வேகமாகவே நடந்து சென்று வண்டியின் வெளியிலுள்ள கீழ்ப்படியின் மீதேறி இரும்பு கம்பியைப் பிடித்துக் கொண்டேன். இதுவோ சிறுவண்டித் தொடர்; அதற்கேற்பப் படியும் மிகச் சிறிது. வண்டித் தொடரோ கனவேகமாக ஓடுகின்றது. நமது ஸ்பெஷல் வண்டிகள் நான்கில் ஏறக்குறைய எண்பது பேர்கள் சயனித்திருக்கிறார்கள். வெளிப்படியில் நின்றபடியே கதவைத் திறவுங்களென்று நான் கத்துகிறேன். உயிர்ப்பிச்சை கொடுங்களென்றும் கூச்சலிடுகிறேன். அந்த பயங்கரமான கூக்குரல் கேட்டுப் பலர் கண்விழித்தெழுந்து ஜன்னல் வழியாய் என்னைப் பார்த்துங்கூட ஒருவராலும் கதவைத் திறக்க முடியவில்லை. எதிர்ப்பக்கத்தில் மட்டும் திறக்கும்வழி வைத்துக்கொண்டு இந்த பக்கத்தைப் பூட்டியே யிருந்தபடியாலும், எளிதில் பேர்க்க முடியாத கனத்த மூட்டைகளை வழியடைய அடுக்கியிருந்தபடியாலும் கதவுதிறக்க முடியாமலே போயிற்று. ஸ்டேஷன்விட்டு ஐந்தாறு மைல் தூரத்திற்குமேல் வண்டி போய்க்கொண்டிருக்கிறது. அந்த ஸமயத்தில் வெளியிடத்தில் நான் எப்படி நிற்கிறேன், எப்படி அங்குவந்தேன் என்பது உள்ளிருப்பவர்களுக்குப் புரியவில்லை. எனக்கோ கையிலும் காலிலும் வலி மாண்டுவிட்டது. கால் சரிவுற்றது. கையும் தளர்ந்து விட்டது. கீழே சரிந்து விழவேண்டிய நிலைமையாய் விட்டது. அந்த விடத்தில் கீழ்ப்பாகத்தை நோக்குங்கால் கிடுகிடு பாதாளமாயிருக்கின்றது. நானே புத்தி பூர்வமாகக் குதித்தாலும், அவசாத் சரிந்து விழுந்தாலும் ஒரு அஸ்திகண்டங்கூட ஒருவர்கையிலும் கிடைக்க வழியிராது. பகவான் நமக்கு இப்படிப்பட்ட அபம்ருத்யுவையா தலையிலெழுதினனென்று எண்ணுதன பலவு மெண்ணியாயிற்று. த்வயாநுஸந்தானமும் ஆசார்ய பாதாரவிந்தத்யானமும் செய்தாயிற்று. ஒரு மணியவகாசத்தில் க்ரமேண நினைத்தாக வேண்டிய பலபல விஷயங்களை ஒரேநிமிஷத்தில் நினைத்து விட்டேன். கடைசியான நினைவை மட்டும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன். வராஹ சரமச்லோகப்படி * அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேனென்றிருப்பார்க்கு அந்திமஸ்ம்ருதி ஆவச்யகமன்று என்று ஸம்ப்ரதாயார்த்த மிருந்தாலும் அந்திமக்ஷணத்தில் நமக்கு மணவாளமாமுனிகளின் திருவடிசிந்தனை ப்ராப்தமாகுமா வென்று அடியேன் அடிக்கடி நினைப்பதுண்டு. அந்த சிந்தனையோடு இப்போது நமக்கு அவஸானம் நேருகின்றதே யென்று ஒரு மஹத்தான ஸந்தோஷ முண்டாயிற்று. இன்னமும் ஒன்று நினைத்தேன்; (அதாவது) "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவ அதிதிம்" என்று உள்ளது; மணவாளமாமுனிகளே! அடியேன் க்ருதக்ருத்யனாக இல்லையே! இன்னமும் எவ்வளவோ கர்த்தவ்யசேஷமிருப்பதாக நினைத்திருக்குமடியேனை இப்படி அபம்ருத்யுவுக்கு ஆளாக்கவோ திருவுள்ளமாயிற்று? என்று இதுதான் அந்திமஸ்ம்ருதியாக நிகழ்ந்தது. அதே க்ஷணத்தில்

ஒரு உபாயம் ஸ்புரித்தது. "அபாயம் நேர்ந்தால் வண்டியை நிறுத்த சங்கிலியைப் பிடித்திழு" என்று வண்டிதோறும் பிரசுரம் செய்யப்பட்டிருப்பது நினைவுக்கு வந்தது. உள்ளேயிருப்பவர்களை நோக்கி 'சங்கிலியைப் பிடித்திழுங்கள்' என்று கத்தினேன். நம்முடைய க்ரந்த மாலா ஏஜண்டாகிய சென்னை ஜி. ரங்கைய நாயுடு சங்கிலியைப் பிடித்திழுத்தும் வண்டி நிற்கவில்லை. வண்டியோ ஒரு நிமிஷத்தில் ஒரு மைல் ஓடுகின்றது. எப்படி நான் தரித்து நின்றேனென்பது எனக்கே தெரியவில்லை. ப்ரஹ்மாஸ்த்ரமும் வாய் மடிந்ததே யென்று துடிக்கிறேன். க்ருஷ்ணகிரி வெங்கடலக்ஷ்மியம்மாளென்பவள் ஹாஹா வென்று கத்திக் கொண்டே சங்கிலியைப் பிடித்துக்கொண்டு தொங்கலாடி நிற்க உடனே வண்டி நின்றது. என்னுடைய ஆவியும் நிலையில் நின்றது. இந்த அம்மாள் ப்ரதிவாதி பயங்கராசார்ய ஸமாச்ரயணம் பெற்றவளாகையாலே உயிர்ப்பிச்சையளிக்கும் பாக்கியம் இவளுக்கு எட்டியதுபோலும்.

வண்டி நின்றவுடனே நான் கீழேயிறங்கிவிட்டேன். விரஜாதீரத்தில் நின்றுமிறங்கினேனென்பதில் ஐயமில்லை. சில அதிகாரிகள் ஓடிவந்து என்னை கார்டு வண்டியில் ஏற்றிவிட உடனே வண்டி புறப்பட்டு விட்டது. அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்ற பிறகு ரைல்வே அதிகாரிகள் செய்யவேண்டிய விசாரணையைச் செய்து தெளிவுடன் சென்றார்கள். மறுநாள் காலை எட்டு மணிக்கு ஸித்தபூர் வந்து சேர்ந்தோம்.

பக்தன் பத்ரிகையாசிரியரான நண்பர் ஸ்ரீமான் M. O. அழகசிங்கராசாரியர் ஸ்ரீ ஜயந்தி மலராக வெளியிடப்படும் பக்தனுக்கு ஒரு வியாஸ மெழுதியனுப்பவேணுமென்று அடிக்கடி கடிதமெழுதி வந்தார். இந்த ஸம்பவத்திற்கு முன்னே [நாதத்வாராவிலிருந்து புறப்பட்ட பின்பு] ரைல் வண்டியிலேயே அந்த வியாஸ மெழுத ஆரம்பித்து அதற்கு "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என மகுடம் வைத்து இரண்டொரு பக்கமேயெழுதினேன். அப்போது நானேறியிருந்த வண்டியில் போதுமான ஸௌகரியம் இல்லாதிருந்ததனால் எழுதுவதை நிறுத்தி காகிதச் சுருளையை இடுப்பில் சொருகியிருந்தேன். மேலே விவரித்த ஆபத்தை அநுபவித்த காலத்தில் அந்த காகிதச் சுருளை இடுப்பிலேயேயிருந்தது. எண்ணு தனபலவு மெண்ணின காலத்தில் "வியாஸத்திற்கு மகுடம் வைத்ததற்கேற்ப நம்முடைய பிறந்தவாறும் வளர்ந்தவாறும் இப்படியா ஆயிற்று!* என்கிற எண்ணமும் நிகழ்ந்தது. ஹரித்வாரம் போய்ச் சேர்ந்தது முதல் நாதத்வாரா வந்து சேர்ந்தவரையில் யாத்திரா விருத்தாந்தங்களை விரிவாக வெழுதி ஸ்ரீராமாநுஜனுக்கு அனுப்ப புக்போஸ்டு கட்டி லேட்பீஸ்டாம்பு மொட்டி அன்றிரவு 9-மணிக்கே ரைல்வே மைல் ஸர்விஸ்ஸில் போஸ்டு செய்தேன். இந்த விபத்துச் செய்திகளை த்வாரகாதீசன் திருமுன்பே (20—8—58 ல்) எழுதியனுப்ப பாக்கியம் பெற்றேன்.

" தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே. "

---

# அகண்ட பாராயண ப்ரகடனம்.

நமது இந்த யாத்திரை **10—9—58** காலையில் முடிவுபெறும். அன்றே சென்னையிலிருந்து ஸ்வஸ்தானம் சேர்ந்து இருபத்து மூன்று மணி காலத்தில் நாலாயிரதிவ்ய ப்ரபந்த ஸேவை பெருந்திரளாக விருந்து நடத்தப்படும். ஸெப்டம்பர்மீ **10**வ இரவு கழிந்தபின்மாலையில் **4**-மணிக்குள் ஸ்வாமிகள் நீராட்டம் கண்டருளி நமது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையின் சார்பாக நடந்துவரும் நித்ய ப்ரதக்ஷிண வேதபாராயண கோஷ்டியை முடித்துவிட்டு உடனே ஐந்து மணிக்கு அடியேனுடைய குடிலில் திவ்ய ப்ரபந்தஸேவை தொடங்குவார்கள். அரையர் ஸேவாக்ரமத்தில் அகண்டமாக ஸேவித்து மறுநாள் நித்யப்ரதக்ஷிணம் புறப்படுவதற்கு முன் பூர்த்தியாக ஸேவித்துச் சாத்துமுறை செய்வார்கள். சென்ற **1955**ஸூ த்தில் பவித்ரயாத்திரை முடிந்த தினத்தில் இங்ஙனம் நடைபெற்றிருக்கின்றது. அதுவே போல இப்போதும் நடைபெறும். பகல் **12** மணிக்கு முதலாயிர ஸேவை முடியும். மாலை **7**-மணிக்குப் பெரிய திருமொழி ஸேவை முடியும். பிறகு **9-30** மணிக்கு இயற்பா ஸேவை முடியும். உடனே திருவாய் மொழி தொடங்கிச் சிற்றஞ்சிறுகாலையில் சாத்துமுறையாகித் தொடர்ச்சியாகவே நித்ய திருவீதி ப்ரதக்ஷிணம் நடைபெறும்.

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய தாஸன்.
16—8—58



श्रीरस्तु ॥

श्रीमते हयग्रीवाय नमः ।        श्रीमते रामानुजाय नमः ।

# द्रमिडात्रेय दर्शन विमर्शः ॥

# த்ரமிடாத்ரேய தர்சந விமர்சம்

(ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம், அண்ணங்கராசாரியர்.)

यतिपतये नतिविततीः करवै मुरवैरिभक्तमुख्याय ।
तेने भुजङ्गभङ्गं भुजङ्गरूपी स्वयं भवन्नपि यः ॥

पोलहंरामशास्त्रीति धृतनाम्ना विपश्चिता ।   निपातितान् विषादाब्धौ विदुषोऽद्य प्रहर्षये ॥

काञ्चीवादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यरचितस्य ।   शाङ्करशिरोविभूषाग्रन्थस्यासौ हि सारसंक्षेपः ॥

1. இந்த விமர்சநூலை அன்பர்கள் யாவரும் பூர்த்தியாக நோக்க வேணுமென்பது முதற் பிரார்த்தனை. மயிலை ஸம்ஸ்க்ருத கலாசாலையுபாத்யாயர்களுள் ஒருவரான ப்ரஹ்மஸ்ரீ. போலகம் ராமசாஸ்த்ரிகளவர்கள் த்ரமிடாத்ரேயதர்சநம் என்றொரு வடமொழி நூல் எழுதி தேவநாகரலிபியில் வெளியிட்டிருக்கிறார்கள். 140 பக்கங்கள் கொண்ட இப் புத்தகம் 1957-ஆம் வருஷத்தில் அச்சிடப்பட்டதாகக் காண்கிறது. ஆனால் இப்போதே இது நம்முடைய பார்வைக்குக் கிடைத்தது. அத்வைத ஸம்பிரதாயத்திலும் விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயத்திலும் சில பல நூல்களைப் பற்றி விமர்சரூபமாக இந்த நூல் தோன்றியுள்ளது. இந்தவிமர்சத்திற்கு இப்போது என்ன ப்ரஸக்தியென்று ஆலோசிக்க நேருமன்றோ. அப்படி ஆலோசிக்குமளவில் ஒரு ப்ரஸக்தியும் தெரியவில்லை. முக்கியமாக ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களை யும் விசிஷ்டாத்வைத தர்சனத்தையும் நிந்திப்பதற்காகவே இப்புத்தகம் தோன்றியுள்ள தென்று காண்கிறது. இச்சுவடியில் இந்த நிந்தை பெரும்பாலும் பக்கந்தோறும் மலிந் துள்ளது. இதிலுள்ள விஷயங்களெல்லாம் விபரீதஜ்ஞானவைபவத்தினாலும் உலகை வஞ்சிக்க வேணுமென்கிற எண்ணத்தினாலுமே தோன்றியவையென்பதை நாம் விரிவாக நிரூபித்து வடமொழியில் ஒரு நூல் எழுதியிருக்கிறோம். அஃது அச்சேறி வருகிறது. அதற்கு சாங்கரசிரோபூஷா என்று பெயர். நிகழும் வைகாசி மாதம் முடிவதற்குள்ளாகவே அந்நூலை உலகம் காணும். வடமொழியில் இயற்றப்பட்ட அது ஸம்ஸ்க்ருத பண்டிதர் களுக்கே பயன் படுமாதலால் அது கொண்டு எல்லாரும் விஷயதத்துவங்களை உணர்ந்து கொள்ள முடியாது. அக்குறை தீர இதில் விளக்கமாகத் தெரிவிக்கப்படுகிறது.

2. நம்முடைய ஸ்வாமி எம்பெருமானாருளிச் செய்த ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் " भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्याः संचिक्षिपुः तन्मतानुसारेण सूत्राक्षराणि व्याख्यास्यन्ते-

பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு: தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே." என்று ப்ரதிஜ்ஞை செய்யப் பட்டிருக்கிற தென்பதை யாவருமறிவர். வ்யாஸமஹர்ஷியினால் பணிக்கப்பட்ட சாரீரகமீமாம்ஸையென்கிற ப்ரஹ்மஸூத்ரத்திற்கு போதாயநமஹர்ஷியினால் வ்ருத்திக்ரந்தமென்றொரு விவரண நூல் எழுதப்பட்டிக்கிறது. அது மிகவும் விரிவான நூல்; அதைச் சுருக்கிப் பூர்வாசார்யர்கள், சில க்ரந்தங்களை யெழுதி யிருந்தார்கள். அவர்களுடைய மதத்தையடியொற்றி ஸ்வாமி தாம் ஸ்ரீ பாஷ்யமருளிச்செய்வதாக மேலே உதாஹரித்த வாக்கியத்தினால் தெரிவிக்கப் படுகிறது. இதில் பொதுவாகப் பூர்வாசார்யர்களென்று அருளிச் செய்யப்பட்டிருக்கிறதே யொழிய அவர்கள் இன்னாரென்று நாமநிர்தேசத்துடன் தெரிவிக்கப் பட்டிருக்கவில்லை. ஆனாலும் அக்காலத்தில் அந்த பூர்வாசாரியர்களின் பெயர்கள் ஸுப்ரஸித்தமாயிருந்தபடியால் ச்ருதப்ரகாசிகாசார்யர் முதலான டீகாகாரர்கள் டங்கத்ரமிடகுஹதேவாதிகள் என்று விவரணம் காட்டியுள்ளார்கள். 'ப்ரஹ்மநந்தி' என்பவரும் டங்கர் என்பவரும் ஒருவ்யக்தியே யென்று தெரியவருகிறது. த்ரமிடபாஷ்யம் என்று ப்ரஸித்தமானவொரு பாஷ்யத்தைச் செய்தவர் த்ரமிடாசார்யரென்பவர். குஹதேவர் என்பவரைப் பற்றின விசேஷங்கள் ஒன்றும் தெரிய வரவில்லை.

3. மேலேயெடுத்துக்காட்டின ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் "தந்மதாநுஸாரேண" என்பதற்கு வ்ருத்திகாரரான பகவத் போதாயநரென்ன, அந்த வ்ருத்தியை ஸங்க்ஷிப்தமாக்கின டங்கத்ரமிடாதிகளென்ன ஆகிய இப்பேராசிரியர்களின் மதத்தை யநுஸரித்து என்று பொருள். போதாயநரை விட்டிட்டு டங்கத்ரமிடாதிகளை மட்டும் தச்சப்தார்த்தமாகக் கொள்ளுவாருமுளர். இதில் இப்போது விவாதமில்லை. ஏவஞ்ச ஸ்வாமி ராமாநுஜரருளிச் செய்த ஸ்ரீ பாஷ்யமானது மிகப் புராதனர்களான த்ரமிடாசார்யாதிகளின் க்ரந்தங்களை மூலமாகக் கொண்டு அவதரித்ததென்று தேறுகிறது. ப்ரஹ்மஸூத்ர பாஷ்யமியற்றிய மற்றையோர்கள் யாரும் இப்படி ப்ரதிஜ்ஞைசெய்து பாஷ்யமியற்றத் தொடங்கவில்லை. ஸ்ரீராமாநுஜர் மட்டும் இப்படி ப்ரதிஜ்ஞை செய்திருக்கக் காண்கையாலே, ஸ்ரீராமாநுஜபாஷ்ய ஸித்தமான விசிஷ்டாத்வைத மதமானது புராதநமாய் ஆர்ஷக்ரந்த மூலகமானது என்று தேறிவிடுகிறதே யென்று இதில் அஸூயை கொண்ட மதாந்தரஸ்தர்கள் "ஸ்ரீராமநுஜமதம் நவீநமேயொழிய புராதநமன்று" என்றும், "போதாயநாதிமஹர்ஷிகளின் க்ரந்தங்களை யநுஸரித்து ஸ்ரீபாஷ்ய மெழுதப்படுவதாகத் தெரிவித்திருப்பது அபத்தம்" என்றும் சொல்லித் தீர வேண்டியதாயிற்று. இந்த வாதத்தைத் தலைக்கொண்டே மேலே குறித்த த்ரமிடாத்ரேயதர்சநமென்கிற சுவடியைக் கிளப்பியுள்ளார். போதாயநவ்ருத்திக்ரந்தமென்பதாக ஒரு க்ரந்தமிருந்ததாய் ஸ்ரீராமாநுஜர் எழுதியிருப்பது பொய்யுரை; அப்படியொரு க்ரந்தம் இருந்ததே கிடையாது - என்றும், டங்கரென்கிற ப்ரஹ்மநந்தியும் த்ரமிடாசார்யரும் அத்வைத ஸம்ப்ரதாயப்ரவர்த்தகர்களில் சேர்ந்தவர்களேயல்லது இவர்கள் விசிஷ்டாத்வைதக் கொள்கையையுடையவராயிருந்தவர்களல்லர் என்றும் இப்படிச் சில விஷயங்களை நிரூபிப்பது மேலே குறித்த த்ரமிடாத்ரேயதர்சநக்ரந்தம். ஆளவந்தார், ஸ்ரீபாஷ்யகாரர், ச்ருத ப்ரகாசிகாசார்யரான ஸ்ரீஸுதர்சந பட்டர், வேதாந்த தேசிகன் என்னுமிவ்வாசார்யர்களை அவஹேலையாக நிந்திப்பது இச்சுவடிக்குத் தனிப்பட்ட வைபவம்.

4. புராதனமான விஷயங்களை விமர்சிக்கப்புகுமவர்கள் தாங்கள் விமர்சத்திற்கு எடுத்துக் கொண்ட விஷயங்களில் நிஷ்க்ருஷ்டமாயும் நிஷ்கல்மஷமாயுமுள்ள ஞானம் பெற்றவர்களாயும் தடஸ்தர்களாயிருந்து கொண்டு விமர்சிப்பவர்களாயுமிருத்தல் வேண்டும். ஒரு விஷயத்திலும் வஸ்து ஸ்திதியை யறியாதவர்களும், அறிந்து கொள்வதற்கு ஸாதநஸாமக்ரிகள் சிறிதுமில்லாதவர்களும் விமர்சிப்பதாக இறங்குவது மஹத்தான ஸாஹஸம். விவாத நூலில் சில ஏடுகளை மட்டும் படித்தாலுங்கூட இந்நூலாசிரியர் ஒரு விஷயத்திலும் நிஷ்க்ருஷ்ட நிஷ்கல்மஷ ஜ்ஞானமில்லாதவரென்பதையும் எதையும் முன்பின் முரணாகவே யெழுதுபவரென்பதையும் எளிதிலுணர முடியும்.

5. ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகளிற்காட்டிலும் மிக ப்ராசீநரான த்ரமிடாசார்ய ரென்கிற ஒரு பாஷ்யகாரர் ப்ரஸித்தராயிருந்தார். இப்பெரியாரை விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களான பூர்வாசார்யர்கள் பலர் உதாஹரித்திருக்கிறார்கள். அந்த த்ரமிடாசார்யர் இயற்றிய த்ரமிட பாஷ்யமானது. நெடுநாளைக்கு முன்னமே லோபித்து விட்டதாதலால் இப்போது யார்க்கும் கிடைப்பதில்லை. இந்த பாஷ்யத்தைப் பற்றியும் இந்த பாஷ்யத்தை இயற்றின த்ரமிடாசார்யரைப்பற்றியும் விவாத நூலில் உள்ள சுஷ்கவாக்ஜால ப்ரபஞ்சமோ அளவு கடந்தது. இந்நூலாசிரியர் முடிவாக ஸித்தாந்தம் செய்திருப்பதென்னவென்றால் "ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் குருகூர்ச்சடகோபரென்று ப்ரஸித்தரான நம்மாழ்வார் திருவாய்மொழியருளிச் செய்திருக்கிறாரே, அந்தத் திருவாய்மொழியைத்தான் ஸ்ரீவைஷ்ணவர்கள் த்ரமிடபாஷ்ய மென்கிறார்கள், அதையருளிச் செய்த நம்மாழ்வாரைத்தான் த்ரமிட பாஷ்யகாரரென்று வழங்குகிறார்கள்." என்பதே. அவிசாரித ரமணீயமும், எம்மால் யுக்தி ப்ரமாணோபந்யாஸபூர்வகமாகக் கண்டிக்கப்பட்டதுமான இந்த வாதத்தை ஸித்தாந்தமாகக் காட்டின இந்த சாஸ்த்ரிகள் விவாத நூலின் தொடக்கத்தில் மங்களாசரண ப்ரகரணத்தில் த்ரமிடாசார்யரை ஸ்துதிப்பதாக இயற்றினவொரு ச்லோகத்தில் * आचार्यान् द्रविडाख्यया सुविदितान् स्तौमि प्रमाणीकृतान् श्रीमच्छङ्करदेशिक प्रभृतिभी रामानुजाद्यैरपि- * ஆசார்யாந் த்ரமிடாக்ய்யயா ஸுவிதிதாந் ஸ்தௌமி ப்ரமாணீக்ருதாந் ஸ்ரீமச் சங்கர தேசிக ப்ரப்ருதிபீ ராமாநுஜாத்யைரபி * என்று பொறித்துள்ளார். ஆதிசங்கராசார்ய ப்ரப்ருதிகளாலும் ஸ்ரீராமாநுஜாதிகளாலும் ப்ரமாணமாகக் கொள்ளப்பட்ட த்ரமிடாசார்யரைத் தாம் போற்றுவதாக எழுதியுள்ளார். இப்படி இருவகுப்பினராலும் ப்ரமாணமாக ஆதரிக்கப்பட்ட த்ரமிடாசார்யர் ஸம்ஸ்க்ருத பாஷாமயமாய் த்ரமிடபாஷ்யமென்று ப்ரஸித்தமான க்ரந்தத்தை யெழுதினவரான ஆசார்யராயிருக்கவேணுமேயல்லது திருவாய்மொழியை யருளிச் செய்த நம்மாழ்வாராக இருக்கமுடியாதென்பது ஸ்பஷ்டமாக விளங்கும். இதனால் விவாத நூலாசிரியர் நிஷ்கல்மஷமான வொரு நிஷ்கர்ஷ மின்றிக்கே தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லுவதும் எழுதுவதுமாயிருப்பவர் என்பது கல்வெட்டாகும்.

6. இப்படிப்பட்டவிவர் (பக்கம் 120ல்) தாம் சததூஷணீசாதநம் என்றொரு க்ரந்தமெழுதியிருப்பதாகவும் அதில் நிகமாந்த தேசிக திவ்யஸூக்திரத்நத்தைப் பொடி பொடியாக்கி யொழித்திருப்பதாகவும் கூசாமலெழுதுகிறார். இவருடைய வகுப்பிற் சேர்ந்தவொரு மஹான் சததூஷணிக்குக் கண்டனமென்று சதபூஷணி யென்றொரு அபத்த புத்தகத்தை வெளியிட்டு. நம்மிடமிருந்து சதபூஷணீவஜ்ரகுடாரத்தையும் வஜ்ரகுடாரஸாரத்தையும் வஜ்ரகுடார விஜய

த்வஜத்தையும் பெற்று சிரோ பூஷணமாகக் கொண்டு விளங்குகின்றாரென்பதை உலகமுழுதுமுணரும். இவர் தம்முடையதாகத் தெரிவிக்கிற சததூஷணீ சாதநச்சுவடி அச்சிடப்பட்டுள்ளதோ, அன்றி அச்சிடுவதற்கு ஸித்தமாக்கப்பட்டுள்ளதோ, அதுவுமன்றி ஸங்கல்ப ஸரணியிலுள்ளதோ அறியோம். த்ரமிடாத்ரேய தர்சந மென்கிற விவாத நூல் சில மாதங்கள் ஜீவித்திருக்க பாக்யம் பெற்றதுபோல் அச்சுவடிதானும் பெற்றிருக்கின்றதோ? "நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்" என்றபடி தேள் பாம்பு முதலான சில ஜந்துக்கள் தம்மிடத்து விஷமுள்ளமையை யுணர்ந்து ஏகாந்த வாஸம் செய்து போந்தாலும் விதிவசத்தால் ஒருநாள் வெளியே வாலைக்காட்டி முடிந்தொழிகின்றனவென்று காணுகின்றோம்.

7. விவாதச் சுவடியின் முகப்பில் "அத்வைதமதாவலம்பிகளான ஜனங்களுக்கொரு விண்ணப்பம்" என மகுடமிட்டு எழுதுகையில் "औपनिषद् - अनाद्यद्वैतमतव्यतिरिक्तेषु प्रायशस्सर्वेष्वपि मतेषु वस्तुतः प्रमाणप्रमेयबलयोरविद्यमानत्वेऽपि प्रमातृबलं पुष्कलमनुभूयते" என்றெழுதியுள்ளார். இந்த வாக்யத்தின் கருத்தைச் சிறிது விவரிப்போம். உலகில் ப்ரமாணம் ப்ரமேயம ப்ரமாதா என மூன்று வகுப்புண்டு. அர்த்தங்களை உள்ளபடி நிச்சயிப்பதற்கு ஸாதநமான சப்தராசிகள் ப்ரமாணமெனப்படும். அந்த சப்தராசிகளைக்கொண்டு அறுதியிடப்படும் அர்த்த விசேஷம் ப்ரமேயமெனப்படும். ப்ரமாணங்களைக்கொண்டு ப்ரமேயங்களை அறுதியிடுமவர்கள் ப்ரமாதாக்களெனப்படுவர்கள். இங்கு சாஸ்த்ரிகள் தெரிவிப்பதென்னவென்றால், உபநிஷத்ஸித்தமாயும் அநாதியாயுமிருக்கின்ற அத்வைதமத மொன்று தவிர மற்ற எல்லா மதங்களிலும் பெரும்பாலும் உண்மையாக ப்ரமாணத்திற்கும் ப்ரமேயத்திற்கும் யாதொரு வலுவும் இல்லாமலிருக்கச் செய்தேயும் ப்ரமாதாக்களின் வலம் மட்டும் பரிபூர்ணமாகக் காணப்படுகிறது என்று. இங்கு இவர் "மற்ற எல்லா மதங்களிலும்" என்றெழுதியிருந்தாலும் இவர் இச்சுவடியில் விசிஷ்டாத்வைத மதத்தையே தாக்கியெழுதிப் போவதனால் விசிஷ்டாத்வைத மதத்தையே குறிக்கொண்டு இப்படி யெழுதியுள்ளாரென்பது ஸ்பஷ்டம்; பொதுவாக எல்லா மதங்களையுமுத்தேசித்தே இப்படி யெழுதினேனென்று இவர் சொன்னாலும் சொல்லுக. இந்த வாக்யம் ஸர்வாத்மநா அஸங்கதம். எந்த மதத்தில் ப்ரமாண ப்ரமேயங்களுக்கு வலமில்லையோ அந்த மதத்தில் ப்ரமாத்ரு வலம் மட்டும் புஷ்கலமாகக் காணப்படுகிறதென்கை அஸம்பத்தம். * मानाधीना मेयसिद्धिः – மாநாதீநா மேயஸித்தி:* என்று கொண்டு ப்ரமாண வலத்தினாலே ப்ரமேயத்தை நிஷ்கர்ஷிக்க ப்ரவர்த்தித்தவர்கள் யாவரோ அவர்களே யன்றோ ப்ரமாதாக்களெனப்படுமவர்கள். ஆகவே ப்ரமாண ப்ரமேயங்கள் வலிஷ்டமாயிருப்பதுதான் ப்ரமாத்ருவலமாகப் பர்யவஸித்ததாகும். ப்ரமாண ப்ரமேயங்களுக்கு வலமில்லையென்றால் ப்ரமாத்ருவலம் எங்கிருந்து வரும். அதற்கு பௌஷ்கல்ய மென்பது ஸுதராம் அப்ரஸக்தம். 'மல்லன் பலிஷ்டன், கள்ளன் பலிஷ்டன்' என்பன போன்ற வ்யவஹாரங்களில் மல்லனுக்கும் கள்ளனுக்கும் தேஹபலம் மிக்கிருப்பதாகச் சொல்லுவது விவக்ஷிதமேயொழிய வேறு வலம் அங்கு விவக்ஷிதமன்று. 'பண்டிதன் பலிஷ்டன்' என்று சொன்னால் தேஹபல மிகுதியைக்கொண்டு அது சொல்லுவதல்ல. வித்யாபலத்தைக் கருதியே வித்வானை வலவானென்பது. இவ்வாறாக ப்ரமாணப்ரமேய ஸம்ருத்தியாகிற வலத்தையிட்டே ப்ரமாதாக்களை வலவான்களென்பது. இது நிர்விவாதமான விஷயம். விசிஷ்டாத்வைத மதத்தில் பரமாதாக்கள் வலிஷ்டர்களென்றெழுதுகிற இந்த ஶாஸ்த்ரிகளைக்கேட்போம். ப்ரமாதாக்களென்பார் யாவர்? அவர்களிடத்தில் எவ்விதமான வலம்

# முதல் விஷயம்

**திருப்பாவை மூலத்தின் படியும் பூர்வாசார்ய வியாக்கியானத்தின் படியும் * காசும் பிறப்பு மித்யாதியில் ஒரு த்வனிதானுள்ளது.**

9. * காசும் பிறப்பு மென்றுதியான சொல் தொடரில் "தயிரரவம் கேட்டிலையோ?" என்பதே ஸமாப்தியாதலால் தயிர்கடையுமோசை யொன்றுதான் இங்கு வாஸங்கம். *காசும் பிறப்பும் கலகலப்ப* என்பது உபஸர்ஜநமேயாதலால் அதனால் தெரிவிக்கப்படுகின்ற ஆபரணத்வநியானது அடையாளமாகச் சொல்லப்படுவதன்று. "காசும் பிறப்பும் கலகலப்பக் கேட்டிலையோ" என்றிங்ஙனே ஸூக்திவிந்யாஸமிருந்தால்தான் ஆபரணத்வநியும் ஓர் அடையாளமாய்க் கூறப்படுவதாகக் கொள்ள ஔசித்யமுண்டு. உள்ள ஸ்ரீஸூக்தி ஸந்நிவேசத்தை ஊன்றி நோக்கவேணும், இடைச்சிகள் மத்தினால் தயிர் கடையும்போது பூஷணங்கள் தொனிப்பதாகச் சொல்லியிருப்பது ஸ்வபாவோக்தி. ஆகவே காசும் பிறப்புமாகிற ஆபரணங்கள் கலகலவென்றொலிக்குமொலியும் இங்கு அடையாளமாகக் கூறப்படுகின்றதென்று கொள்ள வேண்டியதில்லை. மூவாயிரப்படியும் ஆறாயிரப்படியுமாகிற இரண்டு வியாக்கியானங்களையும் ஸாதாரணமாக ஸேவித்தாலே போதும், பாசுரத்திற்கு வியாக்கியானம் செய்தருளுமடைவில் மத்தினாலோசைபடுத்த தயிரரவமொன்றுதான் அடையாளங் கூறுமதாக வியாக்கியானிக்கப்பட்டுள்ளது.

10. இங்கு ஸம்வாத ப்ரமாணமாகக் கொள்ளப்பட்ட * உத்காயதீநாம் அரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம் திவமஸ்ப்ருசத் த்வனி:, ததநச்ச நிர்மந்தன சப்த மிச்ரிதோ நிரஸ்யதே யேந திசாம் அமங்களம் * என்கிற ஸ்ரீ பாகவத ச்லோகத்திலுள்ள த்வநியையும் சேர்த்து ரஸவுமாக வியாக்கியானம் செய்தருளுகையில் ஆஹத்ய மூன்று த்வநிகளைக் காட்டி இவை உன் செவியில் விழுந்திலவோவென்று கேட்பதாக உரை செய்யப்பட்டுளது. திருப்பாவைப் பாசுரத்திலேயோ மூன்று த்வநிகளும் சொல்லப்பட்டிருப்பதாக ஆசாரியர்கட்குத் திருவுள்ளம் கிடையாது. உபாத்தமான ஸ்ரீ பாகவத ச்லோகத்தில் மூன்று த்வனிகள் சொல்லப்பட்டிருப்பதாகவும் திருவுள்ளம் கிடையாது. ச்லோகத்தில் எத்தனை த்வநிகள்? என்கிற விசாரமே நமக்கு வேண்டா. விவாதப் பாசுரத்தில் ஆனைச்சாத்தத்தின் கீசுகீசென்றொலியும் தயிரரவமுமாகிற இரண்டு த்வநிகளே அடையாளமாகக் கூறப்படுவனவென்று திண்ணமாக வெண்ணுக,

11. கோபிகைகளின் பூஷண த்வநியையும் கீத த்வநியையுங்கூட அடையாளமாய்க் கூறுவதாகப் பூர்வாசார்ய வியாக்கியானங்களினால் தெரியவருகிறதே அது பிசகா? என்று கேட்குமவர்கட்குச் சொல்லுகிறோம், இந்தப் பாசுரத்தை யருளிச்செய்த ஆண்டாள் *உத்காயதீநாமித்யாதி ஸ்ரீ பாகவத ச்லோகாநுஸந்தாந புரஸ்ஸரமாகவே அருளிச்செய்தாளென்பது நிஸ்ஸந்தேஹமாகத் தெரியவருவதனால் ச்லோகத்தையும் பாசுரத்தையும் ஒரு திரியாகத் திரித்து அருளிச்செய்த அர்த்தம் என்று கொள்வது பாங்கு. "கண்ணனுடைய கண்ணழகிலேயீடுபட்டுப் பாடுவதாக வியாக்கியானத்திலுள்ளது. பாசுரத்திலோ கண்ணழகைப் பற்றின பேச்சே கிடையாது, *அரவிந்தலோசநம் உத்காயதீநாம்* என்று ச்லோகத்திலிருப்பதால் அதைத் திருவுள்ளம் பற்றியே பாட்டொலியை ப்ரஸ்தாவித்தருளினார்கள் வ்யாக்யாதாக்கள்- என்பது பாலிசனுமறியக் கிடக்கின்றது. அப்படிச் சொல்லிவிடலாமா? பாசுரத்திற்கு வியாக்கியானம் செய்தருளுமாசாரியர்கள் பாசுரத்தில் இல்லாதவற்றையும் சேர்த்துக் காட்டுவது தகுமா? என்று தளும்பி நிற்பவர்களுக்கு நாம் தெரிவிந்ததும் தெரிவிப்பதும் யாதெனில்,

12. வடமொழி வியாகரணத்தில் * யோகவிபாகாத் க்வசித் இஷ்டஸித்தி:* என்று ஒன்றுண்டு; அந்த ரீதியைத் தழுவிய நம் ஆசாரியர்கள் அருளிச்செயல் வியாக்கியானங்களை நிர்வஹித்திருக்கக் கண்டிருக்கிறோம். [ அதை மேலே விவரிப்போம். ] அந்த ரீதியில் இங்கும் நிர்வஹித்து *காசும் பிறப்பு மித்யாதியான ஒரு வாக்யத்திலேயே மூன்று த்வநிகளையும் கொள்ளுவதாக நிரூபிக்கப் பாங்குள்ளது. காசும் பிறப்பு மித்யாதியானது ஏகவாக்யமாகக் காணப்படினும் மூன்று வாக்யார்த்தமாகக் கொள்ளப்படலாம். எங்ஙனெயென்னில்; (1) காசும் பிறப்பும் கலகலப்பக் கேட்டிலையோ? என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுமளவில் ஆபரண த்வநி அடையாளமாகக் கூறப்படுவதாய்க் கொள்ளலாகும். (2) வாசநறுங் குழலாய்ச்சியரரவம் கேட்டிலையோ என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுமளவில் ஸங்கீதத்வநி அடையாளமாகக் கூறப்படுவதாகக் கொள்ளலாம். இனி மூன்ருவது ஸுஸ்பஷ்டம்; நிர்விவாதம். பாசுரத்திலே மூன்று த்வநிகளையும் ஆசாரியர்கள் கொண்டதாகக் காட்ட வேண்டுமானல் இந்த மார்க்கமொழிய வேறு மார்க்கம் கிடையாது. இதுதான் நிஷ்கண்டகமான மார்க்கம். மற்றது ஸகண்டகமே.

### ப்ரக்ருத விஷயத்தில் யோகவிபாக ப்ரக்ரியையின் ஔசித்யத்தை நிரூபித்தல்

13. *காசும் பிறப்பு மித்யாதியான சொல் தொடரில் யோகவிபாகப்ரக்ரியையிஞல் கோபிகளின் கீதத்வநியைக் கொள்ளும் விதத்தைக் கீழே நாம் உபபாதித்திருக்கிறோம். " காசும் பிறப்பும் கலகலப்பக் கேட்டிலையோ " என்று அன்வயித்துப் பொருள்கொள்ளாவிடில் இப்பாட்டில் ஆபரணவொலியை அடையாளமாகக் கூறினதாகக் கொள்வதற்கு உப்பத்தி கிடையாதென்பது அறிஞர்களின் உள்ளத்தில் ஊறியுள்ளது. இவ்வண்ணமாகவே "வாசநறுங் குழலாய்ச்சிரரவம் கேட்டிலையோ" என்று அன்வயித்துப் பொருள் கொள்ளாவிடில் கீதத்வநியை அடையாளமாகக் கூறுவதாகக் கிடைக்கமாட்டாது. ஆகவே, இவ்விரண்டும் யோகவிபாக ப்ரக்ரியையிஞல்தான் ஸித்திக்கக்கடவது. இவ்விஷயத்தில் பிறருடைய ஆக்ஷேபம் ஸமூலோந்மூலனம் செய்யப்படுவது காணீர். *" யோகவிபாகாத் இஷ்டஸித்தி: என்னும் பரிபாஷையில் யோகசப்தத்திற்கு ஸூத்திரம் என்று பொருள். ஸூத்ரத்தைப் பிரித்து இரு வாக்கியங்களாக ஆக்கி இரு கருத்துக்களைக்கொண்டு இஷ்டங்களான சொல் வடிவங்களை ஸாதித்துக்கொள்வது முறை-என்பதுதான் மேற்கூறிய பரிபாஷையின் கருத்து. பாணிநிமஹர்ஷியின் எந்த எந்த ஸூத்திரத்தில் மேற்கூறிய யோகவிபாக ப்ரக்ரியையைக் கொண்டு இஷ்டமான சொல் வடிவத்தை ஸாதித்துக் கொள்ளலாமென வையாகரணர் கூறியிருக்கின்ருர்களோ; அந்த அந்த ஸூத்ரத்தைத் தவிர ஏனைய பாணிநிஸூத்ரங்களிலே இந்த ப்ரக்ரியையை நாமாகக் கொள்ளுதல் கூடாது. இந்த ப்ரக்ரியை இஷ்டமான சொல் வடிவம் ஸாதிப்பதற்குக் கொள்ளப்படலாமேயொழிய இலக்கிய நூல்களில் பொருளை அறுதியிட்டுக் கொள்வதற்குக் கொள்ளப்படலாகாது- என்பது பிறருடைய வலிதான ஆக்ஷேபம். இது மிகவும் பல்பஜமானது. யோகவிபாகமென்று நாம் எழுதியிருக்கவில்லை; யோகவிபாக ப்ரக்ரியையென்று எழுதியிருக்கிறோம். வையாகரணர்களின் யோகவிபாகம் போன்றதானவொரு ப்ரக்ரியையென்று விவக்ஷிதம். ஸூத்ரமாகவே யிருக்கவேணுமேயல்லது இலக்கிய நூலாக இருக்கக்கூடாதென்றும், சொல் வடிவத்தை ஸாதிப்பதற்காக இருக்கவேணுமேயொழிய அர்த்தத்தை அறுதியிடுவதற்காக இருக்கக்கூடாதென்றும் சொல்லுவதானது நம் ஆசாரியர்கள் போயிருக்கிற வழியை அடியோடு அறியாமையிஞலத்தனை

> "நம் ஆசார்யர்கள் அருளிச்செயல் வியாக்கியானங்களில் இன்னவிடத்தில் யோகவிபாக ப்ரக்ரியையையே ஆதாரமாகக்கொண்டு பொருளை இவ்வாறு அறுதியிட்டிருக்கிருர்களென்பதை உதாஹரணமெடுத்துக்காட்டி ஸமர்த்திக்க வேண்டியது அவசியம்"

என்று எழுதியிருக்கிருர்கள். இது மிகவும் யுக்தமான ஜிஜ்ஞாஸை. மற்ற விஷயங்களை

வீணாகப் பரப்பியிருப்பதை விட்டிட்டு இவ்வொரு விஷயத்தை மட்டும் எழுதியிருந்தால் அழகாயிருந்திருக்கும் ஆர்ஜவத்துடன் இவர்களுடைய ஜிஜ்ஞாஸையை ஶ்ரமம் பண்ணித் தருகின்றோம்.

14. திருப்பல்லாண்டில் *பையுடைநாகப்பகைக் கொடியானுக்குப் பல்லாண்டு கூறுவனே* என்றவிடத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை இருவகையான பொருள்களை யருளிச்செய்திருக்கிறார். நாகத்திற்குப் பகையான கருடனை த்வஜமாகயுடையவனுக்குப் பல்லாண்டு பாடுவதாக ஒரு பொருள், இது வ்யாக்யான நிரபேக்ஷமாக யாவரும் சொல்லக்கூடிய பொருளே. இப் பொருள் தவிர வேறு வகையான பொருள் ஒருவர் நெஞ்சிலும் தோன்றாது; தோன்ற வழியு மில்லை. 'பையுடை நாகம்' என்பதை க்ரமேண அந்வயித்துக்கொண்டு போவது தவிர, அவ்வளவிலே யொடித்து "பையுடை நாகத்தானுக்குப் பல்லாண்டு" என்றும் கொண்டிருக்கிறார் பெரியவாச்சான் பிள்ளை. இது எங்ஙனே பொருந்தும்? என்று கேட்பாரைத் தெளிவிக்க வேண்டுமானால் யோகவிபாக ப்ரக்ரியையினால் இங்ஙனே பொருளருளிச் செய்யப்பட்டது. என்றுதான் சொல்லியாக வேண்டும். மற்ற இலக்கிய நூல்களில் இங்ஙனே யோஜனையும் பொருள் பணிப்புமிருப்பதாக நமக்குத் தெரியவரவில்லை. நம் ஆசாரியர்கள் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஸாகர பாரதர்சிகளாகயிருந்துகொண்டு திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களிலே யிழிந்தவர்களாகையாலே ஸம்ஸ்க்ருத சாஸ்திர மர்யாதைகளை இதிலே அதிதேசித்தருளுகிறார்கள். *காவலில் புலனை வைத்து* என்கிற திருமாலைப் பாசுரத்தை வியாக்கியானித் தருளுமிடத்து "இந்திரியங்களைக் காவலில்லாதபடி வைத்து" என்று அர்த்தம் செய்தருளி மூலத்திலுள்ள சப்தஸந்நிவேசத்திற்கு இங்ஙனே உரைசெய்யப் பாங்குண்டோ? என்று தாமே கேட்டுக்கொண்டு இது மீமாம்ஸகர்களின் பத்ததியென்று ஸமாதானமருளிச் செய்துள்ளார் பெரியவாச்சான் பிள்ளை. மீமாம்ஸா சாஸ்த்ரத்திலிருந்து அந்த பத்ததியை ப்ரக்ருதத்திற்குப் பொருத்தமானதொரு ஸம்ஸ்க்ருத த்ருஷ்டாந்தங் காட்டி எமது நெஞ்சில் பதிய வைக்க வேணுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம். இவர்களின் கோரிக்கையின்படி நாம் *பையுடை நாகப் பகைக் கொடியானுக்கென்னுமிடத்தை யெடுத்துக் காட்டினதுபோல இவர்களும் நமது கோரிக்கையின்படி யெடுத்துக்காட்டக் கடமைப்பட்டவர்களென்பதை ஸவிநயம் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறோம்.

15. இதற்கு மேல் இவர்கள் சொல்லக்கூடியதொன்றுண்டு; *பையுடை நாகப் பகைக் கொடியானுக் கென்னுமிடத்தை யெடுத்துக்காட்டினது நன்றே; ஆனால் அது யோகவிபாக ப்ரக்ரியைக்கு நிதர்சன பூமியாக ஆகமாட்டாது. இப்படி பூர்வாசார்யர்கள் ஸாதித்திருக்கவுமில்லை; ஆகவே யோகவிபாக ப்ரக்ரியையினால் பாசுரத்தில் கோபிகளின் கீதத்வநி தெரிவிக்கப்பட்டதாக எழுதினது ஸமஞ்ஜஸமன்று- என்று.— இதற்குச் சொல்லுகிறோம், *பையுடை நாகப்பகைக் கொடியானுக்கு* என்றவிடத்தில் 'பையுடை நாகத்தானுக்கு' என்கிற ஒரு அந்வயமும் 'நாகப்பகைக் கொடியானுக்கு' என்கிற மற்றோரந்வயமுங்கொண்டு இருவகைப் பொருள்கள் அருளிச்செய்யப்பட்டிருப்பது அபலபிக்கப்போகாதது. இது விலக்ஷணமும் அபூர்வமுமான அந்வயக்ரமம் என்பதை விவேகிகள் உணர்வார்கள். இதனை யோகவிபாக ப்ரக்ரியையென்று பெரியார் உபதேசித்து வருகிறார்கள். "அந்த ப்ரக்ரியையன்று; வேறு ப்ரக்ரியை" என்னில்; ஓம் என்று அஞ்ஜலிபந்தத்துடன் இசைந்து கொள்வோம். விலக்ஷணமான இந்த ப்ரக்ரியைக்கு ஒரு பெயரிடவேணும். பிறர் எந்தப் பெயரிட்டாலும் ஸம்மதமே. யோகவிபாக ப்ரக்ரியையென்பதை ஸாங்கேதிகமென்று கொள்க. பிறர் இடும் ஸங்கேதத்தை மறுப்போமல்லோம் *கீசுகீசு பாசுரத்தில் ஸ்பஷ்ட ஸித்தமான தயிரரவத்தோடு நில்லாமல் ஆய்ச்சியரின் ஆபரணவொலியும் கீதவொலியும் ஸித்திக்க வேணுமென்று விரும்பினால்

''காசும் பிறப்பும் கலகலப்பக் கேட்டிலையோ?'' ''வாசநறுங்குழலாச்சியரரவம் கேட்டிலையோ?''

என்னுமிந்த யோஜனைகளை அவலம்பித்தேயாகவேணுமென்பது சிலாகிதம். இங்ஙனேயான யோஜனை பூர்வாசார்ய ஸம்மதமென்பதை நிர்விவாதமாக இசைந்துகொள்வதற்காகவே *பையுடை நாக ஸ்தலத்தையே எடுத்துக்காட்டினோம். அவ்விடத்திற்குப் பிறர் உபபத்தி கூறியேயாக வேண்டும்; அதே உபபத்திதான் இங்கும். अत्र लोखिनीं चालयन्तु परे ॥

16. *உத்காயதீநாமரவிந்தலோசநமித்யாதி ச்லோகத்தில் கோபிகைகளின் கீதத்வநியொன்றுதான் முக்கியமாகச் சொல்லப்பட்டுள்ளது. தயிரரவமானது உபஸர்ஜநமாகவேயுள்ளது; * தத்நச் ச நிர்மந்தநசப்த மிச்ரித: * என்றன்றோவுள்ளது. ' தத்நச் ச நிர்மந்தந ஜாத சப்த:'' என்றிருந்தால் அதற்கும் ப்ராதாந்யம் சொல்லலாம். அப்படியில்லை. ஆனாலும் அந்த ததிநிர்மந்தந சப்தமும் இங்கு ப்ராதாந்யேந விவக்ஷிதமென்றே கொள்வோம். இங்கு ஆபரணத்வநி ஸாக்ஷாத்தாம் காட்டப்பட்டிருக்கவில்லை. அதுவும் காட்டப்பட்டிருப்பதாகக் கொள்வதற்கு ஔசித்யலேசமும் கிடையாது. மூன்றாவது பாதத்திலுள்ள வகாரத்தை அநுக்தஸமுச்சயபரமாகக் கொண்டு அதனால் ஆபரணத்வநியும் காட்டப்பட்டதாகக்கொள்ள இடமுண்டென்று சிலர் கருதுவது மிகத் தவறு. ச்லோகத்திலுள்ள வகாரம் த்வநியைச் சொல்லும் பதத்தோடு சேர்ந்திருந்தால் ஒரு த்வநியானது மற்றொரு த்வநியை ஸமுச்சயிக்கிறதென்னலாம். '' अरविन्दलोचनमुद्रायतीनां ध्वनिः दधिनिर्मन्थनशब्दश्च दिवमस्पृशत '' என்று ச்லோகமிருந்தால் இந்த வகாரமானது மற்றொரு த்வநியை ஸமுச்சயிக்கிறதென்னப் பொருந்தும். ச்லோகமோ அப்படியில்லை. '' दध्नश्च - தத்நச்ச '' என்றிருப்பதை யுற்று நோக்கவேணும். இந்த வகாரம் வ்ரஜாங்கனைகளை [ கோபிகளை ] ஸமுச்சயிக்குமதாய் உக்த ஸமுச்சயபரமாகுமேயொழிய அந்த கோபிகளிடத்துள்ள ஆபரணங்களை ஸமுச்சயிக்குமதாக ஒருநாளுமாக மாட்டாது. கோகுலத்திலுள்ள ஆடு மாடுகளை ஸமுச்சயிப்பதாகக் கொண்டு, க்ருஷ்ண விரஹத்தாலே கத்துகின்ற ஆடு மாடுகளின் கனைத்தலொலியும் இங்குச் சொல்லப்படுகிறதென்று கொண்டால் இதற்கு ஒருவாறு பொருத்தமுளதாகுமேயன்றி ஆபரணத்வநியும் காட்டப்படுவதாகக் கொளவதற்கு அவகாசலேசமும் கிடையாது.

17. இதைக் கொள்ளவேண்டிய ஆவச்யகதை என்ன? என்பதையன்றோ புத்திமான்கள் முன்னம் விவேகிக்க வேண்டும். ப்ரக்ருதம் திருப்பாவை வியாக்கியானமேயொழிய ஸ்ரீ பாகவத வியாக்கியானமன்று. ஸ்ரீ பாகவதத்தை வியாக்யானித்துக்கொண்டு போமவர்கள் '' अत्र गोपीनामाभरणध्वनिकथनमपि विवक्षितम् '' என்றெழுதியிருந்தால் இது அநுக்த ஸமுச்சாயகமான வகாரத்தினால் ஸித்தம் என்று कथञ्चित् சொல்லலாம். ஏகதேசோதாஹரணமாக இடையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ள ஸ்ரீ பாகவத ச்லோகத்தில் திருப்பாவையிலுள்ளதெல்லாமிருப்பதாகக் காட்டவேணுமென்று கருதுவதே அஸமஞ்ஜஸம். '' कस्योदरे हरविरिञ्चमुखः प्रपंच इत्यत्र चकारेण इन्द्रादयोऽपि समुच्चिता भवन्ति '' என்று ஒரு மேதாவி எழுதிவைத்திருக்கிறாரென்று கேட்டிருந்தோம், இங்கே வகாரமேதென்று கேட்க, ' ப்ரபஞ்ச: என்றிருக்கிறதேயென்றாராம். அந்த வாக்யார்த்தமே இதுவுமென்னத் தட்டில்லை.

### * சக்ஷுர் தேவாநாமுத மர்த்யாநாம் * என்பது பற்றிய தெளிவு.

18. நமது பூருவாசாரியர்கள் வியாக்கியானங்களில் ஸம்வாதப்ரமாணமாக வெடுத்துக்காட்டும் மேற்கோள்களில் உள்ளதெல்லாம் ப்ரக்ருத மூலத்திலிருக்க வேணுமென்றாவது ப்ரக்ருத மூலத்திலுள்ளதெல்லாம் மேற்கோள்களிலிருக்க வேணுமென்றாவது நிர்ப்பந்தம் கிடையாது என்கிற தத்துவத்தை நாம் எழுதினபோது இங்ஙனே எழுதி

19 ஶாஸ்த்ரங்களில் अभ्युपगम्यवाद‌ம் अन्वारुह्यवाद‌மென்றுற்போன்ற வாதங்கள் ப்ரஸித்த மானவை. * எம்பெருமானார் தரிசனமென்றேயிதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்- அம்புவியோர், இந்தத் தரிசனத்தை யெம்பெருமானார் வளர்த்த. அந்தச் செயலறிகைக்கா * என்கிற தத்துவமறியாத சிலர் பகவத் ராமாநுஜமதம் நவீநமென்று அக்காலத்தில் ப்ரத்ய வஸ்தாநம் பண்ண, அதற்கு अभ्युपगम्य समाधान‌த்தைப் பூர்வார்த்தத்திலும் பாரமார்த்திக ஸமாதாநத்தை உத்தரார்த்தத்திலும் வெளியிட்டருளினர் தேசிகன். எம்பெருமானார் தர்சனம் நவீன மென்கிறீர்களா? அஸ்து; அப்படியே இசைவோம்; அதனாலென்ன குறை? ஆயிரமாண்டுகட்டு முன்பு வெட்டப்பட்ட கிணறு ஒன்று; நேற்று வெட்டப்பட்ட கிணறு ஒன்று; இவற்றுள் புராதநமான கிணறு க்ஷாரஜலமுடையதும், நேற்றைய கிணறு கரும்பு போன்ற தீர்த்தமுடையதுமாயிருந்தால் எதற்கு ஏற்றம்? இங்கு புராதநத்வத்தைக் கொண்டு உத்கர்ஷமும் நவீநத்வத்தைக்கொண்டு அபகர்ஷமும் சொல்லுவாருண்டோ? இந்த ரீதியில் பூர்வார்த்தத்தில் வாதம் நிகழ்த்தியது அப்யுபகம்யவாதம். பாமரஜநங்கள் இதையே பரமார்த்தமாகக் கொள்ளக்கூடுமென்று உடனே உத்தரார்த்தத்தில் பகவத் ராமாநுஜ மதம் நவீநமன்று, புராதநமேயென்கிற தத்துவத்தையும் வெளியிட்டருளினர் * நிசாம்யந்தாம் யத்வா நிஜமதிதிரஸ்கார விகாராந் நிராதங்காஷ் டங்கத்ரமிடகுஹதேவப்ரப்ருதய: * என்று. ஏவஞ்ச, இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தம் பூர்வ பக்ஷபரமென்பதும், உத்தரார்த்தம் ஸித்தாந்த பரமென்பதும் மிதமதிகளும் எளிதிலுணரக் கூடியது.

20. சாரீரகமீமாம்ஸையில் * कृत्स्नप्रसक्तिर्निरवयवत्वशब्दकोपो वा * என்றொரு ஸூத்ரம். நிரவயவமான ப்ரஹ்மம் ஜகத்தாகப் பரிணமிக்கிறதென்னும்போது ப்ரஹ்மம் முழுவதும் கார்ய பூத ஜகதாத்மநா பரிணமித்து விட்டதென்ன வேண்டிவரும்; ஏகதேசபரிணாமம் என்னில், ப்ரஹ்மத்திற்கு ஸாவயவத்வம் கொள்ள வேண்டி வருகையாலே நிரவயவமென்று சொல்லி யிருக்கிற ச்ருதி விரோதிக்கும். ஆகையாலே ப்ரஹ்மத்திற்குக் காரணத்வம் சொல்லுவது சேராது — என்று இந்த ஸூத்ரம் தெரிவிக்கின்றது. இது கேவலம் பூர்வபக்ஷ ஸூத்ரம். * श्रुतेस्तु शब्दमूलत्वात् * இத்யாதிகளான ஐந்து ஸூத்ரங்கள் மேலே ஸித்தாந்த பரங்களாக விளங்குகின்றனவென்பதை அபலாபம் செய்து * க்ருத்ஸ்ந ப்ரஸக்திரித்யாதியான பூர்வபக்ஷ ஸூத்ரத்தை மட்டுங் காட்டி "பரப்ரஹ்மத்திற்குக் காரணத்வம் அநுபபந்நமென்று ஸூத்ர காரர் தாமே முடிவு செய்தார்" என்று சொல்லுவார்க்குத் துணையானவரன்றோ இவர். இதற்கு மேல் * न प्रयोजनवत्त्वात् * என்றொரு ஸூத்ரம். பொதுவாக "ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே" ப்ரயோஜநமின்றி மூடனும் ஒரு காரியம் செய்யமாட்டானென் றிருப்பதால் ப்ரஹ்மம் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறதென்னும்போது இதற்கொரு ப்ரயோஜநமிருக்க வேண்டும்; ஸ்வப்ரயோஜநமோ பரப்ரயோஜநமோ எதுவும் இங்குச் சொல்ல முடியாது. பகவான் இயற்கையாகவே அவாப்தஸமஸ்த காமனாகையாலே அவனுக்கு ஜகத் ஸ்ருஷ்டியால் ஒரு ப்ரயோஜநமுண்டாகிறதென்னவொண்ணாது; ஜகத் ஸ்ருஷ்டியானது ஜீவனுக்கு ஆத்யாத்மி காதி துக்க ஹேதுவாகக் காண்கையாலே இதனால் ஜீவனுக்கொரு ப்ரயோஜநமுண்டாகிற தென்றும் சொல்லப்போகாது; ஆகவே பரப்ரஹ்மம் ஸ்ருஷ்டிகர்த்தாவன்று - என்பது இந்த ஸூத்ரத்தின் பொருள். இதுவும் பூர்வபக்ஷ ஸூத்ரமென்பதையும், மேலே * லோகவந் து லீலா கைவல்யம் * என்று ஸித்தாந்த ஸூத்ரமுள்ளதென்பதையும் மறைத்து "பரப்ரஹ்மம்

3.

ஸ்ருஷ்டிகர்த்தாவென்றென்று ஸூத்ரகாரர் தாமே சொல்லி வைத்தார்'' என்று சொல்லிப் பாமரப்ரதாரணம் பண்ணுவார்க்கு இவர் ஸஹோதரரே. மேலே * सप्तगतेर्विशेषितत्वात् * என்றொரு ஸூத்ரம். ஏழு இந்திரியங்கள் மட்டுமே ஜீவனோடு கூடச் செல்வதாகக் காண்கையாலும், யோகதசையில் ஏழு இந்திரியங்களையே விசேஷித்துச் சொல்லியிருக்கையாலும் இந்திரியங்கள் ஏழு - என்பது இந்த ஸூத்ரத்தின் பொருள். இதுவும் பூர்வபக்ஷ ஸூத்ரமே. * हस्तादयस्तु स्थितेऽतो नैवम् * என்கிற மேல்ஸூத்ரத்தினால் சக்ஷுராதிகளான இந்திரியங்கள் காண்பது முதலான காரியங்களுக்கு ஸாதகமாய்க் கொண்டு ஜீவனுக்கு உபகரணமாயிருப்பது போல ஹஸ்தம் முதலான கருமேந்திரியங்களும் ஜீவன் சரீரத்தினுள்ளிருக்கும் போது ஆதாநாதி க்ரியைகளுக்கு ஸாதகமாய்க்கொண்டு உபகரணமாயிருக்கையாலே கீழ்ச்சொன்ன இந்திரிய ஸங்க்யாநியமம் ஒவ்வாது; பஞ்ச ஜ்ஞாநேந்திரியங்களும் பஞ்ச கர்மேந்திரியங்களும் மநஸ்ஸு ஒன்றுமாகப் பதினொரு இந்திரியங்கள உள்ளவையே - என்று ஸித்தாந்தம் செய்திருப்பதை அபலபித்து, பூர்வபக்ஷ ஸூத்ரத்தை மட்டுங்காட்டி 'இந்திரியங்கள் ஏழுதானென்று ஸூத்ரகாரரே சொல்லி வைத்தார்' என்று சொல்வார்க்கு இவர் 'கிம் கனிஷ்ட: கிமு ஜ்யேஷ்ட: ?

21. மூன்றாவது அத்யாயம் இரண்டாவது பாதத்தில் * उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत् * *प्रकाशाश्रयवद्वा तेजस्त्वात् * என்றிரண்டு ஸூத்ரங்களும் பூர்வபக்ஷபரங்கள். மேலே * பூர்வவத்வா * என்பது ஸித்தாந்தஸூத்ரம். இது கீழ்ஸூத்ரங்களிற் சொன்ன இரண்டு பூர்வபக்ஷங்களையும் நிரஸித்து ஸித்தாந்தப் பொருளையுணர்த்துகின்றது. ப்ரஹ்மமீமாம்ஸையில் இங்ஙனே யுதாஹரிக்கத் தக்க விடங்கள் பலவுண்டு. மேலே கண்செலுத்தாமல் பூர்வபக்ஷ ஸூத்ரத்தையே ஸித்தாந்தமாகக் கண்டும் காட்டியும் மயக்குமவர்களைப்போல் இவரும் *யதிக்ஷமாப்ருத்த்ருஷ்ட மித்யாதி ஸப்ததிஸூக்தியில் ஸித்தாந்தபரமான உத்தரார்த்தத்தில் கண்மூடியிருந்து பூர்வபக்ஷபரமான பூர்வார்த்தத்தைக் காட்டி ஸ்ரீராமாநுஜதர்சநம் நவீநமென்று தேசிகரே ஸ்தாபித்திருக்கிறாரென்று எழுதிவைப்பது சில பாமரர்களையும் வஞ்சிக்கவல்லதன்று. சங்கரபகவத்பாதாள் * உத்பத்த்யஸம்பவாத் * இத்யாதிகளான சில ஸூத்ரங்கள் பூர்வபக்ஷபரங்களாயிருக்கவும் அவற்றை ஸித்தாந்தபரமாக வியாக்கியானித்திருந்தாலும் * க்ருத்ஸ்நப்ரஸக்தி......... * ந ப்ரயோஜநவத்த்வாத் * இத்யாதிகளான பல ஸூத்ரங்களைப் பூர்வபக்ஷஸூத்ரமாகவே வைத்து வியாக்கியானித்துள்ளார்கள். சாஸ்திரங்களில் இருவகையான ஸரணிகள் உள்ளன; * आनुमानिकमप्येकेषामिति चेन्न शरीररूपकविन्यस्तगृहीतेर्दर्शयति च * स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् * उपसंहारदर्शनान्नेति चेन्न क्षीरवद्धि * இத்யாதிஸூத்ரங்கள் (இதி சேத்) என்று பூர்வபக்ஷத்தையும் (ந) என்று ஸித்தாந்தத்தையும் ஸ்பஷ்டமாகக் காட்டுவன. * न प्रयोजनवत्त्वात् * இத்யாதி ஸூத்ரங்கள் ஸித்தாந்த ஸூத்ரம்போல் போல் ப்ரமிக்கச் செய்வனவாய் பூர்வபக்ஷபரங்களாகவே நிற்கின்றன. உத்தரஸூத்ரத்திலுள்ள துகார வாகாராதிகளால் தத்வவித்துக்கள் தத்வ நிர்ணயம் பெறுகிறார்கள். * विज्ञानादिभावे वा तदप्रतिषेधः * पूर्ववद्वा * गुणाद्वालोकवत् * இத்யாதி ஸூத்ரங்களில் உள்ள வாகாரமானது எப்படி மதாந்தரவ்யாவ்ருத்தி பண்ணித் தருகிறதோ; அப்படியே ப்ரஸ்துத யதிராஜஸப்ததி ஸூக்தியிலும் மூன்றாவது பாதத்

திலுள்ள வாகாரமானது உத்தரார்த்தம் ஸித்தாந்தபரமென்பதை நன்கு காட்டித் நு கின்றது; சாஸ்த்ரரத்நாகரபிருதுக்கு உண்மையாக உரியவர்களன்றோ இதனையுணரமுடியும்.

22. ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போதே * **भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्याः संचिक्षिपुः तन्मतानुसारेण सूत्राक्षराणि व्याख्यास्यन्ते** * என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இந்த திவ்ய ஸூக்தியை அநவரதமும் அநுஸந்திக்குமவர்களான ஸ்ரீமந்நிகமாந்த தேசிகாதிகள் பகவத்ராமாநுஜதர்சநத்தை நவீநமென்று நெஞ்சாலும் நினைக்க ப்ரஸக்தியில்லையாயிருக்க எழுதியும் வைத்தார்களென்று கூசாமல் எழுதுவது மஹத்தான ஸாஹஸமன்றோ; ஒவ்வொரு விஷயத்திலும் இவருடைய க்ரஹணமே இத்தகைத்து. த்ரமிடாசார்யரும் ப்ரஹ்மநந்தியென்பவரும் அத்வைத ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களான பூர்வாசார்யர்களிற் சேர்ந்தவர்கள் என்று இவர் எழுதியிருப்பதும் மருள். உபநிஷத்து, ப்ரஹ்மஸூத்ரம் முதலானவற்றுக்கு ஸர்வாத்மநா விப்ரதீபமான அபிப்ராயங்களை ப்ரஹ்மநந்தியோ த்ரமிடாசார்யரோ ஒருகாலும் நெஞ்சிற்கொள்ளார்கள். வ்யாஸமஹர்ஷியும் அத்வைத ஸம்ப்ரதாயப்ரவர்த்தகரென்று ஸ்வகோஷ்டிகளில் பேசிக் கொள்ளுமிவர்கள் டங்க த்ரமிடாதிகளைக் குறித்தும் அங்ஙனே பேசிக்கொள்வதனால் என்னாகும்?

## போதாயநவ்ருத்தி க்ரந்தத்தின் உண்மை வரலாறுகள்.

23. த்ரமிடாசார்யர் பாஷ்யம் செய்ததுண்டா இல்லையா? என்பதை விசாரித்து நிர்ணயிக்க வேண்டுவது அவசியமானது. இது போலவே பகவத் போதாயநர் வ்ருத்தி க்ரந்தம் செய்ததுண்டா இல்லையா? என்பதையும் விசாரித்து நிஷ்கர்ஷிக்கவேணும். இவருடைய சுவடியில் (பக்கம் 126ல்) த்ரமிடாசார்யரும் ப்ரஹ்ம நந்தியும் ப்ரஹ்மஸூத்ர வியாக்கியானம் செய்தவர்களல்லர் என்றும், ப்ரஹ்மஸூத்ரத்தின் மேல் போதாயநவ்ருத்தியென்பது ககனகுஸுமம் என்றும் எழுதப்பட்டுள்ளது. பரிமிதமதிகளான இக்காலத்தவர்கள் ஸ்வச்சந்தமாக எதையும் எழுதலாம், ஏறக்குறைய ஆயிரமாண்டுகட்கு முன்பு ஆசார்யபீடத்திலமர்ந்து எழுந்தருளியிருந்தவர்களும் அக்ருதகந்தமுமறியாதவர்களுமான ஆசார்ய ஸார்வபௌமர்கள் "**பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம்** ..." என்று ஸிலாலிகிதமாக்கியுள்ளதைப் பொய்யென்று பேசவோ எழுதவோ இவரார்கொல்! "**ஸர்வம் மித்ப்யா**" என்னுமிவர்கள் இதை மித்யா என்பதில் வியப்புமில்லை. ஸ்வாமியெம்பெருமானாரும் கூரத்தாழ்வானும் காச்மீரமண்டலத்திற் கெழுந்தருளி சாரதா பீடத்தில் வ்ருத்திக்ரந்தத்தைக் கடாக்ஷித்தருளின வரலாறு அக்காலத்திலேயே க்ரந்தங்களில் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. ஸ்ரீஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்திருந்த கருடவாஹநபண்டிதர் இயற்றிய திவ்ய ஸூரிசரிதத்தில் 17, 18 ஸர்கங்கள் பகவத்ராமாநுஜவைபவபரங்கள். அவ்விடத்தில் போதாயந வ்ருத்திக்ரந்தத்தை ஸ்வாமி ப்ரயாஸப்பட்டு ஆர்ஜித்துக்கடாக்ஷித்தருளின விருத்தாந்தம் பல சுலோகங்களால் பரக்கப் பேசப்பட்டுள்ளது. ராமாநுஜார்ய திவ்யசரிதமென்னும் மஹத்தான (தமிழ்) சரித்திர நாலிலும் 139, 140 பக்கங்களில் இவ்வரலாறு வெகு விரிவாக வரையப்பட்டுள்ளது. [இவற்றையெல்லாம் **சாங்கரசிரோபூஷா** என்கிற நமது ஸம்ஸ்க்ருத நூலில் விசதமாகக் காண்க.] இங்ஙனே பல புராதந நூல்களில் பிராமாணிகர்களால் காட்டப்பட்டுள்ள

இதிஹாஸங்கள் இன்றளவும் இதரமத வித்வான்களில் ஒருவராலும் தூஷிக்கப்படாமல் வெற்றிபெற்று விளங்குகின்றன.

24. இந்த சாஸ்த்ரிக்கு ஸயூத்யரும் நெடுநாளாக விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய தூஷண தீக்ஷிதருமான மற்றொரு சாஸ்த்ரி யெழுதி வெளியிட்டுள்ள **சதபூஷணீ**யில் உப க்ரமத்திலேயே எழுதப்பட்டுள்ளதாவது— "**विशिष्टाद्वैतसिद्धान्तो भगवद्बोधायनवृत्तिमूलो भगवद्रामानुजेन .... उपबृंहितः**" என்று. விசிஷ்டாத்வைதஸம்ப்ரதாயம் போதாயனவ்ருத்தி க்ரந்த மூலகமென்பது அந்த சதபூஷணியில் ஸக்ருத்தல்ல, அஸக்ருத் எழுதப்பட்டுள்ளது. "பகவத் போதாயநரென்பவர் பராசரபாராசார்யாதிகளோடொத்த வொரு மஹர்ஷியே யல்லது 'ய: கச்சந' என்னத்தக்க வழிப்போக்கரல்லர். அத்தகைய பெருமைவாய்ந்த மஹர்ஷியினாலியற்றப்பட்ட வ்ருத்தி க்ரந்தத்தை மூலமாகக்கொண்டது விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயமென்று இவர் தாமே யெழுதுவதனால் பகவத்ராமாநுஜமதம் அப்ராமாணிகத்வ சங்கைக்கு நெடுந்தூரத்திலுள்ளதென்பதும் பரம ப்ரமாண மூர்த்தந்ய மென்பதும் அதி ப்ராசீந மென்பதும் இவர் தம்மாலேயே நிலைநாட்டப்பட்டதாயிற்று. 'வ்ருத்திக்ரந்தமென்று ஒன்று கிடையவே கிடையாது' என்றும் 'அதை மூலமாகக் கொண்டது விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயம் என்று சொல்லுவது பொருந்தாது' என்றும் பூஷணீகாரர் எழுதியிருக்க வேண்டும். அப்படியெழுதவேண்டும் வழியையறியாமல் 'பகவத் போதாயந வ்ருத்திக்ரந்த மூலகம் பகவத் ராமாநுஜ ஸித்தாந்தம்' என்று அடிக்கடி யெழுதுவதும் அந்த ஸித்தாந்தத்தை தூஷிப்பதுமாயிருக்கின்ற பூஷணீகாரர் மஹர்ஷிகளிடத்திலேயே மாத்ஸர்யம் பூண்டவரென்பது சிலாலிகிதமாகின்றது" என்று நாம் நம்முடைய சதபூஷணீ வஜ்ரகுடார ஸாரத்தில் (பக்கம் 25ல் பாரா 53ல்) எழுதி வெளியிட்டோம். இதைப் பற்றி பூஷணீகாரர் இன்றளவும் ஒரு மறுமாற்றமுமெழுதிற்றிலர். ஆனால், தாம் அப்படி யெழுதியது அஸமஞ் ஜஸமே யென்றும் போதாயநவ்ருத்திக்ரந்தமென்று ஒரு நூல் அடியோடு கிடையாதென்றும் எழுதவேண்டியதுதான் என்று திடமாக நெஞ்சில் கொண்டார். இதைத் தமது கையினா லெழுதுவதற்கு வெட்கங்கொண்டவர் ப்ரக்ருத சாஸ்த்ரியைக் கொண்டு அங்ஙனே யெழுதுவித்தார் என்பதுதான் தத்துவம். இவரும் இதைப் பூர்வோத்தர வ்யாஹதமாகவே எழுதிவைத்துள்ளாரென்பது மேலே விசதமாகும்.

25. இங்கு விசேஷஜ்ஞர் யாவரும் குறிக்கொள்ள வேண்டியது கேளீர். பகவத் ராமாநுஜருடைய ஸ்ரீபாஷ்யமானது போதாயநவ்ருத்தி க்ரந்தத்தையும் தந்மூலக த்ரமிடா சார்யாதி பாஷ்ய க்ரந்தத்தையும் மூலமாகக் கொண்டதென்பதை ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் இன்று நேற்று எழுதி வைத்திலர். ஆயிரமாண்டுகளாக ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகாதிகளான பல திவ்ய க்ரந்தங்களினால் ப்ரகாசிதமான அர்த்தமேயிது. பகவத் ராமாநுஜருக்கு போதாயநவ்ருத்தி க்ரந்தாதிகளைக் கடாக்ஷிக்க நேர்ந்த வரலாறுகளும் (மேலே உபபாதித்த விதமாக) ப்ராசீந நூல்களினாலேயே ப்ரகடிதமானவை. ஆக இந்த திவ்ய க்ரந்தங்களெல்லாம் மறைந்திருப்பனவல்ல; **पठनपाठनपद्धत्या दिगन्तव्यापि**களாயிருப் பவை. இவற்றில் பொய்யான விஷயம் பொறிக்கப்பட்டிருக்கின்றதென்று தோன்றினால் எதிரிகள் இதை அக்காலத்திலேயே வெளியிடாமலிருந்திருக்க ப்ரஸக்தியில்லை. ஸ்மார்த்த வைஷ்ணவ வாதவிவாதங்களோ நெடு நாளாகவே தொடர்ந்து வருகின்றன. யாரேனு

மொரு மதாந்தரஸ்தர் போதாயநவ்ருத்திக்ரந்த விஷயகமான இதிஹாஸத்தை மறுத்தே யிருப்பர். இன்றளவில் ஒருவர்கூட மறுத்திருக்கவில்லை. " **तन्मतानुसारेण सूत्राक्षराणि व्याख्यास्यन्ते** " என்கிற ஸ்ரீபாஷ்ய திவ்ய ஸூக்தியையும் ப்ராசீநர்கள் முதற்கொண்டு ஆது நிகரான அனந்த க்ருஷ்ண சாஸ்த்ரிகள் வரையில் ஒருவராலும் க்ஷேபிக்கப்படவில்லை.

26. இற்றைக்கு நானூறு வருடங்களுக்கு முன்பு ஜனித்திருந்த அப்பயதீக்ஷிதர்வாள் நாற்றுநான்கு க்ரந்தங்கள் செய்தவரென்றும் நாநாமதக்ரந்தங்களைப் பரிசீலனை செய்த வரென்றும் ப்ரஸித்திபெற்றவர். அவர் விசிஷ்டாத்வைதஸித்தாந்ததூஷணத்திலும் தீக்ஷை கொண்டிருந்தவர். அவர்களுங்கூட 'ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள் பொய்யான இதி ஹாஸத்தைக் கல்பனை செய்தவர்கள்' என்று நெஞ்சாலும் நினைத்ததில்லை. ***लक्ष्मणार्यहृदयानुसारिणी रच्यते नयमयूखमालिका*** —லக்ஷ்மணார்ய ஹ்ருதயாநுஸாரிணீ ரச்யதே நயமயூக மாலிகா* என்று ப்ரதிஜ்ஞை செய்து பகவத் ராமாநுஜருடைய திருவுள்ளத்தை யடியொற்றின நயமயூகமாலிகையை இயற்றினவரான அந்த தீக்ஷிதர் எவ்வளவு ஆர்ஜவத்தைக் காட்டியிருக் கிறரென்று கண்ணுடையார் காணவேணும். பகவத் ராமாநுஜமதம் நவீனமானதென்று தீக்ஷிதர் எண்ணியிருந்தாராகில் அத்தகைய நவீன மதத்தின் அர்த்த தத்துவத்தை விளக்கு வதற்காக ஒரு பெரிய நூலைப் பணித்திருப்பரா? என்பதையும் விவேகிகள் விமர்சிக்க வேணும்.

27. இதற்கு மேல் இந்த சாஸ்த்ரி ஒன்று சொல்லக்கூடும்;— ப்ராசீநர்கள் க்ஷேபிக்க வில்லையென்பது கொண்டு நம்முடைய க்ஷேபத்திற்குக் குறைகூறலாகுமோ? க்ஷேபிப்பதில் ப்ராசீநர்களுக்கு ஸாதந ஸாமக்ரிகள் இல்லாமலிருக்கலாம். ப்ராசீநர்கள் சொல்லாத தூஷணங்களை நவீநர்கள் சொல்லலாகாதென்று ஏதேனுமரசன் கட்டளை யுண்டோ? மதாந்தரங்களில் புதிய புதிய தூஷணங்களை நீங்கள் தாமும் சொல்லுவதில்லையோ? என்று. இது வழியை மீறின வார்த்தையாகும். அர்த்தங்களை தூஷிப்பதிலோ பூஷிப்பதிலோ புதுப் புது யுக்திகள் தோன்றுகைக்கீடான மேதாவிலாஸங்கள் அவரவர்களுக்கு ஸம்பவிக்கக் கூடியவைகளே. ப்ரக்ருத விஷயம் அப்படிப்பட்டதன்று. ப்ராசீநர்களான ஆசார்ய ஸார்வ பௌமர்களால் ப்ரமாணமாகக் கொள்ளப்பட்ட க்ரந்த விசேஷம் அடியோடு கிடையவே கிடையாதென்று இன்று காலை யெழுதத் தொடங்கியிருக்கிறீர்கள். இவ்விஷயத்தில் பிராசீநர் களான உங்கள் தலைவர்களுக்குக் கிடைக்காத ப்ரமாணஸாமக்ரி உமக்கு என்ன கிடைத்த தென்று கேட்டால் * **दिशिदिशि विलोलनयनः** * என்கிறபடியே திசைதொறும் விழித்து நிற்க வேணுமத்தனை. ஸ்ரீபாகவதம் ஆர்ஷமன்று என்றும், உத்தர ஸ்ரீராமாயணம் வால்மீகி மஹர்ஷி செய்ததேயன்று என்றும் சொல்லுபவர்களால் அதற்கு என்ன ப்ரமாணம் காட்ட முடியுமோ; அதேபோன்ற ப்ரமாணந்தான் வ்ருத்திக்ரந்தம் கிடையவே கிடையாதென்கிற உந்தமக்கும் காட்ட முடியும்.

28. த்ரமிடாசார்ய ப்ரஹ்மநந்திகளின் க்ரந்தங்களைப் பற்றியும் பரஸ்பர விருத்தமாகத் தலைகாலில்லாமல் எழுதிக்கொண்டு போருமிவர் 'அந்த க்ரந்தங்கள் இப்போது கிடையவே கிடையாது' என்று எழுதித்தீரவேண்டியதாயிற்று. 'இப்போது அவை கிடையா' என்றால்

1957 ஆம் ஆண்டில் அவை மறைந்து போயினவென்று பொருளா? இந்த நூற்றுண்டில் மறைந்து போயினவென்று பொருளா? ஆயிரக்கணக்கான (அல்லது) பல நூற்றுக்கணக்கான ஆண்டுகட்கு முன்னே பிடித்து இந்த க்ரந்தங்கள். நமது நாட்டில் ப்ரசார சூந்யங்களாயின வென்பது யாவருமிசைந்தது. இவையும் காச்மீர மண்டலத்தில் சாரதாபீடத்தில் இருக்குமென்றே மஹான்கள் கூறுவது. அது எப்படியாயினுமாகுக. போதாய்நவ்ருத்தி க்ரந்த விஷயத்தில் போலஹம்நூலிலுள்ள தடுமாற்றங்களை இன்னமும் விவரிக்கிறோம். (பக்கம் 27ல்) "போதாயந வ்ருத்தி விஷயத்தில் தத்வ சந்த்ரிகா க்ரந்தத்தின் கருத்தையநுவதிப்பது" என மகுடமிட்டுப் போலஹர் எழுதியுள்ளதில் போதாயநவ்ருத்திக்ரந்த ஸத்பாவமே தமது கையினல் தாமே ஸ்தாபித்ததாகிறது. 'போதாயநவ்ருத்தி ககந குஸுமமே' என்று ஒருபுறத்திலெழுதுமிவர் 'போதாயநவ்ருத்தி க்ரந்தம் வஸ்து ஸ்திதியில் உள்ளதுதான்' என்று ஸ்தாபிக்கும் வகையில் ஸயூத்ய க்ரந்தங்களிலிருந்து பங்க்திகளை உதாஹரித்துக் காட்டுகிறுர். இவ்வழகை அறிஞர் ஆழ்ந்து நோக்கவேணும். உமாமஹேச்வர சாஸ்த்ரி இயற்றிய தத்வ சந்த்ரிகையிலிருந்து இவரெடுத்துக் காட்டியுள்ள விஷயங்கள் கேண்மின்;—

29. "போதாயநவ்ருத்தியை யநுஸரித்து ப்ரஹ்ம ஸூத்ரவ்யாக்யானம் செய்வதாக ராமாநுஜபாஷ்யத்தில் எழுதியிருக்கையாலே ஸமூலமென்று தெரியவருகிற அந்த பாஷ்யமும் உபாதேயந்தானென்னில்; இது சேராது; போதாயநவ்ருத்தியானது ஹெளபரம் என்பதில் ப்ரமாணமில்லாமையாலே. நீ அநாப்தனுகையாலே உன்னுடைய வார்த்தையைக் கொண்டு போதாயந வ்ருத்திக்கு ஹெளபரத்வம் நிர்ணயிக்கமுடியாது. அந்த வ்ருத்திக்ரந்தம் பேதப்ரதிபாதகமாக இருந்தால் பாஷ்யகாரர்கள் அதை தூஷித்தேயிருப்பர்கள். ஆனல் தூஷித்திருக்கவில்லை. அதை தூஷிக்காதவளவில் தம்முடைய பாஷ்யம் நிலைநின்றதாகாது. விவரணம் பாமதி முதலான நூல்களில் பட்டபாஸ்கரபாஷ்யம் அடிக்கடி தூஷிக்கப்பட்டிருக்கிறதே; மஹர்ஷி ப்ரணீதமான போதாயநவ்ருத்தியானது தம் பக்ஷத்திற்கு விரோதியாக இருந்திருக்குமாகில் பாமதி முதலானவற்றில் எப்படி தூஷிக்கப்படாமலிருக்கும்? * प्राणस्तथाऽनुगमात् * இத்யாதிகளில் சிற்சிலவிடங்களில் பாஷ்யாதிகளில் வ்ருத்தி க்ரந்தம் தூஷிக்கப்பட்டிருப்பது வாஸ்தவம்; ஆனல் அந்த தூஷணம் த்வைத விஷயத்தில் அல்ல; வேறு அர்த்த விஷயத்தில்தான்." என்னுமிவ்விஷயங்களைப் போலஹர் உதாஹரித்துள்ளார். இவற்றுல் போதாயநவ்ருத்தி க்ரந்தமென்பது உண்மையில் உள்ளதுதானென்று சிலாலிகிதமாகிறது. வ்ருத்தி க்ரந்தம் அத்வைத பரமேயொழிய த்வைத பரமன்று என்று தத்வ சந்த்ரிகாகாரர் மன்றுடுகிறுரேயொழிய அந்த க்ரந்தமே கிடையாதென்கிற துர்வாதத்தில் அவர் கை வைத்ததில்லை. பாஷ்யாதிகளில் வ்ருத்தி க்ரந்தம் சிலவிடங்களில் தூஷிக்கப்பட்டிருப்பதாகவும் சிலவிடங்களில் தூஷிக்கப்படாமலிருப்பதாகவும் ஸ்பஷ்டமாக வெழுதியுள்ளார். அடியோடு இல்லாததான வ்ருத்திக்ரந்தம் எப்படி தூஷிக்கப்பட்டதென்று போலஹர் ஆராயமாட்டிற்றிலர். மலடிமகன் ப்ரஹரிக்கப்பட்டான் என்றே, ககநாரவிந்தம் கசக்கப்பட்டதென்றே விவேகிகள் பேசுவதுண்டோ?

30. இதற்கு மேல் எழுதியிருப்பதையுங் காண்மின்; "இந்த போதாயநவ்ருத்தியானது உத்ஸந்நமாய்விட்டது" என்கிறுர். அடியோடு இல்லாதவொரு நூலை உத்ஸந்நமாய்

விட்டதென்றல் இது பொருந்துமோ? உத்ஸந்ந சப்தார்த்தத்தையே இவர் அறிந்திலர்
போலும். உத்ஸந்நமென்பதற்கு லோபமடைந்ததென்று பொருள். இல்லாத தொரு
வஸ்துவுக்கு லோபம் எங்ஙனே சொல்லமுடியுமென்பதைக்கூட நம் போலஹர் ஆராய்ந்திலர்.
தமது கொள்கைக்கு இந்த வாக்யம் அநுகூலம், இந்த வாக்யம் ப்ரதிகூலம் என்பதைக்கூடத்
தெரிந்து கொள்ளமாட்டாதவிவர் பெரும்பாலும் தமக்கு ப்ரதிகூலங்களான வாக்ய ராசி
களைக் கொண்டே தமது சுவடியை நிரப்பியுள்ளார்.

31. மற்றொரு விசேஷமும் கேளீர்; தத்வ சந்த்ரிகாகாரருடைய வாக்யராசியில் 'இந்த
போதாயந வ்ருத்தி உத்ஸந்நமாய்விட்டது' என்றதற்குப் பிறகு " इदं च स्वेनवोक्तम् अति-
विस्तीर्णां बोधायनस्य वृत्तिं पूर्वाचार्यास्संचिक्षिपुरिति। " என்று எழுதப்பட்டுள்ளது. 'போதாயந.
வ்ருத்திக்ரந்தம் லுப்தமாய்விட்டதென்பதை பகவத் ராமாநுஜர் தாமே தெரிவித்திருக்
கிறர்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி அதற்கு ப்ரமாணமாக * भगवद्बोधायनकृतां विस्तीर्णां
ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्यास्संचिक्षिपुः * என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்தியை எடுத்துக் காட்டியுள்ளா
ரந்தோ!. " ஸர்வம் மித்த்யா என்பது * சுக்லாம்பரதரம் விஷ்ணும் * என்கிற சுலோகத்
திறல் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதென்று எழுதுபவர்க்குத் துணையானவரே
யிவர். 'மிக விரிவான வ்ருத்தி க்ரந்தத்தைப் பூர்வாசார்யர்கள் சுருக்கி யெழுதினர்கள்'
என்றிவ்வளவேயன்றோ ஸ்ரீராமாநுஜர் எழுதியிருப்பது. இதனல் வ்ருத்திக்ரந்தம் உத்ஸந்ந
மென்று எங்ஙனே காட்டிற்றாகு மென்பதைப் போலஹர் விமர்சிக்கலாகாதா ? 'விஸ்த்ருத
மான மஹாபாரத க்ரந்தம் சம்பூபாரதத்திறல் ஸம்க்ஷிப்தம்; விஸ்தீர்ண்மான ஸ்ரீராமாயணம்
சம்பூராமாயணத்திறல் ஸங்க்ருஹீதம் என்று ஒருவர் சொன்றல் பாரத ராமாயணங்கள்
லுப்தமென்று இதனல் சொல்லப்பட்டதாகுமோ?

32. இதற்கு மேல் " வ்ருத்தி க்ரந்தம் லுப்தமாகவில்லை யென்றேயிருக்கட்டும்,
ஆறலும் அது உபாதேயமன்று " என்று தாம் கட்டளையிடுகிறர். அது உபாதேயமன்று
என்பதற்கு என்ன காரணமுரைக்கிறரென்று பார்க்கவேணும். " ஸ்ரீராமாநுஜர் அதை
ப்ரமாணமாகக் கொண்டபடியாலே அது நமக்கு உபாதேயமன்று ". என்றெழுதியிருந்தா
ராகில் அழகாயிருக்கும். பின்னை என்ன ஹேது எழுதியிருக்கிறரென்னில்; " वेदान्तब्रह्मसूत्र-
ग्राहकमन्वादिस्मृतिशतविरोधस्य दर्शितत्वात् " என்றெழுதியுள்ளார். 'வ்ருத்தி க்ரந்தமானது
மநுஸ்ம்ருதி முதலான பல க்ரந்தங்களுக்கு விருத்தமென்பது காட்டப்பட்டிருக்கையாலே'
என்று இதை ஹேதுவாக வெழுதுகிறர். அந்த விரோதம் யாராலே எவ்விடத்தில் காட்டப்
பட்டிருக்கின்றதென்று நாம் கேட்க வரவில்லை; வெகு விரோதம் காட்டப்பட்டிருப்ப
தாகவே அஞ்ஜலிபந்தத்துடன் அங்கீகரிப்போம். அடியோடு இல்லாததான வ்ருத்தி
க்ரந்தத்தில் ஸ்ம்ருதிமத விரோதம் எப்படி காட்டமுடியுமென்பதை நம் போலஹர் சிந்திக்க
மாட்டிற்றிலரே. ஸுப்ரஸித்தமான வொரு க்ரந்தத்திலன்றோ விரோதோத்பாவந ப்ரஸக்தி
யுள்ளது. " உபவர்ஷரியற்றிய வ்ருத்தி க்ரந்தத்திற்கு விருத்தமாயிருப்பதனலும்
போதாயநவ்ருத்தி அநுபாதேயம் "என்று அடுத்தபடியாக எழுதப்பட்டுள்ளது. "போதாயந
வ்ருத்தியில் அத்வைத விருத்தமான வியாக்கியானம் கிடையவே கிடையாது " என்றும்
ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிறது. இப்படியாகவுள்ள தத்வ சந்த்ரிகா க்ரந்த பங்க்திக

ளெல்லாவற்றாலும் போதாயநவ்ருத்தி க்ரந்தத்தின் அஸத்பாவம் தூஷிக்கப்பட்டு ஸத்பாவமே ஸ்தாபிக்கப்பட்டதென்பதை பாலிசனுமறிவனே.

33. இங்கே நமது வினாவை யாவரும் கவனிக்கவேண்டும். 'போதாயநவ்ருத்தி க்ரந்தமானது அத்வைத ஸித்தாந்த ஸ்தாபநபரமேயொழிய விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்திற்கு அநுகூலமேயன்று' என்பது வாதமா? 'அந்த வ்ருத்திக்ரந்தம் அவதரித்ததே கிடையாது' என்பது வாதமா? என்று கேட்கிறோம். முந்தினவாதமே எமது வாதமென்னில், பரம ஸந்தோஷம்; இதில் இப்போது நாம் மறுப்புரைக்க அவசியமேயில்லை. பரிபூர்ணமான வ்ருத்திக்ரந்தம் நமக்குக் கிடைத்தால் அப்போது அதனுடைய ப்ரக்ரியை இத்தகைத்தென்று நாமறிந்து கொள்ள முடியும். 'அத்வைத ஸித்தாந்தத்தையே வ்ருத்தி க்ரந்தம் ஸ்தாபிக்கின்றது' என்று தாராளமாக முறையிடுங்கள். உபநிஷத்துக்களும் ப்ரஹ்ம ஸூத்ரங்களும் அத்வைத பரங்களே யென்று முறையிடுவதுபோல இந்த முறையீடும் நன்கு நிகழட்டுமே. போலஹருடைய வாக்ப்ரபஞ்சமோ போதாயந வ்ருத்தி யென்பது அடியோடு கிடையாதென்பதே. இது அஸமஞ்ஜஸ தமமென்றும், இவர் தாமெடுத்துக் காட்டியுள்ள பங்க்திகளாலேயே இவருடைய கொள்கை நீருக்கப்பட்டொழிந்ததென்றும் நம்முடைய உபபாதநம் கல்பத்திலுமழியமாட்டாதது.

34. "ஆளவந்தாருடைய க்ரந்தத்தைப் பார்த்தே ஸ்ரீராமாநுஜர் பாஷ்யமியற்றினர். போதாயநவ்ருத்தியைப் பார்த்து இயற்றவில்லை" என்று (பக்கம் 25ல்) மகுடமிட்டுப் போலஹர் எழுதியிருப்பதும் அஸமஞ்ஜஸம். தேசிகன் நியாய பரிசுத்தியில் "**तदेतद्यामुनाचार्यैरागमप्रामाण्ये संभावितसमस्तपूर्वपक्षयुक्तिनिराकरणेन प्रपञ्चितम्; तदनुसारेणैव भाष्यकारैः श्रीपाञ्चरात्राधिकरणं व्याख्यातम्**" என்றருளிச் செய்திருப்பதுண்டு. இதனால் ஸ்ரீபாஷ்யகாரர் போதாயந வ்ருத்தியைப்பார்த்து ஸ்ரீபாஷ்யமியற்றியருளவில்லை யென்று ஸூசிதமாகிறதென்கிறார் போலஹர். எப்படி ஸூசிதமாகிறதென்று இவரை ஒரு வித்வத் கோஷ்டியில் கேட்க விரும்புகிறோம். ஸ்ரீபாஞ்சராத்ராகம அப்ராமாண்ய விஷயத்தில் ஸம்பாவித ஸமஸ்த பூர்வ பக்ஷ யுக்தி ராசிகளின் கண்டனம் போதாயந வ்ருத்தி க்ரந்தத்திலேயே இருந்திருக்குமானால் ஸ்ரீபாஷ்யகாரர் அதையநுஸரித்தே பாஞ்சராத்ராதிகரணத்தை வியாக்கியானித்தருளியிருப்பர். ஸமுத்பூத பூர்வபக்ஷ யுக்தி நிராகரணமென்றும், ஸம்பாவித ஸமஸ்த பூர்வ பக்ஷ யுக்தி நிராகாரணமென்றும் வியாக்கியான க்ரந்தங்களில் இரண்டு ஸரணிகளுண்டு; ஏற்கெனவே தோன்றியிருந்த பூர்வபக்ஷ யுக்திகளை நிராகரிப்பது ஸமுத்பூத பூர்வ பக்ஷ யுக்தி நிராகரண மெனப்படும். இனிமேல் ஸம்பவிக்கக்கூடிய பூர்வபக்ஷ யுக்திகளை ஊஹித்தறிந்து அவற்றையும் கண்டிப்பது ஸம்பாவித ஸமஸ்த பூர்வபக்ஷ யுக்தி நிராகரணமெனப்படும். வ்ருத்தி க்ரந்தத்தில் ஸமுத்பூத பூர்வபக்ஷ யுக்தி நிராகரணம் மட்டும் இருந்திருக்கும். ஸம்பாவித ஸமஸ்த பூர்வபக்ஷ யுக்தி நிராகரண மென்பது ஆளவந்தார் அருளிச்செய்த ஆகம ப்ராமாண்யத்திற்குத் தன்னேற்றம். ஆகவே அந்த க்ரந்தத்தையநுஸரித்து ஸ்ரீபாஷ்யத்தில் பாஞ்சராத்ராதிகரணத்தை ஸ்வாமி நிர்வஹித்தருளினர். இதனால் ஸ்ரீ பாஷ்யம் வ்ருத்திக்ரந்த மூலகமென்பது எப்படி நிரஸிக்கப்பட்டதாகும். ஸ்ரீ பாஷ்யத்தில் ஸ்வாமி "**तन्मतानुसारेण सूत्राक्षराणि व्याख्यास्यन्ते**" என்று ஸுஸ்பஷ்டமாக அருளிச்செய்திருக்குமதை ந்யாயபரிசுத்தி ஸூக்தியானது எப்படி இல்லை செய்யவல்லது?

ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்திகளைப் போலவே அவருக்கு ஆசார்யர்களான ஸ்ரீமந் நாதமுனிகள் நம்மாழ்வார் முதலானோருடைய ஸ்ரீஸூக்திகளையுமநுஸரித்து ஸ்ரீபாஷ்யத்தில் பல விஷயங்கள் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. இதனால் "**தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே**" என்கிற ப்ரதிஜ்ஞைக்கு யாதொரு சேதமுமுண்டாகாதன்றோ? "**பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:**" என்றவிடத்திலுள்ள பூர்வாசார்யபதம் டங்க த்ரமிடாதிகளைப்போலே ஸ்ரீமந்நாதமுநி யாமுநமுநிப்ரப்ருதிகளையும் சொல்லவல்லது என்பதைப் போலஹர் தெரிந்துகொள்ள ப்ரஸக்தி ஏது?

35. இந்த ப்ரகரணத்திலும் போலஹர் எழுதியிருக்கிறார் "**शशशृङ्गायमाणबोधायनवृत्ति-ग्रन्थ** — சசச்ருங்காயமானபோதாயநவ்ருத்திக்ரந்த." இத்யாதி. போதாயந வ்ருத்திக்ரந்தமானது முயற்கொம்புதான் என்று பரிஹஸித்தெழுதியுள்ளார். இவர், தம்முடைய ஸஜாதீயர்களின் வார்த்தைகளை விபுலமாக அநுவதித்தும் உதாஹரித்துமிருப்பதிலிருந்து போதாயநவ்ருத்திக்ரந்தத்தினுண்மை அசைக்க முடியாதபடி தேறிவிட்டதினால் இவர்களின் வ்யாஹத பாஷித்வமொன்று தான் விளங்கும்.

36. பிறரொருவர் எழுதியிருப்பதாகப் பௌலஹர் எடுத்துக்காட்டியிருப்பன இந்த வாக்கியங்கள்; —

"**यत्तु श्रुतप्रकाशिकाकारस्य कल्पनम् परेषामार्षव्याख्यानातिलंघित्वम् * उपासात्रैविध्यात् * सर्वत्र प्रसिद्धोपदेशादित्यादिषु स्पष्टतरमिति, दोषारोपमनुकरोति**" என்று. ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பிறர் செய்திருக்கிற வியாக்கியானம் ஆர்ஷவ்யாக்க்யானத்தை மீறியிருக்கிற தென்னுமிடம் ***உபாஸாத்ரைவித்யாத்* ஸர்வத்ரப்ரஸித்தோபதேசாத் *** இத்யாதி ஸ்தலங்களில் மிகவும் ஸ்பஷ்டமாகக் காணலாமென்று ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸாதித்திருக்கிறாராம். ஒரு ஸ்வைரிணியானவள் பதிவ்ரதையின்மீது தோஷாரோபணம் செய்வதோடொக்குமாமிது. மேலே உதாஹரித்த ஸம்ஸ்க்ருத வாக்யங்களின் பொருள் இதுவே. "ஆர்ஷவ்யாக்யானத்தை மீறிச் சொல்லுபவர்கள் பிறர்" என்னும் வார்த்தையை நாமாவது மற்றொருவராவது எழுதியிருந்தால் நிரூபணமில்லாமலுமிருக்கக்கூடும். ச்ருதப்ரகாசிகாசார்யர் இங்ஙனே யருளிச் செய்தாரென்றால் அபேத்யமான உபபாதநங்கள் இல்லாமலிருக்குமோ? அவர் * உபாஸாத்ரைவித்யாத் * இத்யாதி ஸ்தல விசேஷங்களை எடுத்துக் காட்டியன்றோ இங்ஙனே யெழுதியுள்ளார். விபுலமான நிரூபணங்களையும் அற்புதமாகச் செய்திருக்கிறார். அவற்றை க்ரஹிக்கவும், அவற்றுக்கு உத்தரமுரைக்கவும் சக்தியில்லாதவர்கள் உபாலம்பம் தவிர வேறு என்ன செய்ய முடியும். கேவலம் உபாலம்பஸாரங்களான வார்த்தைகளை யெழுதுவதற்கு விசேஷமாக வாசிக்கவேண்டிய ஆவச்யகதையுமில்லை. குலடா ஸ்வைரிணீ குட்டிநீத்யாதி வார்த்தைகளை வர்ஷித்து க்ரந்த பூரணம் செய்யும் சக்தி இவர்களுக்கே அஸாதாரணமானது.

37. ச்ருதப்ரகாசிகாசார்யருடைய ஸூக்திவிசேஷமொன்றை யெடுத்துக்காட்டி "**तदेतत् मानवपुराणादिवेदोपब्रह्मण (?) सहस्रभगवदुपवर्षवृत्त्यादिबाधकाज्ञानविजृम्भितम्**" என்று மெழுதப்பட்டிருக்கிறது பிறரால், இதைவிட அதிகமாகவுமெழுதுவதில் என்ன ப்ரயாஸமுள்ளது, உலகில் எத்தனை ப்ரமாண க்ரந்த ஜாலங்கள் விளங்குகின்றனவோ, அத்தனையையும் கோர்வையாக வெடுத்து "இந்த ப்ரமாண ஜாலங்களுக்கெல்லாம் மிகவும் விருத்தமாகவே ஸ்ரீராமாநுஜப்ரப்ருதிகள் ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களை இயற்றியுள்ளார்கள்" என்று மிகவும் ஸ்தூலமான அக்ஷரங்களாலே முத்ரணம் செய்து எங்கும் பரவவிட்டு அநாயாஸமாக ஸ்வஸித்தாந்த ஸ்தாபனம் செய்து கொள்ளலாமிவர்கள்.

38. மிகவும் ஸாரமாக இங்கு ஒரு விஷயம் தெரிவிக்கப்படுகிறது. சாரீரக மீமாம்ஸையில் * जीवमुख्यप्राणलिङ्गान्नेतिचेन्नोपासात्रैविध्यादित्यादिसूत्रभाष्य த்தில் சங்கர பகவத் பாதாள் ": अथ वा * नोपासात्रैविध्यादाश्रितत्वादिह तद्योगादित्यस्य अयमन्योऽर्थः * என்று தொடங்கி எழுதிப் போருமிடத்தில் ரத்நப்ரபையில் " स्वमतेन सूत्रं व्याख्याय वृत्तिकृन्मतेन व्याचष्ट " என்றும், பாமதியில் " तदेवं स्वमतेन व्याख्याय प्राचां वृत्तिकृतां मतेन व्याचष्टे — अथवेति " என்றும், ஆனந்தகிரீயந்யாய நிர்ணயத்தில் " स्वमते सूत्रावयवं व्याख्याय वृत्तिकारमते व्याकरोति * अथवेति " என்றும் ஏகரூபமாக அவதாரிகை கொடுக்கப்பட்டிருக்கக் காண்கிறோம், ரத்நப்ரபையில் மேலே " इयमसंगता व्याख्या " என்று அது தூஷிக்கப்பட்டிருக்கிறது. இங்கு **வ்ருத்திகார**ரென்று அஸக்ருத் நிர்தேசிக்கப்பட்ட வ்யக்தி இன்னாரென்று இது வரை நிச்சயிக்கப்படாமலிருந்தது. இப்போது இவர்களால் நிச்சயம் பெறுவிக்கப்பட்டதாயிற்று; பகவத் போதாயநரேயென்று இவர்கள் விவரணம் காட்டிவிட்டார்களன்றோ. " प्राचां वृत्तिकृताम " என்பதனாலே அந்த போதாயந மஹர்ஷிக்கு ப்ராசீநத்வமும் காட்டப்பட்டதாயிற்று. ஏவஞ்ச போதாயந வ்ருத்திக்ரந்தத்தினுண்மை சங்கரபாஷ்யத்தினாலேயே விளக்கேற்றி வைக்கப்பட்டதாயிற்று. அந்த வ்ருத்திக்ரந்தம் தூஷிக்கப்பட்டதாகவும் காட்டுமிவர்கள் அந்த மஹாக்ரந்தத்தில் நெடுநாளாகவே தாங்கள் பகையுள்ளவர்கள் என்பதையும் காட்டினவர்களாகிறார்கள். இவ்வளவோடு இவர்களினுடைய கோலாஹலமெல்லாம் சாந்தமாயிற்றென்றும் கொள்க.

39. போலஹ ப்ரபந்தத்தில் (பக்கம் 114ல்) " बोधायनवृत्तेः पराभिमताया भगवत्पादसमयादनन्तरकालिकत्वम " என மகுடம் கொடுக்கப்பட்டு எழுதப்பட்டுள்ள விஷயம் அஸங்கதமென்பதைப் பற்றி இன்னமும் விவரிக்க வேணுமோ ? விசிஷ்டாத்வைதிகள் அபிமானிக்கிற போதாயந வ்ருத்தியானது சங்கர பகவத் பாதாளின் காலத்திற்குப் பிற்பட்டதென்பது அசட்டுவாதம். போதாயநவ்ருத்தியென்று இரண்டு கிடையாது, ஒன்றேயுள்ளது. அது சங்கர பகவத் பாதாள் காலத்திற்கு முற்பட்டதே யென்று ஸ்தாபிக்கப்பட்டு விட்டது. போதாயநர் அத்வைதியா ? விசிஷ்டாத்வைதியா ? என்று விசாரித்து நிஷ்கர்ஷிக்க வேண்டியது ஆவச்யக மென்றும், அத்வைதியானால் இவர் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களால் உபேக்ஷிக்கப் பட்டிருக்க வேண்டியவரென்றும். விசிஷ்டாத்வைதியானால் சங்கர பகவத் பாதாளால் அவச்யம் கண்டிக்கப்பட்டேயிருக்க வேண்டு மென்றும், கண்டிக்கப் படாவிட்டால் அத்வைதமதம் அப்ரதிஷ்டிதமாய் விடுமென்றும், சங்கரபாஷ்யத்தில் போதாயந வ்ருத்திக்ரந்தத்திற்குக் கண்டனம் காணப்படவில்லை யென்றும், அப்படிப்பட்ட வ்ருத்திக்ரந்தம் முன்பு இல்லாதிருந்ததே அதற்குக் காரண மென்றும் விசிஷ்டாத்வைதிகள் புதிதாக ஒரு வ்ருத்திகாரரைக் கல்பித்து அவருக்கு போதாயநரென்னும் பெயரையும் வைத்து, அவரை மஹர்ஷியாகவும் காட்டி, அவரை சங்கர பகவத் பாதாளுக்கு முந்தினவராகவும் கல்பித்து, தங்களுடைய மதத்தைத் தந்மூலக மென்று கோஷித்து ஸ்வமதோத்கர்ஷம் ஸம்பாதிக்கப் பார்க்கிறார்களென்றும், விமர்ச சக்தியில்லாத சிலர் உண்மையுணராமல் இந்த நவீந மார்க்கத்தை ப்ராசீநமாக ப்ரமித்து இதில் ஈடுபடுகிறார்களென்றும், இதனால் நமக்கு யாதொரு ஹாநியுமில்லையென்றும் எழுதிப் போகிறார் போலஹர். இதெல்லாம் ஆகாசத்தில் நின்று செய்யும் நாட்டியமே யென்பதை புத்திமான்கள் எளிதிலுணர்வர்கள். சுருக்கமாகக் கேளீர்;

போதாயநவ்ருத்தியொன்று உண்டென்பதையும், அது சங்கர பகவத் பாதாளால் தூஷிக்கப்படாமையினாலே அத்வைதமத விருத்த மன்றென்பதையும் (பக்கம் 28ல்) தத்வ சந்த்ரிகா முகத்தாலே காட்டியுள்ளார்களிவர்கள். (1) " आर्षी बोधायनवृत्तिः " (2) " सा भामत्यादिषु न दूषिता " (3) " प्राणस्तथानुगमादित्यादिषु क्वचित्क्वचिदर्थान्तरविषय एव सा वृत्तिः भाष्यादिषु दूष्यते न द्वैतविषये " (4) " किञ्च इयमुत्सन्ना बौधायनी वृत्तिः " (பக்கம் 28ல்) இத்யாதியாக வுள்ள இவர்களின் வாக்யங்கள் தங்கள் கழுத்துக்கே கத்தியாக விளங்குமவையென்பதை இவர்கள் உணர வேண்டும்.

## இடையில் ஒரு விஜ்ஞாபனம்.

40. நம்முடைய இந்த விமர்ச நூலுக்கு இலக்கான ப்ரஹ்மஸ்ரீ. போல ஹம் ராமசாஸ்த்ரிகளவர்கள் நமக்கொரு கடிதமெழுதியுள்ளார். அதிலுள்ள வாசகங்களாவன;—

10—6—58 மைலாப்பூர்.

" தாங்கள் அனுப்பிய அமிருதலஹரி பத்ரிகையிலுள்ள த்ரவிடாத்ரேய தர்சந விமர்சநம். சாங்கரசிரோபூஷா என்ற இருபுஸ்தகங்களும் கிடைத்தது. ஸந்தோஷம். ...... தாங்கள் எழுதிய புத்தகத்திலிருந்து எனது த்ரவிடாத்ரேய தர்சந புஸ்தகத்தை ஸரியாகப் பார்த்துக் கண்டனம் எழுதியதாகத் தெரியவில்லை. ஆகையால் எனது புஸ்தகத்தில் கூறப்பட்ட கருத்தைத் தங்களுக்குப் புறியும்படி விளக்கி யெழுதுகிறேன். ... ... ... ... ... *

மறுபடியும் 25—6—58ல் ப்ரயாக க்ஷேத்ரத்திற்கு ஒரு கடித மெழுதியுள்ளார். அதிலுள்ள வாசகங்களாவன;—

" ... சாங்கரசிரோபூஷாவில் 3, 4 பக்கங்களில் **अवधेयमखिलैरभिज्ञैः** என்ற விஷயத்துக்கு பதில் ஸம்ஸ்க்ருதத்தில் 15 பக்கங்கள் எழுதியிருக்கிறேன், த்ரமிடபாஷ்ய காரர் இருவரா ஒருவரா என்று கேட்ட விஷயத்திற்கு பதில். என்னுடைய புஸ்தகத்தின் அபிப்ராயத்தையும், அது கவனிக்கப்படாமல் கண்டித்திருப்பதையும் அதில் விளக்கியிருக்கிறேன். நாகரத்தில் எழுதி காஞ்சி க்ரந்தமாலா ஆபீசுக்கு அனுப்புகிறேன். ... **உங்களுடைய பத்து பரிச்சேதங்களுக்கும் ஒரே ஸமயம் பதில் எழுத அவகாசப்படாது.** இதுவே பெரிய விஷயம். த்ரமிடாசார்யாள் இரண்டு பேர் என்று தெளிவாக விளக்கம் செய்திருக்கிறது. ... தங்கள் விசார குதூஹலம் ஆனந்த கரமாயிருக்கிறது. ...... தங்கள் குண விசேஷத்தினாலும் என்னிடமுள்ள ப்ரேமாவினாலும் த்ருப்தி யடைகிறேன் ". என்பன.

அன்பர்களே !; த்ரமிடாசார்யரைப்பற்றி சாஸ்த்ரிகள் எழுதியிருப்பதென்ன ? அதற்கு நாம் எழுதி யிருப்பதென்ன ? என்பதை ஏற்கெனவே விவேகிகள் விமர்சித்திருக்கக்கூடும். மறுபடியும் இங்கு அதை நினைப்பூட்டுகிறோம். இந்த விமர்ச நூலில் (ஆரம்பத்தில் 5வது பாராவில்) எழுதப்பட்டிருக்கும் விஷயமே சாங்கர சிரோபூஷாவில் * **अवधेयमखिलैरभिज्ञैः** * என்ற மகுடத்தின் கீழ் வடமொழியில் விவரிக்கப்பட்டுள்ளது. அதை மறுபடியும் நினைப்

பூட்டுகிறோமிங்கு; " ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகளிற்காட்டிலும் மிக ப்ராசீநரான த்ரமிடாசார்ய ரென்கிற ஒரு பாஷ்யகாரர் ப்ரஸித்தராயிருந்தார். இப்பெரியாரை விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களான பூர்வாசார்யர்கள் பலர் உதாஹரித்திருக்கிறார்கள். அந்த த்ரமிடாசார்யர் இயற்றிய த்ரமிட பாஷ்யமானது நெடுநாளைக்கு முன்னமே லோபித்து விட்டதாதலால் இப்பொழுது யாருக்கும் கிடைப்பதில்லை. இந்த பாஷ்யத்தைப் பற்றியும் இந்த பாஷ்யத்தை இயற்றின த்ரமிடாசார்யரைப்பற்றியும் விவாத நூலில் உள்ள சுஷ்கவாக்ஜால ப்ரபஞ்சமோ அளவு கடந்தது. இந்நூலாசிரியர் முடிவாக ஸித்தாந்தம் செய்திருப்பதென்னவென்றால் " ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் குருகூர்ச் சடகோபரென்று ப்ரஸித்தரான நம்மாழ்வார் திருவாய்மொழியருளிச் செய்திருக்கிறாரே. அந்தத் திருவாய்மொழியைத்தான் ஸ்ரீவைஷ்ணவர்கள் த்ரமிடபாஷ்ய மென்கிறார்கள், அதையருளிச் செய்த நம்மாழ்வாரைத்தான் த்ரமிட பாஷ்யகாரரென்று வழங்குகிறார்கள் " என்பதே. அவிசாரித ரமணீயமும், எம்மால் யுக்தி ப்ரமாணோபந்யாஸபூர்வகமாகக் கண்டிக்கப்பட்டதுமான இந்த வாதத்தை ஸித்தாந்தமாகக் காட்டின இந்த சாஸ்த்ரிகள் விவாத நூலின் தொடக்கத்தில் மங்களாசரண ப்ரகரணத்தில் த்ரமிடாசார்யரை ஸ்துதிப்பதாக இயற்றினவொரு ச்லோகத்தில் * **आचार्यान् द्रविडाख्यया सुविदितान् स्तौमि प्रमाणीकृतान् श्रीमच्छङ्करदेशिकप्रभृतिभी रामानुजार्यैरपि** - * ஆசார்யாந் த்ரமிடாக்யயா ஸுவிதிதாந் ஸ்தௌமி ப்ரமாணீக்ருதாந் ஸ்ரீமச் சங்கர தேசிக ப்ரப்ருதிபீ ராமாநுஜார்யைரபி * என்று பொறித்துள்ளார். ஆதிசங்கராசார்ய ப்ரப்ருதிகளாலும் ஸ்ரீராமாநுஜாதிகளாலும் ப்ரமாணமாகக் கொள்ளப்பட்ட த்ரமிடாசார்யரைத் தாம்போற்றுவதாக எழுதியுள்ளார். இப்படி இருவகுப்பினராலும் ப்ரமாணமாக ஆதரிக்கப்பட்ட த்ரமிடாசார்யர் ஸம்ஸ்க்ருத பாஷாமயமாய் த்ரமிடபாஷ்யமென்று ப்ரஸித்தமான க்ரந்தத்தை யெழுதினவரான ஆசார்யராயிருக்க வேணுமேயல்லது திருவாய்மொழியை யருளிச் செய்த நம்மாழ்வாராக இருக்கமுடியாதென்பது ஸ்பஷ்டமாக விளங்கும். இதனால் விவாத நூலாசிரியர் நிஷ்கல்மஷமான வொரு நிஷ்கர்ஷ மின்றிக்கே தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லுவதும் எழுதுவதுமாயிருப்பவர் என்பது கல்வெட்டாகும். " இதுதான் பெரிய விஷய மென்று சாஸ்த்ரிகள் தமது கடிதத்தில் இப்போது எழுதியுள்ளார்கள். நாமும் இதையே பெரிய விஷயமாகக் கருதுகிறோம். ' த்ரமிடாசார்யாள் இரண்டு பேர் ' என்பதுதான் தம்முடைய ஸித்தாந்தமென்று சாஸ்த்ரிகள் எழுதியிருக்கிறார்கள். நாம் இதைத் தெரிந்து கொள்ளாமலிருக்கவில்லை. இங்ஙனே ஸித்தாந்தம் கொண்டிருக்கிற சாஸ்த்ரிகள் " **आचार्यान् द्रविडाख्यया सुविदितान् स्तौमि प्रमाणीकृतान् श्रीमच्छङ्करदेशिकप्रभृतिभी- रामानुजार्यैरपि** " என்று மங்கள ச்லோகமியற்றியிருப்பது விப்ரதிபம் என்பது நம்முடைய வாதம்.

*41.* இதற்கு சாஸ்த்ரிகள் எழுதியனுப்பியிருப்பதாகத் தெரிவிக்கிற பதில் 8—7—58 தேதி வரை நமக்குக் கிடைக்கவில்லை. கிடைத்தபின் அதன், ஔசித்யங்களை விமர்சிப்போம். நமது சாங்கரசிரோபூஷாவிலுள்ள பத்து பரிச்சேதங்களுக்கும் ஒரே ஸமயத்தில் பதிலெழுத அவகாசப்படாதென்று சாஸ்த்ரிகளெழுதியிருப்பது உற்று நோக்கத்தக்கது.

॥ श्रीरस्तु ॥

श्रीमते रामानुजाय नमः ।

# शाङ्करशिरोभूषाविभूषणम् ।

# சாங்கரசிரோபூஷாவிபூஷணம்.

( ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது. )

---

शाङ्करशिरोविभूषाविभूषणाख्याऽवतरति कृतिरेषा ।
शास्त्रिमहोदयलिखिता समाहितिर्नैव घटत इति वक्तुम् ॥

## முகவுரை.

ஸஹ்ருதய ஸௌஹ்ருத்ப்ரவரரான ப்ரஹ்மஸ்ரீ. போலஹம் ராமசாஸ்திரிகளவர்கள் எழுதி வெளியிட்டிருந்த த்ராவிடாத்ரேய தர்சனமென்னும் நூலிலுள்ள விஷயங்கள் சிறிதும் உபபந்நங்களல்லவென்பதை நாம் பரக்க நிரூபித்து சாங்கரசிரோபூஷா என்கிற ஸம்ஸ்க்ருத நூலையும், த்ரவிடாத்ரேய தர்சந விமர்சநமென்னும் தமிழ் நூலையும் வெளியிட்டிருந்தோமல்லவா? ஸம்ஸ்க்ருத நூலானது பத்து பரிச்சேதங்கள் கொண்டது. அவற்றில் மிக முக்கியமான பத்து விஷயங்கள் விரிவாக விளக்கப்பட்டன. அவற்றுக்கெல்லாம் சாஸ்த்ரிகளவர்கள் ஸமாதானம் வெளியிட்டேயாகவேண்டும். ஆனால் அந்த பத்துப் பரிச்சேதங்களுள் ஒரு பரிச்சேதத்தையும் தொடவில்லை. "பத்து பரிச்சேதங்களுக்கும் ஒரே ஸமயத்தில் ஸமாதானமெழுத அவகாசப்படாது" என்றும் கடிதமெழுதித் தெரிவித்துவிட்டார்கள். [அந்தக் கடிதம் அம்ருதலஹரி 177ல் வெளி வந்துள்ளது.] நம்முடைய சிரோ பூஷாவின் முகப்பில் "अवधेयमखिलैरभिज्ञैः" என்று மகுடமிட்டு இரு பக்கங்களிலெழுதப்பட்டுள்ள த்ரமிடாசார்ய விஷயகமான ஒரு சிறு விஷயத்திற்கு மட்டும் ஸமாதான மெழுதி யனுப்புவதாகத் தெரிவித்திருந்தார்கள். அந்த ஸமாதான வியாஸம், உத்தரதேச பவித்ர யாத்ரையிலிருக்கும் நமக்கு ஹரித்வார க்ஷேத்ரத்தில் ஆனி-மீ க்ருஷ்ண தசமியன்று கிடைத்தது. ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள இந்த ஸமாதான வியாஸத்திற்கு நாமும் ஸம்ஸ்க்ருதத்திலேயே பதிலெழுதியிருக்கிறோம். அது வைதிக மநோஹரா மூலமாக ஸமயத்தில் வெளிவரலாம். இந்த விசாரத்தை நாம் தமிழிலும் வெளியிட்டிருக்கிறோமாதலால் அந்த விமர்ச நூலைக் கண்டவர்கள் இதையும் காண்க வென்று இதனை முன்னம் தமிழில் வெளியிடுகிறோம்.

முகவுரை முற்றிற்று.

ஸ்ரீ சாஸ்த்ரிகளவர்களின் வியாஸத்திற்கு "शाङ्करशिरोभूषाग्रन्थोक्ताक्षेपाणां समाहितिः" என்று மகுடமுள்ளது. சாங்கர சிரோபூஷா என்கிற நூலில் சொல்லப்பட்ட ஆக்ஷேபங்

களுக்கு ஸமாதானம் என்பது இதன் பொருள். நமது நூலில் தெரிவிக்கப்பட்டுள்ள எல்லா ஆக்ஷேபங்களுக்கும் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டிருந்தால் இந்த மகுடம் பொருந்தும். ஆனால் க்ரமேண ஸகலாக்ஷேபங்களுக்கும் ஸமாதானம் தெரிவிக்க வெண்ணியே இங்ஙனம் மகுடமிட்டோமென்று சாஸ்த்ரிகள் சொல்லக்கூடும். அஸ்து என்று மேலே போகிறோம்.

இந்த ஸமாதான வியாஸத்தில் 1. 2, 3. என்று வரிசையாக லக்கமிட்டு இருபத்து மூன்று வாக்யச்ரேணிகளை ஸ்ரீ சாஸ்த்ரிகள் எழுதியுள்ளார்கள். ஒவ்வொரு வாக்யச்ரேணியிலுமுள்ளதை முக்கியமான அம்ஸம் விடாமல் சுருக்கமாக அநுவதித்து உடனுக்குடனே அதிலுள்ள உபபத்தியையோ அநுபபத்தியையோ தெரிவிக்கிறோம். ரஸமில்லாமலும் பிஷ்டபேஷணமாகவும் அவர்கள் எழுதியுள்ள விஷயங்களை ஒன்று விடாமல் நாம் விமர்சித்து எழுதிக்கொண்டுபோனால் வாசிப்பவர்களுக்கு வைரஸ்யமுண்டாகியே தீரும். அது உண்டாகாமைக்காக பதினைந்து வாக்யச்ரேணிகளுக்குள் வக்தவ்ய ஸகல விஷயங்களையும் சொல்லி முடிப்போம்.

1. வைதிக மனோஹரா ஸ்ரீபாதகரான ஸ்ரீமதண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் இயற்றிய சாங்கர சிரோ பூஷாவில் சொல்லப்பட்ட ஆக்ஷேபங்களுக்கு ஸமாதான ரூபமான பரீக்ஷணம் பாலஹம் ஸ்ரீராம சாஸ்த்ரிகளாலேயே செய்யப்பட்டது இப்போது தொடங்கப்படுகிறது. (இது. முதல் வாக்யச்ரேணியிலுள்ள விஷயம்.) இது ப்ரதிஜ்ஞாமாத்ரம் என்று தெரிவித்து மேலே போகிறோம்.

2. சாங்கர சிரோ பூஷாவின் தொடக்கத்தில் (3, 4 பக்கங்களில்) "அவதேயம் அகிலைரபிஜ்ஞை:" என்றாரம்பித்து எழுதப்பட்டுள்ள விஷயத்திற்கு முந்துற முன்னம் பதிலுரைக்கப்படுகிறது. இதற்கு சாந்தியுடன் ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமிகள் பதிலுரைக்கவேணும். (இது இரண்டாவது வாக்யச்ரேணியிலுள்ள விஷயம்.) तथाऽस्तु என்று தெரிவித்து மேலே போகிறோம்.

3. இனி மூன்றாவது வாக்யச்ரேணியில் ஸ்ரீ சாஸ்த்ரிகள் எழுதியுள்ள விஷயமாவது: 'வாசகர்களின் ஸௌகர்யத்திற்காக ஆவச்யகமான உபோத்காதமொன்று முன்னம் சிறிது எழுதப்படுகிறது; டங்கரென்றும் ப்ரஹ்மநந்தியென்றும் வழங்கப்படுகிற ஆசார்யர் சாந்தோக்ய உபநிஷத்தின்மேல் வாக்யமென்னும் விவரணம் செய்தவர். ஆகவேதான் உபபதமொன்றுமில்லாமல் வாக்யகாரரென்றே இவர்க்கு ப்ரஸித்தி. த்ரவிடாசார்யரென்பவர் அந்த வாக்ய க்ரந்தத்திற்கு பாஷ்யம் செய்தவர். ஆகவேதான் இவர் உபபதமில்லாமல் பாஷ்யகாரரென்றே ப்ரஸித்தி பெற்றவர். கௌட தேசத்தில் தோன்றியதனால் கௌடாசார்யரென்று ஒருவர் ப்ரஸித்திபெற்றிருப்பது போல், இவரும் த்ரவிடதேசத்தில் ஜனித்தது காரணமாகவே த்ரவிடாசார்யரென்று வழங்கப்பெற்றார். இவர்க்கு நிஜநாமதேயம் இன்னதென்று தெரியவில்லை. ஆக இந்த டங்காசார்ய, த்ரவிடாசார்யர்களிருவரும் மிகவும் புராதனர்கள்; ப்ரஹ்மவித்துக்களில் சிறந்தவர்கள். சங்கர பகவத்பாத பாஷ்யாதிகளான அத்வைத நூல்கள் பலவற்றிலும் ஸ்ரீ பாஷ்யாதிகளான விசிஷ்டாத்வைத நூல்கள் பலவற்றிலும் பலகால் ப்ரமாணமாக ஆதரிக்கப்பட்டவர் இந்த த்ரவிடாசார்யர். பாஸ்கராசார்யரியற்றிய ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் மட்டும் ஒரு விசை ப்ரமாணீகரிக்கப்பட்டவர்.' என்றுள்ளது.

இங்கு நாம் தெரிவிப்பதாவது:—உபபதமொன்றுமில்லாமல் பாஷ்யகாரரென்கிற வ்யபதேசம் விசிஷ்டாத்வைத பாஷ்யகாரரான ஸ்ரீராமாநுஜர் திருவவதரிப்பதற்கு முன்னே வியாகரண மஹாபாஷ்யகாரரான பதஞ்ஜலி யொருவர்க்கே நிகழ்ந்து வந்தது. பிறகு பகவத் ராமாநுஜர் திருவவதரித்து ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தபின் வேதாந்திகளின் கோஷ்டிகளிலே நிருபபதமான பாஷ்யகாரவ்யபதேசமும் பகவத்ராமாநுஜர்க்கு மட்டுமே உலகில் நிகழ்ந்துவருவது. பாஷ்யகாராசார்யரென்றும், பாஷ்யமையங்காரென்றும் ஸ்ரீவைஷ்ணவ பரம்பரையில் மட்டுமே ஆயிரமாண்டுகளாக நாமகரணம் நடைபெற்றுவருகிறது. பாஷ்யமையர் என்றோ, பாஷ்யகார சாஸ்த்ரிகளென்றோ இதுகாறும் நம் செவியில் விழுந்ததில்லை. இது கொண்டும் வேறு உபபத்திகளைக்கொண்டும் பாஷ்யகார நாமதேயம் (நிருபபதமாக) பகவத் ராமாநுஜர்க்கே அஸாதாரணமென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். வாக்யகாரர், பாஷ்யகாரர், ஸூத்ரகாரர் என்கிற வ்யபதேசங்கள் ஸாதாரணமானவை. இந்த வ்யபதேசங்கள் வையாகரணர்களின் வாக்கில் வந்தால் வாருசியும் பதஞ்ஜலியும் பாணிநியும் கொள்ளப்படுவர்கள். இங்ஙனே மற்றுங் காண்க. வேதாந்த தர்சனத்தில் பல பாஷ்யகாரர்கள் தோன்றிவிட்டார்கள். பகவத் ராமாநுஜ ரொருவர் தவிர மற்ற பாஷ்யகாரர்களைக் குறிக்க வேண்டுமானால், த்ரமிடபாஷ்யகாரர், சங்கர பாஷ்யகாரர், மத்வ பாஷ்யகாரர், நீலகண்ட பாஷ்யகாரர்......என்றிப்படி ஸோபபதமாகத்தான் சொல்லித் தீரவேண்டும். இப்படித்தான் சொல்லிவருகிறார்கள். ப்ரஹ்மஸூத்திரத்தின் மேல் ஸ்ரீராமாநுஜர் இட்டருளின பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமென்றே வழங்கப்படுவது போல, ஸ்ரீராமாநுஜரும் ஸ்ரீபாஷ்யகாரரென்றே அந்நாள் தொடங்கி ப்ரஸித்தி பெற்று வருகிறார். த்ரமிடாசார்யருக்கு இங்ஙனே ப்ரஸித்தி கிடையாது.

டங்காசார்யர் செய்த வாக்யக்ரந்தம் இப்போதுகிடைப்பதில்லையென்பது நிர்விவாதம். இந்த வாக்யக்ரந்தம் ப்ரஹ்ம ஸூத்திரத்தின்மேல் தோன்றியதென்றே ப்ராமாணிகர்கள் எழுதியுள்ளார்கள், சாந்தோக்யோபநிஷத்திற்கு மட்டுமே தோன்றியதென்கிற வாதத்திற்கு ப்ரபல ப்ரமாணம் காட்டவேண்டும், யுக்தி வாதங்கள் பயனற்றவை. ச்ருங்கக்ராஹிகயா ஸர்வ ஸம்ப்ரதிபந்நமான ப்ரமாணம் காட்ட வேண்டும். த்ரமிட பாஷ்யமும் ப்ரஹ்ம ஸூத்ர ஸம்பந்தியே யொழிய இவர்கள் சொல்லுகிறபடியன்று. இப்போது உபலப்தமாகாத க்ரந்தங்களைப் பற்றி அதிகமான சர்ச்சை பயனற்றதென்பது நம் அபிப்ராயம். த்ரமிடபாஷ்யகாரரென்கிற வ்யக்தி ஒன்றா இரண்டா? என்பதொன்றே ப்ரக்ருதத்தில் முக்யமான விசாரம். அதைப்பற்றி மேலே விஷயம் வருமிடத்துப் பேசுவோம். டங்கரும் த்ரமிடரும் பரம பூஜ்யர்களென்பதிலும் மிகமிகப் புராதனர்களென்பதிலும் விவாதலேசமுமில்லை.

4. "டங்கத்ரமிடர்களென்கிற இவ்வாசார்யர்களிருவரும் அத்வைதமத நிஷ்டர்களா? விசிஷ்டாத்வைத மத நிஷ்டர்களா? என்பதை விமர்சித்து நிர்ணயிக்கப் புகுந்த நான் அத்வைத விசிஷ்டாத்வைத க்ரந்தங்களைப் பரிசீலித்து நிர்ணயித்த அம்சத்தை தத்வ ஜிஜ்ஞாஸுக்களுக்கு வெளியிடுவதற்காகவே த்ரவிடாத்ரேய தர்சநமென்னும் நூலையெழுதி வெளியிட்டேன்" என்பது நாலாவது வாக்யச்ரேணி. இதற்கு நாம் இங்குத் தெரிவிக்கத்தக்கது ஒன்றுமில்லை. ஆனாலும் ஒன்று தெரிவிக்க அந்தர்யாமி நியமிப்பதனால் அதைத் தெரிவிக்கிறேன்;— "ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கராசார்யரால் சாங்கரசிரோபூஷா அவதரித்து உலகுக்குப் பல தத்வார்த்தங்கள் தெரிவதற்காக நான் த்ரவிடாத்ரேய தர்சநக்ரந்தத்தை வெளியிட்டேன்" என்றெழுதியிருந்தால்

அது பொருத்தமாகவும் ஸத்யமாகவுமிருக்கும். த்ரவிட பாஷ்யகாரரென்கிற வ்யக்தி ஒன்ரு இரண்டா? என்கிற ஒரு விஷயத்தில்மட்டும் தெளிவைப் பிறப்பிக்க முன்வந்திருப்பதாகத் தெரிவித்த சாஸ்த்ரிகளுக்கு இத்தகைய பீடிகை ஆவச்யகமா என்பதை விவேகிகள் விமர்சிப்பது. ஸ்ரீ வேதவ்யாஸ மஹர்ஷியும் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியுங்கூட அத்வைதியேயென்று இவர்களுடைய ஸித்தாந்தமாக இருக்கட்டுமே. அதனாலென்ன? அத்வைத மதக்கோட்பாடு இத்தகைத்து என்பதை யாவரும் எளிதிலுணர்ந்து கொள்ளும்படியாக நிரூபணம் செய்துவிட்டு, பிறகு 'இவர் அத்வைதி அவர் அத்வைதி, எவரும் அத்வைதியே' என்ருல் அழகாயிருக்கும். பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிஷ்ணாதர்களான ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களுக்கு அத்வைதத்தில் பகையில்லை யென்று சாங்கரசிரோபூஷாவில் உபபாதநம் செய்திருக்கிரும்; அதன்மேல் ஆர அமர விசாரித்து விடைதருவதன்ருே ஆவச்யகம். அத்வைத மத ஸர்வஸ்வமாக நிற்கும் விஷயம் "ஸர்வம் மித்யா" (எல்லாம் புளுகு) என்பது தானே. இந்த வாதத்தை டங்காசார்யரோ த்ரவிடாசார்யரோ இன்ன இடத்தில் நிரூபணம் செய்திருக்கிருரென்று எடுத்துக்காட்டினுலன்ருே அவர்களை அத்வைதிகளென்று ஸ்தாபித்ததாக ஆகும். பகவத் கீதை ப்ரஹ்மஸூத்ரம் முதலான திவ்ய க்ரந்தங்களில் எல்லாம் புளுகென்கிற இந்த வாதம் சிறிதும் தலைகாட்டாதிருக்க, ப்ராமாணிக சிகாமணிகளான டங்கத்ரமிடாதிகளின் க்ரந்தங்களில் இது ஈஷத்தும் புகமாட்டாதாகையாலே தலை கீழாக நின்று தவம் புரிந்தாலும் அவர்களை அத்வைதிகளாக்க முடியாதென்று திடமாகக் கொள்க.

5. இதற்குமேல் ஐந்தாவது வாக்ய ச்ரேணியிலுள்ள விஷயமாவது.— அத்வைத க்ரந்தங்களிலும் விசிஷ்டாத்வைத க்ரந்தங்களிலும் பலவிடங்களில் ப்ரமாணமாகக் காட்டப்பட்ட த்ரவிட பாஷ்யகார வ்யக்தி ஒன்றேயொழிய வெவ்வேறு பட்டதன்று. அப்படியே வாக்யகார ப்ரஹ்மநந்தி வ்யக்தியும் ஒன்றேதான். ஆனது பற்றியேதான் என்னுடைய த்ரவிடாத்ரேய தர்சநக்ரந்தத்தின் உபக்ரமத்தில் ப்ரஹ்மநந்தி த்ரவிடாசார்யர்களை உபய ஸம்மத பூஜ்யர்களாகக் காட்டி ஸ்துதிசெய்திருக்கிறேன என்பதாம். இதற்குச் சொல்லுகிருேம். த்ரமிட பாஷ்யகாரவ்யக்தி ஒன்றே யொழிய இரண்டல்ல,வென்பதுதான் ஸர்வஸம்ப்ரதிபந்நமான ஸித்தாந்தம், இதை நாம் மறுத்ததுமில்லை, மறுக்கப்போகிறதுமில்லை. இந்த ஸித்தாந்தத்திற்கு விருத்தமாக சாஸ்த்ரிகள், திருவாய் மொழியருளிச் செய்த நம்மாழ்வாரை த்ரமிட பாஷ்யகாரராக த்ரவிடாத்ரேய தர்சனத்தில் மேலே யெழுதியுள்ளார். அது மிகத்தவறு என்பதுதான் நம்முடைய வாதம். அது தவறன்று என்று உபபாதனம் செய்வதற்காகவே இப்போது சாஸ்த்ரிகள் ப்ரவர்த்தித்திருக்கிருர்கள். அந்த உபபாதனம் இனிமேல் வரக்கூடும். அங்கே அதன் அநௌசித்யத்தை நன்கு நிரூபிப்போம்.

6. இனி ஆருவது வாக்யச்ரேணியிலுள்ள விஷயமாவது, "அத்வைத மதத்தின்படி சாந்தோக்யோபநிஷத்தில் உஹாராஜியான ஸகுண ப்ரஹ்ம வித்யையும் ஸத்வித்யாதியான நிர்குணப்ரஹ்ம வித்யையும் ஓதப்பட்டிருக்கின்றது. ப்ரஹ்மநந்தி த்ரமிடாசார்யர்கள் எழுதியுள்ள வாக்யங்களில் ஸகுண ப்ரஹ்ம பரங்களான வாக்கியங்கள் விசிஷ்டாத்வைத - அத்வைத நூல்களில் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. அவை அத்வைத மதத்திற்கு வாயகங்களல்ல. ஸகுண ப்ரஹ்மத்தையும் அத்வைதிகள் அங்கீகரித்திருக்கிருர்களன்ருே. நிர்குணப்ரஹ்மபரமாக அவ்விருவரும் எழுதியுள்ள வாக்யங்கள் அத்வைத நூல்களில் உதா

ஹரிக்கப்பட்டுள்ளவை அத்வைத மதத்திற்கு விசேஷித்து ஸாதகங்களானவை. நிர்குண ப்ரஹ்மபரங்களான அவர்களின் வாக்யங்களையே ஸ்ரீபாஷ்ய வேதார்த்த ஸங்கிரஹ ச்ருத ப்ரகாசிகாதிகளில் ஸகுண ப்ரஹ்மபரமாக வருந்தி வியாக்கியானித்திருக்கும் விஷயம் என்னுடைய த்ரவிடாத்ரேய தர்சநத்தில் விளக்கப்பட்டிருக்கிறது; அதனை அதிலேயே பார்த்துக் கொள்வது." என்பதே. இதற்குச் சொல்லுகிறோம். விசிஷ்டாத்வைதிகள் நிர்குணப்ரஹ்ம வாதத்தை எள்ளளவும் ஸஹிப்பதில்லை. * दूरे गुणास्तव तु सत्वरजस्तमांसि तेन त्रयी प्रथयति त्वयि निर्गुणत्वम्। नित्यं हरे! निखिलसद्गुणसागरं हि त्वामामनन्ति परमेश्वरमीश्वराणाम् ॥ * என்கிற ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ர திவ்ய ஸூக்தியினால் இது நன்கு தெளியத்தக்கது. ச்ருதிகளில் பலவிடங்களில் பரப்ரஹ்மத்தைக் கல்யாண குணைகதாநமாகச் சொல்லியிருக்கை யாலே நிர்குணப்ரஹ்மவாதம் औपनिषद कोஷ்டிகளில் தலையெடுக்க நியாயமேயில்லை. ஹேய குணங்கள் கிடையாதென்கிற கருத்தினால் க்வசித் நிர்க்குணமென்று சொல்லிற்றென்கிற மருமத்தை யுணரகில்லாமல் பிறர் நிர்க்குண ப்ரஹ்மவாதம் செய்து வருகிறார்கள். கல்யாண குண ஸத்பாவ ப்ரதிபாதக ச்ருதிகளை அபலபிக்க முடியாமையாலே 'ஸகுண ப்ரஹ்மவாதமும் அத்வைதிகளுக்கு ஸம்மதமே' என்று மழுப்புகிறார்கள்.

இவர்களோ அத்வைதிகள். ஒன்றேயொழிய இரண்டு கிடையாதென்பது இவர்களது கொள்கை. இப்படியிருக்க, ஸகுணப்ரஹ்மமொன்று. நிர்குணப்ரஹ்மமொன்று என்பதாக த்வைதபாவனை பண்ணுவது அயுக்தமென்பதை இவர்கள் அறியாமலிருப்பது வியப்பே. அநாதிவாஸநாரூஷிதமாய் இப்படியொருமதம் அநுவர்த்தித்து வருகையாலே விவேகிகளான வித்வான்களுக்கும் இதில் அநுபபத்தி தோன்றாமலும், தோன்றினாலும் மதாபிமாநம் அவர்ஜநீயமாகையாலே அதை வெளிக்காட்டாமலும் அநுபபந்நமான வாதத்தையே திருப்பித் திருப்பிச் செய்து போரும் நிலைமையே காணப்படாநின்றது. இந்த அவத்யத்தை த்ரமிடாசார்யாதிகளிடத்திலும் ஏறிடப்பார்ப்பதும் ப்ராமாணிகர்களுக்கு உற்றதன்று. நிர்க்குண ப்ரஹ்மபரங்களான தத்வாக்யங்களை பகவத் ராமாநுஜாதிகள் க்லேசப்பட்டு ஸகுண ப்ரஹ்மபரமாக வியாக்கியானித்துள்ளார்களென்று எழுதுவது மஹத்தான ஸாஹஸம்.

* पितामहस्य मे माता प्रासूत क्लेशतस्सुतम्। असह्य एव शोकोऽभूत् क्लेशं तं पश्यतो मम ॥ *

என்றாலும் ஒரு மேதாவி. நிர்க்குணப்ரஹ்மபரமான வாக்கியங்களை ஸகுண ப்ரஹ்மபரமாக்கி வியாக்கியானிப்பதற்கு ஸ்ரீபகவத் ராமாநுஜாதிகள் பட்ட க்லேசத்தை இவரே கண்டிருந்தார் போலும்.

7. அனந்தரம் ஏழாவது வாக்ய ச்ரேணியிலுள்ள விஷயமாவது;—விசிஷ்டாத்வைத மதப்ரதாந ஸ்தாபகரான ஆளவந்தார் தாமருளிச்செய்த ஸித்தித்ரயத்தில் ஆத்ம ஸித்தியில் தம்முடைய க்ரந்த நிர்மாணத்தின் ஆவஶ்யகதையை நிரூபிக்கப் புகுந்தவிடத்தில்,

" यद्यपि भगवता बादरायणेन इदमर्थान्येव सूत्राणि प्रणीतानि, विवृतानि च तानि परिमितगम्भीरभाषिणा द्रमिडभाष्यकृता, विस्तृतानि च तानि गम्भीरन्यायसागरभाषिणा भगवता श्रीवत्साङ्कमिश्रेणापि, तथाऽप्याचार्यटङ्क-भर्तृप्रपञ्च - भर्तृमित्र - भर्तृहरि - ब्रह्मदत्त - शङ्कर - श्रीवत्साङ्क-भास्करादि-विरचितसितासितविविधनिबन्धनश्रद्धाविप्रलब्धबुद्धयो न यथावत् अन्यथा च प्रतिपद्यन्ते इति तत्प्रतिपत्तये युक्तः प्रकरणप्रक्रमः " என்றருளிச் செய்திருக்கிறாரென்பது. சாஸ்திரிகளின்

இந்த வாக்யம் அஸ்மாப்தமாகையாலே இவ்வளவுக்கு மட்டும் சொல்லத்தக்கதொன்றுமில்லாமையாலே மேல் வாக்யச்ரேணியில் செல்லுகின்றோம்.

8. மேல் எட்டாவது வாக்யச்ரேணியிலுள்ள விஷயமாவது, மேலே குறித்த ஸ்ரீ யாமுநாசார்ய ஸ்ரீஸூக்தியில் த்ரமிடபாஷ்யகாரரென்று நிர்தேசிக்கப்பட்டவர் ஸ்ரீபாஷ்ய வேதார்த்த ஸங்க்ரஹாதி, விசிஷ்டாத்வைத க்ரந்தங்களிலும் அத்வைத க்ரந்தங்களிலும் நிர்தேசிக்கப்பட்டவராக முன் சொன்ன த்ரமிடாசார்யரேயா? அவரைக்காட்டிலும் வேறுபட்டவரா? என்பதை விசாரிக்கவேண்டும்; ஆழ்ந்து பாராமல் மேல் நோக்காகப் பார்த்தால் அவரும் இவரும் ஒருவரேயென்றுதான் தோன்றும். அப்படியே சிலர்க்குத் தோன்றியுமிருக்கிறது. நுட்பமாக நன்றாக விமர்ச்சிக்குமளவில் இருவரும் ஒருவரேதான் என்கிற உண்மை நன்கு விளங்கும் — என்பது.

ஆரியர்களே! இந்த வாக்கியம் அநந்விதமாகவுள்ளது. * मनस्यन्यद्वचस्यन्यत् * என்னும்படியாக ஆய்விட்டதந்தோ! சாஸ்த்ரிகளின் ஸம்ஸ்க்ருத வாக்யத்தை அப்படியே உதாஹரிக்கிறோம், காண்மின்.

" आपाततो विलोकने द्रमिडभाष्यकार इति सम्मुग्धपदप्रत्यभिज्ञया अनन्य इत्येव भायात्। भातं च तथैव केषाञ्चित्। सूक्ष्मेक्षिकया पुनः सम्यग्विचारणायां क्रियमाणायाम अनन्य एवेति तत्वं प्रकाशेत। "

என்றிங்ஙனே சாஸ்த்ரிகளின் பங்க்திகள் ஸுஸ்பஷ்டமாகவுள்ளன. இதற்கு சாஸ்த்ரிகள் சொல்லக்கூடியதென்னவென்றால், " अन्य एवेति तत्त्वं प्रकाशेत " என்றே நாமெழுத நினைத்தது; ஏதோ கைப்பிசகாக (अनन्य एवेति) என்று விழுந்துவிட்டது. இது அந்வயிக்கமாட்டாதாகையாலே கைப்பிசகுதானென்பதை [இடையில் நகாரம் தவறாக விழுந்துவிட்டதென்பதை] வித்வான்கள் யாவரும் இசைந்தே தீருவர்கள் — என்று சொல்லக்கூடும். இதை நாமும் முழுமனத்துடன் இசைவோம். தம்முடைய வியாஸத்திற்கு ஜீவநாடியான ப்ரதாநவிஷயத்தில் இந்த கைப்பிசகு விழுந்திருப்பதனால் இது பகவானே எழுதுவித்தது என்று திண்ணமாக எண்ணவேணும். ஆளவந்தாருடைய திருவுள்ளத்தினால் அபிமதரான த்ரமிட பாஷ்யகாரர் வேறு; மற்ற சங்கராசார்ய ராமாநுஜாசார்யாத்யபிமதரான த்ரமிட பாஷ்யகாரர் வேறு — என்று சாஸ்த்ரிகள் நூதனமாகக் காட்டும் நிராதாரமான வாதம் அப்ராமாணிகமென்பதை பகவானே காட்டிவைத்தானாயிற்று. இந்த கைப்பிசகு வேறு எங்கேனும் விழக்கூடாதா? சிலவிடங்களில் எழுத்துப்பிழையுண்டாகி, தாமே கவனித்துத் திருத்தியுமிருக்கிறார். அந்த ஸம்பவத்தை பகவான் இங்கு ஸஹிக்கவில்லையே. இது நிற்க. இங்குக் கைப்பிசகென்பதை அங்கீகரித்து " अन्य एवेति तत्त्वं प्रकाशेत " என்றே வாசித்துக்கொள்வோம். அந்த அந்யத்வத்தை சாஸ்த்ரிகள் எவ்விதமான ப்ரமாண யுக்திகளைக்கொண்டு உபபாதிக்கிறார் என்பதை இனி விமர்சிப்போம். அதற்காக அடுத்த வாக்ய ச்ரேணிக்குச் செல்வோம்.

9. " कथमिति चेदुच्यते " என்று ஒன்பதாவது வாக்யச்ரேணியை ஆரம்பிக்கிறார். இதிலுள்ள விஷயமாவது, ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் * भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्यास्सञ्चिक्षिपुः; तन्मतानुसारेण सूत्राक्षराणि व्याख्यास्यन्ते * என்றிருப்பது உலகில் யாவருமறிந்தது. இந்த பங்க்தியைப் பிறர் அடிக்கடி எல்லாவிடங்களிலும்

உத்கோஷிக்கிறார்களன்றோ. இந்த பங்க்தியிலுள்ள பூர்வாசார்ய பதமானது ப்ரஹ்ம நந்தி த்ரமிடாசார்ய பரமென்பதாக ஸ்ரீபாஷ்யவ்யாக்க்யானகாரர்களெல்லாராலும் வியாக்யானிக்கப்பட்டிருக்கிறது. இது யாவருமறிந்ததேயாகும். ஏவஞ்ச, ஸ்ரீபாஷ்யகாராதிகளுக்கு அபிமதரான த்ரமிடாசார்யர் விஸ்தீர்ணமான போதாயந வ்ருத்தி க்ரந்தத்திற்கு ஸம்க்ஷிப்தமான வியாக்யானம் செய்தவர் என்பதாகத் தெரியவருகிறது. ஸாக்ஷாத்தாக ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு வியாக்யானம் செய்தவரல்லர் என்பது நன்கு விளங்குகின்றது. ஆளவந்தாரென்னும் யாமுநாசார்யரால் நிர்தேசிக்கப்பட்ட த்ரமிட பாஷ்யகாரரோவென்னில் ஸாக்ஷாத் ப்ரஹ்ம ஸூத்ர வ்யாக்க்யாநகாரர் என்று விளங்குகின்றது. இதற்குமேல் பிறர் ஒன்று சொல்லலாம்; ஸாக்ஷாத் வ்யாக்க்யாநமென்பதும் பரம்பரயா வ்யாக்யானமென்பதும் பொதுவாக வ்யாக்கியானமென்றே வழங்கப்படுவதுண்டு; த்ரமிடாசார்யர் ப்ரஹ்ம ஸூத்ர வ்யாக்க்யானமான வ்ருத்திக்ரந்தத்திற்கே வ்யாக்க்யாதாவாக இருந்தாலும் அவரை ப்ரஹ்ம ஸூத்ர வ்யாக்க்யாதாவென்றும் சொல்லக் குறையில்லை. இந்த த்ரமிடாசார்யர் தாமே சாந்தோக்யோபநிஷத்துக்கு நேரே வ்யாக்யானம் செய்யாமல் தத்வ்யாக்க்யாநமான வாக்ய க்ரந்தத்திற்கு பாஷ்யம் செய்த வளவையே கொண்டு இவரை சாந்தோக்யோபநிஷத் பாஷ்யகாரரென்றும் வழங்கி வருவதுண்டே. இது போலவே ப்ரக்ருத விவாத விஷயத்திலும் ப்ரஹ்மஸூத்ர விவரணத்திற்கு விவரணம் செய்த விவரை ப்ரஹ்மஸூத்ர விவரண கர்த்தாவென்றும் வ்யபதேசிக்கக் குறையில்லை — என்று பிறர் சொல்லக்கூடும். அப்படியானால் ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸாக்ஷாத் வ்யாக்க்யாநகர்த்தாவான பராபிமத மஹர்ஷி போதாயநரை ஸ்ரீயாமுநாசார்ய க்ரந்தத்தில் அவச்யம் நிர்தேசித்திருக்கவேண்டும் — என்கிற விது சாஸ்த்ரிகளின் ஒன்பதாவது வாக்ய ச்ரேணியிலுள்ள விஷயம்.

ஆரியர்காள்! இங்குத்தான் கவனிக்கவேண்டும். த்ரமிடாசார்யரை ப்ரஹ்மஸூத்ரவ்யாக்க்யாதாவாக வ்யபதேசிப்பதில் அநௌசித்யமில்லையென்பதை சாஸ்த்ரிகள் தாமே த்ருஷ்டாந்தமுகேந ஸ்தாபித்து விட்டார். இதில் இவர்கள் நமக்கு ப்ரயாஸ லேசமும் வைக்கவில்லை. விஷயம் எங்கே போய் நின்றிருக்கின்றதென்றால் பகவத்யாமுநாசார்ய க்ரந்தத்தில் போதாயன வ்ருத்தி க்ரந்தத்தைப்பற்றின ப்ரஸ்தாவம் ஏனில்லை? என்பதில் வந்து நின்றிருக்கிறது. இதைப்பற்றி சாங்கர சிரோபூஷாவில் நாம் வெகு விரிவாக எழுதியிருக்கிறோம். ஸ்ரீயாமுநாசார்யருடைய காலத்தில் போதாயந வ்ருத்திக்ரந்தம் புலப்படவில்லை அப்படியொரு க்ரந்தமுண்டென்று மட்டும் அவருடைய திருச்செவியில் விழுந்திருந்ததுண்டேயொழிய வேறொன்றுமறிந்திலரவர். சில நாளைக்குப் பின் அது காச்மீர மண்டலத்திலுள்ளதென்றறிந்து அதை ஸம்பாதிக்க வேணுமென்கிற ஆசைமட்டும் அவர்க்கு உண்டானதுண்டு. இது சரித்ரக்ரந்தங்களினால் விசதம். அவ்வாசை நிறைவேறுதற்குரிய ஸௌகரியமில்லாமலே அவருடைய வாழ்நாள் முடிந்திட்டது. பிறகு அப்ரமேய சக்தியுக்தரா யெழுந்தருளியிருந்த எம்பெருமானார் தாம் அவ்வாசை ஒருவாறு நிறைவேறப்பெற்றாரென்பதைப் பூர்வாசார்ய க்ரந்தங்களிலிருந்து விரிவான வரலாற்றையெடுத்துக் காட்டி சாங்கரசிரோபூஷாவில் நாம் விவரித்திருக்க. அதில் अदृष्टमभिनीय, चर्वितचर्वणमே பண்ணுவதனாலென்னாகும். போதாயநவ்ருத்தி க்ரந்தத்தை ஆளவந்தார் தமது நூலில் நிர்தேசிக்கவில்லை யென்பதனால் அந்த க்ரந்தத்தின் அஸத்பாவமோ, அது விசிஷ்டாத்வைத மதத்திற்கு ஆதாரமன்றென்பதோ ஸித்திக்க வழியில்லை. ஆளவந்தார் திருவுள்ளத்தாலே

த்ரமிடாசார்ய ரென்பது நம்மாழ்வாரே யென்கிற வொரு நிராலம்ப வார்த்தையை ஸ்தாபிப் பதற்கு இந்தக் காடுபாய்ந்த வாதம் உபயுக்தமுமன்று.

இந்த ஒன்பதாவது வாக்யச்ரேணியின் தொடக்கத்தில் "பகவத்போதாயநக்ருதா" மித்யாதி ஸ்ரீ பாஷ்யபங்க்தியை யுதாஹரித்து "இதைப் பிறர் அடிக்கடி எல்லாவிடங்களிலும் உத்கோஷிக்கிறார்கள்" என்று சாஸ்திரிகள் எழுதியிருப்பது ஒரு அவஹேளந ரூபமாகவுள்ளது. "परैः पुनः पुनः सर्वत्रोद्घोषणात्" என்கிற இவருடைய வாக்யம் இவருடைய அஸஹிஷ்ணுதையை ஸர்வத்ர உத்கோஷிக்கச் செய்கிறது. ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் திருமாளிகைகளில் நைமித்திக ஸமய விசேஷங்களில் வேதத் தொடக்கம் வேத சாத்துமுறை செய்யும்போது வேத பாகங்களையும் இதிஹாஸ புராணங்களையும் ஆசார்ய திவ்ய ஸூக்தி விசேஷங்களையும் தொடங்குவது சாத்துவதான ப்ரகரணத்தில் ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையும் தொடங்கிச் சாத்துகிற க்ரமம் ஆயிரமாண்டுகளாகவுள்ளது. அந்த ஸந்நிவேசம் பரம கம்பீரமானது. ஸ்ரீவைஷ்ணவர் திருமாளிகைகளிலே அதையநுபவித்திருக்குமிவர் "நம்மவர்களுக்கு இப்படி பரம பவித்திரமான ஒரு பத்ததி ஏற்படவில்லையே!" என்று வருத்தங்கொண்டு, அந்த வருத்தம் அஸூயையாகப் பரிணமிக்கப் பெற்று இங்ஙனே யெழுதுவித்ததென்பதில் என்ன ஸந்தேஹம். * अशक्तास्तत्पदं गन्तुं ततो निन्दां प्रकुर्वते * என்பது நேற்றின்று தோன்றின வசனமன்றே. "पुनः पुनः सर्वत्र उद्घोषणात्" என்னுமிப்பதங்கள் ஒவ்வொன்றும் இவருடைய அஸூயையை யன்றோ ஆவிஷ்கரிக்கிறது. எதைக் கொண்டு 'புந: புந:' என்கிறீர்? 'ஸர்வத்ர' என்றதற்கு என்ன பொருள்? வீதிதோறும் சொல்லிக்கொண்டு போகக் கண்டிருக்கிறீரோ? 'உத்கோஷணாத்' என்கிறீரே. அந்த உத்கோஷம் * स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् * என்னும்படி உமக்கு அருந்துதமாயிருந்ததோ? என்று கேட்டால் வெளிவரும் விடையைப்பார்க்கலாம். * பகவத் போதாயநக்ருதாம் இத்யாதி ஸ்ரீபாஷ்யஸூக்தியை அபலபிப்பார் ஆரேனு மிருந்தால் சாஸ்த்ரிகள் இவ்வளவு எழுதியிருக்கலாம். அப்படிக்கு ஒரு ப்ரஸக்தியுமில்லையா யிருக்க, இவர் அஸ்தாநே அவஹேளநோக்திகளை யெழுதிவிட்டு அஸ்மதாதிகள் அகாண்டமாக தூஷிப்பதாக ஏறிட்டு, அப்படி தூஷிக்கவேண்டாமென்று ப்ரார்த்திப்பதாகக் காட்டுவதும், தமக்கு ஸாமரஸ்யத்திலேயே நோக்காகவும் அஸ்மதாதிகளுக்கு அஃதில்லாமை பற்றி வருந்துவதாகவும் தெரிவித்து எல்லாரும் ஸாமரஸ்யத்திலே ஊன்றியிருக்க வேணுமென்று உபதேசிப்பது வேச்யைகள் பதிவ்ரதைகளுக்கு தர்மோபதேசம் பண்ணுவதேபோக்கு மன்றோ.

இந்த ஸந்தர்ப்பத்தில் முக்கியமாகவொரு விஷயம் எழுதவேண்டியதாகிறது. சாஸ்த்ரிகள் ப்ரக்ருத ஸமாஹிதி பத்திரிகையுடன் ஒரு தமிழ்க்கடிதமும் எழுதியிருக்கிறார். அதில் ச்ருதப்ரகாசிகாசார்யரிடத்திலும் வே ..ந்த தேசிகனிடத்திலும் தமக்குக் கோபதாபங்களிருப்பதாகக் காட்டுகிறார். அவருடைய பங்க்திகளையே காட்டுகிறேன், காண்மின்; "ऋषेरभिप्रायमृषिरेव स्वतो वेदितुमर्हति. न तु जडमतिरितरो जनः" என்ற ச்ருதப்ரகாசிகாஸூக்தியினால் சங்கரருக்கு ஏற்பட்ட நிந்தையினால் வியாகுலனாகி த்ரவிடத்ரைய தர்சநம் எழுதினேன். ......ப்ராசீநக்ரந்தங்களில் விசேஷித்து ஸ்ரீவேதாந்த தேசிகக்ரந்தங்களில் நிந்தாவாக்ய முள்ளது...... சிவநிந்தை ஸஹிக்க முடியவில்லை. தங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை." இத்யாதிகளை எழுதியுள்ளார்கள். ச்ருதப்ரகாசிகா ஸூக்தியில் பகவத் பாதாளுடைய நாம

நிர்தேசமிருப்பதாக இவர்கள் காட்டவில்லை. (ஜடமதிரிதரோ ஜந:) என்ற பொதுவான திவ்யஸூக்தி அவரைத்தான் தொடுகிறதென்று இவர் நிச்சயித்துக்கொண்டது ஸ்வாசார்ய பாதாளுக்கு ஸ்வயம் செய்யும் ஸத்காரம் போலும். ஜடமதி: என்றது அவரைத்தான் தொடுமென்று இவர் உறுதி செய்து கொண்டது மிக நன்றே. வஸ்து ஸ்திதியில் 'ரிஷிகளின் அபிப்ராயத்தை ரிஷிகளல்லாதார் தெரிந்துகொள்ள இயலாது' என்னுமிவ்வளவே அங்கு விவக்ஷிதம். அது, தமக்குக் கோபதாப ஹேதுவாய் விட்டதாக இவரெழுதியிருப்பதன் ஔசித்யத்தை உசிதஜ்ஞர்களே உணரவேணும். வேதாந்த தேசிக க்ரந்தங்களில் விசேஷித்து நிந்தாவாக்யமுள்ளதென்கிறார். விஷயங்களை அஸமாதேயமாக நிரூபணம் செய்துவிட்டால், பிறர்க்கு வாயைத்திறக்க முடியாமற்போனால் அப்போது 'வெகு கடுமையான நிந்தை, மிகவும் உக்ரமான தூஷணம், எல்லை கடந்த உபாலம்பம்' என்று பிறர் சொல்லுவது இயல்பு. வேறு என்ன சொல்லி உய்ய முடியும்? இவர்களும் அங்ஙனே உய்யப் பார்க்கிறார்களத்தனை.

"यतीश्वरसरस्वतीसुरभिताशयानां सतां वहामि चरणाम्बुजं प्रणतिशालिना मौलिना ।
तदन्यमतदुर्मदज्वलितचेतसां वादिनां शिरस्सु निहितं मया पदमदक्षिणं लक्ष्यताम् ॥"

என்ற யதிராஜஸப்ததி ஸ்ரீஸூக்தியைக் கண்ட அப்பயதீக்ஷிதர் "என்போல்வாருடைய சிரஸ்ஸுக்கு ஸ்வாமியின் உபய பாதாரவிந்தங்களும் அணிகலனாகத் தகாதோ?" என்று சொல்லிக்கொண்டிருந்தாரென்பது ப்ரஸித்தம். ப்ராஸங்கிகமான விதனை இவ்வளவோடு நிறுத்திக் கொள்வோம். ஸ்ரீயாமுநாசார்யக்ரந்தத்தில் போதாயநவ்ருத்திக்ரந்த நிர்தேசம் ஏனில்லை? என்கிற விசாரத்தில் இனி சாஸ்த்ரிகள் தலையிடமாட்டாரென்பது உறுதி.

10. பத்தாவது வாக்யச்ரேணியில் — ஸ்ரீயாமுநாசார்யர் போதாயநவ்ருத்திக்ரந்தத்தை அவச்யம் நிர்தேசிக்கவேண்டியிருந்தும் நிர்தேசித்தருளாமையினாலே அந்த வ்ருத்திக்ரந்தம் உண்மையில் கிடையாதென்பது தேறுகின்றது — என்று நிகமித்திருக்கின்றார் சாஸ்த்ரிகள். இதற்குச் சொல்லவேண்டியதெல்லாம் சொல்லி முடித்தோமாகையால் இந்த வாதம் தலைமடிந்ததென்று கொள்க. சாங்கரசிரோபூஷாவில் போதாயநவ்ருத்திஸத்பாவத்தை அசைக்கமுடியாத பல ஹேதுக்களாலும், முக்யமாகப் பரோக்திகளாலும் ஸ்தாபித்திருக்கிறோமாதலால் அவற்றுக்கு இவர் வாயைக் கையைத் திறக்கமுடியாதவரென்பது விவேகிகளின் உள்ளத்தில் ஊறி நிற்பதாகும்.

11, 12. மேல் பதினொன்று பன்னிரண்டு வாக்யச்ரேணிகளில் பிஷ்டபேஷணமொழிய வேறில்லை. பகவத் ராமாநுஜர் ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் ஸாதித்திருக்கிற ப்ரகாரமாக யாமுநாசார்யரும், ஸாதித்திருக்கவேண்டுமென்றும், அப்படி ஸாதித்திராமையினாலே यामुनाचार्यस्य, बोधायनवृत्तिः नासीदिति विज्ञायते என்றும், सुदृढं निश्चीयते என்றும் எழுதி, ஆக யாமுநாசார்ய க்ரந்தத்தினால் தெரியவருகிற த்ரமிடபாஷ்யகாரரானவர் ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸாக்ஷாத்தாக வியாக்யானம் செய்தவரென்றும், ஸ்ரீபாஷ்யாதிகளால் தெரியவருகிற த்ரமிடாசார்யர் பரம்பரயா ப்ரஹ்மஸூத்ர வியாக்யானம் செய்தவரென்றும் நிகமித்திருக்கிறார். கீழே உபபாதித்த விஷயங்களுக்கும் இந்த நிகமநத்துக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லையென்பதை இதுவரை நாம் செய்த நிரூபணங்களினால் விவேகிகள் உணர்வார்கள். ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸாக்ஷாத்தாக வியாக்யானம் செய்த த்ரமிடாசார்யர் இதுகாறும் ஒருவரும் அவதரித்ததில்லையென்பது

ஸர்வமதஸ்த ஸஜ்ஜந ஸம்ப்ரதிபந்நம். அபூர்வமாக இவரொருவர் எழுதும் விஷயம் உபபத்தி லேஶமுமற்றதாகையாலே ஸர்வாத்மநா அஸங்கதம்.

13. மேல் பதின்மூன்றுவது வாக்யச்ரேணியில் சாஸ்த்ரிகள் எழுதியுள்ளதாவது. ஸ்ரீ பாஷ்யாபிமதரான த்ரமிடாசார்யர் ப்ரஹ்மநந்தி செய்த வாக்ய க்ரந்தத்திற்கு வியாக்கியானமியற்றியவர். இப்படியே பிறரும் சொல்லுகிறார்கள். யாமுநாசார்ய க்ரந்தாபிமதரான த்ரமிட பாஷ்யகாரரோ வென்னில், அப்படிப்பட்டவரல்லர்; (ஏனென்றால்) யாமுநாசார்யர் ஸ்வகீய ஸித்தாந்த ப்ரதர்ஶகராயும் ப்ரஹ்மஸூத்ரவிவரணகாரராயுமுள்ள த்ரமிடபாஷ்யகாரரைப் பரிமிதகம்பீரபாஷி என்று உகந்து கொண்டாடுகிறார். டங்கரென்கிற ப்ரஹ்ம நந்தியையோவென்னில் தம்முடைய ஸித்தாந்தத்திற்கு விருத்தமான எதிர்மதத்திலே ஊன்றினவராகப் பேசியுள்ளார். இந்த யாமுநாசார்யர் ஆதரித்த த்ரமிட பாஷ்யகாரர் ஸ்வஸித்தாந்த விருத்த ஸித்தாந்த ப்ரதர்சகரான ப்ரஹ்மநந்தியாலே செய்யப்பட்ட வாக்ய க்ரந்தத்திற்கு வ்யாக்க்யாதாவாக இருப்பரானால் அவரும் மூலகாரரான ப்ரஹ்ம நந்தியின் மதத்தையே தழுவினவராக இருந்து தீரவேண்டும். அப்படிப்பட்டவரை யாமுநாசார்யர் கொண்டாடியிருக்கவேமாட்டார். கொண்டாடியிருக்கக் காண்கையாலே இவர் வேறுபட்டவராகவே யிருக்கவேண்டும் — என்று.

இதற்குச் சொல்லுகிறோம். டங்கரென்கிற ப்ரஹ்மநந்தியை ஸ்ரீயாமுநாசார்யர் ஸ்வஸித்தாந்த விருத்த ஸித்தாந்த நிஷ்டராகக் கருதியிருக்கிறாரென்பது மிகவும் அஸம்பத்தம். யாமுநாசார்ய க்ரந்தத்தினால் இவ்வர்த்தம் விளங்குவதுமன்று. " यद्यपि भगवता बादरायणेन " இத்யாதியான யாமுநாசார்ய ஸ்ரீஸூக்தி மாலையில் பரிகணிதர்களான சில வ்யக்திகளின் ச்ரேணியில் சங்கராசார்யரோடொக்க டங்காசார்யரும் நிர்தேசிக்கப்பட்டிருக்கின்றாரென்பதே கொண்டு சாஸ்த்ரிகள் யாமுநாசார்யருக்கு டங்காசார்யரிடத்திலே விமத ப்ரதிபத்தியுள்ளதாக எழுதியிருக்கிறார்கள். ஆசார்ய டங்க ப்ரமுகமான அந்த ச்ரேணியில் ஸ்ரீவத்ஸாங்கரும் பரிகணிதராயுள்ளார் என்பதை இவர்தாமே யெடுத்துக்காட்டியிருக்கிறார் ஸப்தமவாக்ய ச்ரேணியில். அந்த ஸ்ரீவத்ஸாங்கர் யாவரென்பதை விசாரிக்கப்புகுந்தவிவர் யாமுநாசார்ய பிதாமஹரான ஸ்ரீமந்நாதமுனிகளே அவர் என்று ப்ரக்ருத ஸமாஹிதி பத்ரிகையிலும் த்ரவிடாத்ரேய தர்சநத்திலும் பலகால் எழுதியுள்ளார். இது ஸர்வாத்மநா அஸம்பத்தமென்பர் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள் யாவரும். அது நிற்க: இவருடைய அபிப்ராயப்படி ஸ்ரீமந்நாத முனிகளே • ஸ்ரீவத்ஸாங்கமிச்ரரென்று அபலபிக்க முடியாதது. அந்த நாதமுனிகளை யாமுநாசார்யர் ஸ்வஸித்தாந்த விருத்த ஸித்தாந்த நிஷ்டராக எண்ணியிருப்பரேல் டங்காசார்யரையும் அப்படி எண்ணியிருப்பர். இரண்டும் அஸம்பாவிதம்.

இங்கு முக்கியமாக ஆலோசிக்க வேண்டிய விஷயம் கேளீர். டங்காசார்யரென்கிற ப்ரஹ்மநந்தியும் அவரைப் போற்றுகிற த்ரமிடாசார்யரும் ஸ்ரீயாமுநாசார்யருடைய திருவுள்ளத்தாலே விமதர்களாயிருந்தால் அதை பகவத் ராமாநுஜ — ச்ருதப்ரகாசிகாசார்ய — வேதாந்த தேசிகாதிகள் தெரிந்துகொள்ளாமலிருக்க முடியாது. இதுவரை ஆயிரமாண்டுகளாக ஒரு ஆசார்யரும் அறிந்து கொள்ளாமலிருந்த மருமத்தை இவர்தாம் அறிந்துகொண்டதாக வெளியிடுவது மிகவழகியதே. ப்ரஹ்மநந்தியும் த்ரமிடாசார்யரும் ஆளவந்தார் திருவுள்ளத்

தாலே விமதர்களென்றும், பகவத் ராமாநுஜாதிகள் அதைத் தெரிந்து கொள்ளாமல் அவர்களை ஸ்வமதஸ்தர்களாக ப்ரமித்து ஆதரித்துவிட்டார்களென்றும் இவர் எழுதுவதெல்லாம் இவருடைய ப்ரம பரம்பரைகளுக்கே விஜயத்வஜமாகுமத்தனை. ஆளவந்தார் விவக்ஷித்த த்ரமிடபாஷ்யகாரர் உண்மையில் நம்மாழ்வாராக இருந்தால் இவ்வர்த்தத்தைப் பூர்வாசார்யர்களும் மற்றுமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும் உபேக்ஷிக்கவோ அபலபிக்கவோ நியாயமில்லை. திருவாய்மொழி ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸாக்ஷாத் பாஷ்யமுமன்று, பரம்பரயா பாஷ்யமுமன்று. திவ்யப்ரபந்தங்களில் உபநிஷத்துக்களின் அர்த்தமும் பகவத்கீதையின் அர்த்தமும் விளங்குகிறதென்றால், இவை உபநிஷத் பாஷ்யமாகவோ கீதாபாஷ்யமாகவோ வ்யவஹரிக்கப்பட்டு விடுமோ?

சாஸ்த்ரிகள் தாம் எழுதுகிற அர்த்தங்களுக்கு ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களினுடையவோ ஸ்வமதஸ்தர்களான பூருவர்களினுடையவோ உக்திகளை ஆதாரமாகக் காட்டவேண்டியது மிக அவசியமானது. ஸர்வாத்மநா அப்ராமாணிகமான அர்த்தத்தை "ममैवं प्रतिभाति" "एवमूहितुं शक्यम्" என்றிட்டு எழுதுவதானது வைதண்டிகத்வமொன்றைத்தான் நிலைநாட்டி நிற்கும். ஆளவந்தார் ஸ்ரீவத்ஸாங்கரென்று குறித்தது நாதமுனிகளையே யென்று எழுதுவதற்கு இவரா அதிகாரி? 'நாதமுனிகளுக்கு ரங்கநாதனென்று நிஜநாமதேயம்; அது பகவானுடைய பெயர்; ஸ்ரீவத்ஸாங்கனென்பதும் பகவானுடைய பெயர்; ஆகவே இவை பர்யாயமாய்விட்டன; ஆகவே நாதமுனிகளை ஸ்ரீவத்ஸாங்க பதத்தினால் வ்யபதேசிக்கப் பொருத்தமுண்டு' என்றெழுதுகிற இவருடைய வாக்கிலுள்ள பொருத்தத்தை இவருடைய ஸயூத்யர்களே மெச்ச வேணும். ரங்கன் ராகவன் க்ருஷ்ணன் சிங்கன் வேங்கடன் கோபாலன் கோவிந்தன் கேசவன் நாராயணன் முதலான எல்லா நாமங்களும் பகவந்நாமங்களேயாகையாலே இவை பரஸ்பரம் பர்யாய பூதங்களாகி கோபாலாசார்யரென்கிற சொல் கோவிந்தாசார்யரையும் தெரிவிக்கும் என்பதன்றோ சாஸ்த்ரிகளின் வாதமாக முடிந்திருக்கின்றது. ராகவ சாஸ்த்ரியென்கிற சொல் ராம சாஸ்த்ரியையும் குறிக்கும்; மஹாதேவ சாஸ்த்ரி யென்கிற சொல் சங்கரசாஸ்த்ரியையும் குறிக்கும்; ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிக்கென்று அனுப்பப்பட்ட வஸ்துவை ஷண்முக சாஸ்த்ரியும் பெற்றுக்கொள்ளலாம்...... என்கிற பரச்சத பரஸஹஸ்ர குத்ஸித வாதங்களுக்கு இடம் தருகின்ற இவருடைய உக்திகளை நாம் சோதித்தது போதும்.

"गुण्डस्य लिङ्गरूपत्वात् लिङ्गस्य च शिवत्वतः। शिवस्य पार्वतीशत्वात् गुण्डो गृह्णातु पार्वतीम् ॥"

என்கிற ச்லோகத்தையே ஸ்தாபித்து நிற்கிறாரிவர்.

இவர் தம்முடைய த்ரவிடாத்ரேய தர்சநத்தில் உபக்ரமத்தில் [ மங்களாசரணத்தில் ] த்ரமிடாசார்யரை ஸ்துதிக்கையில் "சங்கராதிபி: ராமாநுஜாதிபிச் ச ப்ரமாணீக்ருதாந் ஸ்தௌமி" என்று சொல்லியிருப்பதுதான் பொருத்தமானது. இதற்கு மாறாக மேலே சொல்லியிருப்பது அஸமஞ்ஜஸமே. இவருடைய உள்ளபிப்ராயத்தை இங்கு நாம் முடிவில் விளக்கிக் காட்டுகிறோம். ஸ்ரீயாமுநாசார்யர் தம்முடைய தர்சநத்தை 'ஆர்ஷ க்ரந்த மூலகமென்று கருதினதே கிடையாதென்றும், பின்னால் தோன்றிய ஸ்ரீராமாநுஜார்யாதிகளே தங்களுடைய தர்சனத்திற்கு ஆர்ஷக்ரந்த மூலகத்வத்தை ஸாதிக்க முயன்று பாமர ஜந ப்ரதாரணார்த்தமாகச் சில கல்பனைகளைச் செய்தார்களென்றும், அப்படிப்பட்ட கல்பனைகளிலே போதாயநவ்ருத்தி க்ரந்த கல்பனையொன்று; ஆளவந்தார்க்கு அநபிமதர்களான டங்கரையும்

த்ரமிடாசார்யரையும் தங்களுடைய தர்சந ஸ்தாபகர்களாக எழுதி வைத்த கல்பனை மற்றொன்று என்றும் தாம் கண்டுபிடித்து விட்டதாகத் தெரிவிக்கிறாரிவர். இவ்விஷயத்தை பகவத் ராமானுஜருடைய காலத்திலோ தத்ஸமீப காலத்திலோ இருந்த அத்வைதிகள் எழுதி வைத்திருந்தார்களாகில் இதில் சிறிதாவது விச்வஸநீயதை ஏற்படக்கூடும். ஆளவந்தார் டங்கரையும் த்ரமிடாசார்யரையும் விமதரென்று கருதியிருந்ததாக இப்போது (1957ஆம் ஆண்டில்) இவர் தெரிவிப்பது உண்மையாயிருந்தால், ஆளவந்தாருடைய அபிப்ராயத்தை அதிக்ரமித்து தத்விபரீதமாகச் சொல்லவேணுமென்கிற எண்ணம் பகவத் ராமானுஜாதிகளுக்கு உண்டாகியிருந்தால் அந்த ஆளவந்தாருடைய க்ரந்தத்தை இவ்வாசார்யர்கள் அப்போதே திருத்தியிருக்கலாம்; அல்லது வெளிவரவொட்டாமல் உள்ளடக்கியிருக்கலாம். சாஸ்த்ரிகள் ஸ்ரீராமானுஜாதிகளிடத்தில் விப்ரலம்பகத்வத்தையன்றோ முக்கியமாக ஏறிடுகிறார். உண்மையில் அவர்கள் விப்ரலம்பகர்களாக இருந்தால் ஆளவந்தாருடைய க்ரந்தத்தில் ஒன்றிரண்டு வார்த்தைகளை நீக்கி ஒன்றிரண்டு வார்த்தைகளைப் புகுத்தியிருக்கலாமன்றோ. இது எளிதான காரியமன்றோ. பரமப்ராமாணிகர்களான மஹாசார்யர்களை விப்ரலம்பகர்களென்று கூசாது கூறுவதானது ப்ரம விப்ரலிப்ஸாதிகளுக்கு இவர் ப்ரஸவ பூமியென்பதொன்றையே நிலைநாட்டிநிற்கும். டங்க த்ரமிடாசார்யர்கள் ஆளவந்தாருட்பட ஸகலாசார்யர்களுக்கும் பஹுமாந பாத்ர பூதர்களாக விளங்கினவர்கள் என்பதே வஸ்துஸ்திதி. த்ரமிட பாஷ்யகாரரென்று ஆளவந்தார் நிர்தேசித்த வ்யக்தியும் பகவத் ராமானுஜாதிகள் நிர்தேசித்த வ்யக்தியும் அபிந்நமேயொழிய भिन्नमன்று என்கிற பரமார்த்தம் அவசாத் இவருடைய கையிலும் வெளிவந்ததாகக் கீழே நிரூபிக்கப்பட்டது. இந்த பரமார்த்தம் சாச்வத ப்ரதிஷ்டை பெற்றே நிற்கும்.

சாங்கரசிரோபூஷாவில் " उभयतस्पाशया रज्ज्वाऽनया नियन्त्रित एष मनीषी असंबद्धमेव मया लिखितमिति अञ्जलिबन्धमेव शरणयितुमर्हति " என்று அசைக்க முடியாதபடி நாமெழுதியிருக்கும் வாக்கியத்தை சாஸ்த்ரிகள் தமது வியாஸத்தில் ஆதியிலும் அந்தத்திலும் உதாஹரித்து " उभयतस्पाशया रज्ज्वा मम नियन्त्रणं विमोचितम् " என்றெழுதியுள்ளார். ஒருகாலும் விமோசநமேற்படாது.

रज्ज्वा नियन्त्रितस्सोऽयं सुहृत्सहृदयो महान् ।
नियन्त्रणमिदं भोग्यं मन्यमानः प्रहृष्यतु ॥
अनिवार्यमिदं नियन्त्रणं कथमेष प्रसभं निवारयेत् ।
अविमृश्य मनागपि स्वयं लिखतास्तेन फलं न किञ्चन ॥
असंगतार्थलेखेन जगद्वञ्चयतां नृणाम् ।
कुदृष्टीस्सहसा हर्तुं सज्ज एष जनस्सदा ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியரெழுதிய
த்ரவிடாத்ரேய தர்சந விமர்சநமும்
சாங்கரசிரோபூஷா விபூஷணமும்
முற்றுப்பெற்றன.

॥ श्रीरस्तु ॥

श्रीहस्तिशैलशिखरोज्ज्वलपारिजाताय नमः ॥

श्रीमते रामानुजाय नमः । श्रीमद्वरवरमुनये नमः ॥

ஸ்ரீ காஞ்சி. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

# தயிரரவப் பாடத்திருத்த மறுப்பு.

## - அவதாரிகை -

क्वणत्कनकभूषणव्रजवधूकरोदञ्चितः किमेष दधिमन्थनध्वनिरहो त्वया न श्रुतः ।
इति व्रतकृतिस्थितां फणितिमन्यथाकुर्वतो विमर्शकुशलस्य वाक् पटुधियां विगेया ध्रुवम् ॥ १ ॥

पवित्रयात्राकुतुकेन दासो यदा हि सेन्ट्रल्शकटालयस्थः ।
अभूत, तदा कश्चिदुपेत्य तत्र प्रायच्छदेकां प्रतिलेखकन्थाम् ॥ २ ॥

सैषा तु कन्था प्रचुरप्रसिद्धेः प्राज्ञस्य कस्यापि कृतिर्व्यलोकि ।
अथापि नास्यां गुणगन्धलेशोऽप्यस्तीति दुःखं बहुलं बभूव ॥ ३ ॥

अथापरेऽहन्यधिमङ्गलाद्रि श्रीमन्नृसिंहस्य हरेः पुरस्तात् ।
निषद्य तत्खण्डनलेख एको व्यलिख्यत प्रैषि च मुद्रणाय ॥ ४ ॥

संमुद्रितस्स प्रचुरं प्रचारं संप्राप्तवान् स्यादिति तर्कयामि ।
पुनश्च तत्खण्डनमेव भूरिवैशद्यपूर्णं विलिखामि पुर्याम् ॥ ५ ॥

अपार्थवर्गो यदि पण्डितानां मुखाद्विनिस्सृत्य भुवि प्रसर्पेत् ।
ततो ह्यनर्थो बहुलो भवेदित्यतीव भीतो विलिखामि भूयः ॥ ६ ॥

पुंस्त्वं स्वस्मिन्नस्ति विशिष्येत्यभिमानात् यद्वा तद्वा हन्त वदन्तो विलिखन्ति ।
ये केचित्ते संप्रति दृष्ट्वा कृतिमेतां वाचः पार्णैर्भवमाशु प्रथयन्तु ॥ ७ ॥

1. மேலெழுதப்பட்ட ஏழு ச்லோகங்களின் கருத்துச் சுருக்கம் வருமாறு; — * காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினாலோசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ * என்கிற திருப்பாவை ஸ்ரீஸூக்தியில் பாடத்தை மாற்றுகின்ற ஒரு விமர்சகரின் வாக்கானது விவேகிகளுக்கு வெறுக்கத்தக்கதேயாம். (2) வடநாட்டுத்திருப்பதிப் பவித்ர யாத்திரையில் விருப்பத்தினால் (12—6—58 காலை) அடியேன் சென்னை ஸெண்ட்ரல் ஸ்டேஷன் வந்து சேர்ந்ததும் ஒருவர் அவ்விடம் வந்து ஒரு மறுப்புச் சுவடியைத் தந்துபோனார். (3) அந்தச் சுவடி ஒரு ப்ரஸித்தரான பண்டிதரியற்றியதாகக் காணப்பட்டது. ஆனால் அதில்

குணலவலேசமுமில்லாமைபற்றி மிக வருத்தமுண்டாயிற்று. (4) அற்றைக்குப் பிற்றைநாள் க்ருஷ்ணா ஜில்லா மங்களகிரியில் அழகியசிங்கர் திருமுன்பேயிருந்துகொண்டு அந்தச் சுவடிக்குக் கண்டன நூலொன்றையெழுதி அம்ருதலஹரியில் அச்சிடுவதற்காக அனுப்பினேன். (5) அது அச்சாகி வெளிவந்திருக்குமென்றே யெண்ணுகிறேன். ஆனாலும், மீண்டும் ஒரு மறுப்பு நூலை [இதனை] விசேஷ விளக்கமுடையதாக ஸ்ரீ ஜகந்நாதத்திலிருந்து எழுதுகிறேன். (6) ஒருவாறு எழுதியான மறுப்பை மீண்டும் விவரித்தெழுதுவது எதற்காகவென்னில். தவறான அர்த்தங்கள் பண்டிதர்களிடமிருந்து வெளிவந்து உலகில் பரவினால் அதனால் அதிகமான அனர்த்தமன்றோ விளையும். அப்படி அனர்த்தம் விளைவதற்கு ஹேதுவான அபார்த்தம் தலைகாட்டாதபடிக்கு மீண்டும் மறுப்பெழுதியொழிப்பது அவசியமே. (7) வீணான செருக்கினால் எதையோ சொல்லுவதும் எதையோ எழுதுவதுமாகிப் போதைப் போக்குகின்ற சிலர் இந்நூலை நன்கு கண்டு நாவீறு கைவீறுகளைக் காட்டுவர்களாக

2. உலகமெல்லாங்கொண்டாட நின்ற உயர்ந்த நூலில் ஸஹஸா ஒருபாடத்தைத் திருத்துவதென்பது தெய்வத்தை அங்கபங்கஞ் செய்கிற பாதகத்தோடொக்கும்; தைத்திரீய யஜுஸ் ஸம்ஹிதையில் மூன்றாவது காண்டத்தில் மூன்றாவது ப்ரச்நத்தில் (பஞ்சாதி 17ல்) *प्रत्यवरोहन्ति * என்றொரு பதம். இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவும் **ப்ரத்யவரோஹந்தி** யென்றே ஓதிவருகின்றது. இங்கு வித்யாரண்ய பாஷ்யத்தில் "प्रत्यारूढवान् भवति" என்று ஏகவசநமாகவுள்ளதென்று கண்டு **ப்ரத்யவரோஹதி** யென்று மிகச் சிலர் பாடமோதி வருகின்றார்கள். இது வைதிக கோஷ்டிகளில் ஏற்கத்தகாத பாடமாயினும் பாஷ்ய மூலகமென்று சொல்லக்கூடிய உபபத்திலேசமாவது உள்ளது. அதிஸ்வல்பமான உபபத்தியுமின்றிக்கே ஸ்வாத்மநஸ் ஸந்துஷ்டியுமின்றிக்கே, உலகில் ஒருவர் கூட இசையப் பாங்கல்லாததொரு அபத்த பாடத்தைக் கல்பித்ததோடு நிற்காமல் ஸ்தாபிக்கவும் முன்வருவது மஹத்தான ஸாஹஸம்.

3. உலகத்தில் வடமொழிநூலிலோ தென்மொழிநூலிலோ அநாதியாகவும் எங்கும் ஒரே விதமாகவும் நிகழ்ந்து வரும் பாடத்தைத் தள்ளி நூதனமானதொரு பாடத்தை ஊஹிப்பதானால் இதற்கு ப்ரபலமான இரண்டு காரணங்கள் இன்றியமையாதவை. (1) உள்ள பாடத்தில் அநுபபத்தியை வலிதாகக் காட்டவேண்டியதொன்று. (2) ஊஹிக்கப்படும் பாடத்தில் (அல்லது) கல்பிக்கப்படும் பாடத்தில் உபபத்தியை விசேஷமாக நிரூபிக்க வேண்டியது மற்றொன்று. கற்பிக்கப்படும் பாடத்தில் உபபத்திகள் இருந்தாலுங்கூட, உள்ளபாடத்தில் அநுபபத்தி இல்லையானால் பாடத்தை மாற்றுவதற்கு ஔசித்ய லேசமும் கிடையாது. உள்ள பாடத்தில் ஒருவிதமான அநுபபத்தியும் இல்லாமலிருக்கவும், புதிய பாடத்தில் உபபத்தி ஒன்றுமில்லாததோடு அநுபபத்திகள் மலிந்திருக்கவும், அப்பாடத்தையே ஸ்தாபிக்கவேணுமென்று படாத பாடும் படுமவர்கள் ப்ராமாணிக கோஷ்டியில் பரிகணிதராகப் பெருமையோடு பண்டித கோஷ்டிகளில் பரிஹாஸ்யர்களாகியும் நிற்பர்கள். * வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர் * என்னும் பாடத்தில் மோனையின்பமில்லையென்று கருதிச் சிலர் " வண்ணமாடங்கள் வாழ் திருக்கோட்டியூர் " என்றும் " வண்ணமாடங்கள் வான்திகழ் கோட்டியூர் ' என்றும் யதேஷ்டமாகப் பாடத்தைத் திருத்தி " இப்பாடமுள்ள அதிப்ராசீந தாளகோசம் எமக்குக் கிடைத்திருக்கிறது " என்று கூறினால் இதனைச் செவியேற்பாருளரோ? இத்தகைய திருத்தங்களை ஆங்காங்கு அரைவர்கள் அநேக நூல்களில் செய்து கொண்டேயிருக்கிறார்கள். அவற்றைக் கணிசிப்பாராருமிலர்.

4. திருப்பாவையில் * கீசுகீசு பாசுரத்தில் * காசும் பிறப்புங் கலகலப்பக் கை பேர்த்து வாச நறுங்குழலாய்ச்சியர் மத்தினாலோசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ " என்னும் ஸ்ரீஸூக்தியில் ' தயிரரவம் ' என்கிற பாடத்தைத் **தயிரரவும்** என்று திருத்தாவிடில் வியாக்

கியானத்தோடு பொருந்தாதென்றும், திருத்திவிட்டால் மிகவும் பொருந்தி விடுகிறதென்றும்,
இங்ஙனே திருத்தங்கொண்டதொரு ஸ்ரீகோசம் நமக்குக் கிடைத்திருக்கிறதென்றும், அந்த
ஸ்ரீகோசம் ஒரு மஹானுடைய கையிலிருந்து நமக்குக் கிடைத்ததனால் இந்தத் திருத்தம்
உபேக்ஷிக்கத் தக்கதன்றென்றும்......இப்படிச் சில மஹான்கள் எழுதி வெளியிட்டிருப்பதைக்
காணாதாரில்லை.

5. இந்த வார்த்தைகள் முற்றிலும் அஸம்பத்தங்கள். தயிரரவும் என்கிற திருத்தத்தை
ஒரு யதாஜாதன் தன்னுடைய புத்தகத்தில் செய்திருக்கலாம், அது ஒருவர்க்குக் கிடைத்
திருக்கலாம். அதை அவர் ஸ்வஸஜாதீயனுடைய தென்னுமபிமானத்தினால் உச்சிமேல்
வைத்து மெச்சலாம். ஆனால் அதைப் பற்றின பேச்சு பண்டிதர் திரளில் தலைகாட்டத்
தகுதியுடைய தன்றென்னுமிடம் விரிவுக்கு அஞ்சாமல் விபுலமாக மூதலிக்கப் படுகின்றது.
இந்த ஸந்தர்ப்பத்தில் ஒரு வார்த்தை மிக முக்கியமாகத் தெரிவிக்க வேண்டியதுண்டு;
திவ்யப்ரபந்தங்களை எழுதி வைத்திருப்பவர்களும் கண்டபாடஞ் செய்து ஸேவிப்பவர்களும்
பெரும்பாலும் அபத்த பாடங்களைத் தான் கொண்டிருக்கிறார்கள். பாசுரங்களை நாலாயிர
மென்று கணக்கிட்டிருக்கிறார்கள், காதில் விழும் அபத்த பாடங்களோ கணக்கிலடங்கா.
(நாங்களிராக்கதிர்வாழ்) (ஏரார்ந்தகண்ணீர சோதை) (ஆயர் சிறுமயிரோவுமக்கு) (அணி
புதுவப் பங்கமலர்த் தண்டறையில் பட்டறபிரான் கோத சொன்ன) என்றித்தகைய
ஆச்சரியமான பாடங்களை விட்டிடுவோம். காலக்ஷேபபரர்களான ஸ்வாமிகளின் திருவாக்கில்
வெளி வரும் பாடங்களையே சில காட்டுவோம். திருப்பல்லாண்டில் * எந்நாளெம்பெரு
மானில் * உன்தனுக்கடியோமென்று * என்றோதாதவர்களை நாம் கண்டிலோம், இராமனுக்கு;
கண்ணனுக்கு, அச்சுதனுக்கு, மைந்தனுக்கு, வேந்தனுக்கு என்னுமாபோலே ‘உன்தனுக்கு’
என்பது தான் உற்றது என்றே பலருடைய கொள்கை. (மஞ்சளும் செங்கழுநீரும்) (மாமான்
மகளே மணிக்கதவும்) நீ நேச (நிலைக்கதவும்) என்றிப்படி ஓதாதவர்கள் மிகச் சிலரே. திரு
விருத்தத்தில் (உலகளந்த மால் பால் துழாய்க்கும் மனமுடையார்க்கும் நல்கிற்றை) என்று
ஓதாதவர்கள் ஒருவருமிலர். திருவாய்மொழியில் (போழ்து போகவுள்ளகிற்கும் புன்மை
யிலாதவர்க்கும்) என்று ஸேவிப்பவர்கள் ஏழெட்டு தடவை ஈடு ப்ரவசநம் செய்தவர்களே.
முன்னே (உள்ளகிற்கும்) என்பதில் ஓர் உம்மையிருப்பதாகக் கொண்டு அடுத்த சொல்
தொடரிலும் உம்மையிருக்கவேண்டியது அவசியமென்று கொண்டு (புன்மையிலாதவர்க்கும்)
என்கிறார்கள். * களிப்புங்கவர்வுமற்று......ஒளிக்கொண்டசோதியுமாய் * எம்மாவீட்டுத்திற
மும் செப்பும் * மேவுதண்மதியும் வெம்மதியுமாலோ * ...... இப்படியாக உம்மையிட்டு ஓது
மிடங்கள் ஒரு கணக்கில் அடங்குமவையோ?

6. திருநெடுந்தாண்டகத்தில் *கல்லெடுத்துக்கன்மாரிகாத்தாயென்றும்* என்கிறபாசுரத்
தில் ஒவ்வோரடியிலும் (என்றும்) என்பது இருமுறை வந்து, மூன்றடிகளில் ஆறு முறை
வந்திருப்பதனால் நான்காமடியிலும் " சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லேயென்றும்)
என்று உம்மையோடு கூடின பாடந்தானிருக்க வேண்டுமென்று வாதிப்பவர்களேயன்றோ
மலிந்துள்ளார்கள், உபதேசரத்தினமாலையில் *மற்றுள்ள வாழ்வார்களுக்கென்னும் பாசுரத்
தில் எங்கும் ஒரே விதமாக நிகழ்ந்து வரும் அநியாயப்பாடம் அநுவதிக்கவும் தகாததாயிருக்
கின்றது. (பெற்றிமையோரென்றும் முதலாழ்வார்களென்றும் பேரிவர்க்கு) என்றன்றோ
பண்டித பாமர விபாகமற ஸேவித்து வருகிறார்கள். பொய்கை பூதம் பேயாழ்வார்களுக்கு-
பெற்றிமையோரென்று ஒரு திருநாமம்; முதலாழ்வார்களென்று மற்றொரு திருநாமம் - என்று
அழகாக வியாக்கியானமும் ஸாதித்தருளுகிறார்கள். உண்மையில் இபபாசுரத்தில் உம்மைக்கு
ப்ரஸக்தியே கிடையாது, நாட்டையுய்த்த பெற்றிமையோரென்று — நாட்டை வாழ்வித்த
மஹானுபாவர்களென்கிற காரணத்தினால், முதலாழ்வார்களென்னும் பெயர் இவர்க்கு
உலகத்தே நிகழ்ந்து நின்றது என்பதாகத் திருவுள்ளம் பற்றியிருந்த பொருள் தலைகாட்ட

வழியில்லாதபடியன்றோ இரண்டு உம்மைகளை யிட்டு ஓதவும் அபார்த்த முரைக்கவும் தலைப்பட்டார்கள்.

7. இங்ஙனே ஆயிரக்கணக்காக வழங்கிவரும் அபத்தபாடங்களில் (மத்தினாலோசை படுத்த தயிரரவும்) என்கிற இவ்வபத்த பாடமும் பலருடைய வாயிலும் வருவதுதான்; இது அபூர்வமன்று. விவாதப் பாசுரத்தின் தொடக்கத்திலும் (கலந்து பேசின பேச்சரவம்) என்று ஓதாமல் ' பேச்சரவும் ' என்றோதுகிறவர்களே உலகில் மலிந்துள்ளார்கள். இதற்கு முந்தின பாட்டிலும் (வெள்ளை விளிசங்கின் பேரரவுங் கேட்டிலையோ) என்றே ஓதி வருகிறார்கள். முதலில் (புள்ளும்) என்று உம்மையிருக்கும் போது (பேரரவும்) என்றல்லது வேறுவிதமாக எப்படியிருக்க முடியும்? என்று வாதிக்கவும் முன்வருகிறார்கள். ஆக, பேரரவம் - பேச்சரவம் - தயிரரவம் என்கிற எல்லாவிடங்களிலும் உம்மை சேர்ந்த பாடந்தானுள்ளது என்று வாதிப்பார் மலிந்தவுலகில். ஓரிடத்தில் மட்டுமே உம்மையுள்ளதாக வாதிக்கவோ ஸாதிக்கவோ முன்வந்துள்ளவர்கள் மற்ற விடங்களிரண்டை யுபேக்ஷித்தது என்னோ? ஆனால் அவர்கள் சொல்லக்கூடியதொன்றுண்டு; "ஓரிடத்தையுமுபேக்ஷித்திலோம்; ப்ரஸக்தி வசாத் ஓரிடமே கொண்டோம்; மற்ற இரண்டிடங்களில் ப்ரஸக்தி விளையவில்லை. எங்கும் (அரவும்) என்கிற பாடந்தான் உள்ளது. திருப்பாவையில் மட்டுமன்று; திருப்பள்ளியெழுச்சியிலும் * கலந்தது குணதிசை கனை கடலரவும் * என்று தானிருக்க வேண்டும்; அங்கு தொடக்கத்தில் * புலம்பின புட்களும் * என்று உம்மையிருப்பதால் மேலே ( அரவும் ) என்று தானிருக்க வேண்டும்." — என்று.

8. முதல் திருவந்தாதியிலும் * அரவுமடல்வேழம் * என்றே இவர்களோதட்டுமே. இவர்களை ஒரு பண்டித பரிஷத்தில் உட்கார வைத்து, கையில் காகிதமும் எழுதுகோலும் கொடுத்துச் சில பாசுரங்களை யெழுதிக்காட்டும்படி வேண்டினால், [ எழுத்தொன்றுக்கு ஒரு ரூபாய் அல்லது ஒரு பவுன் ஸம்பாவனை என்று வைத்தே வேண்டுவோம்; அந்த வேண்டுகோளுக்கு இவர்களுமிணங்கி யெழுதினால் ] அதில் ஆழ்வார்களின் திருவாக்கில் வந்த எழுத்துக்கள் எத்தனை? என்று எண்ணிப் பார்க்க நமக்கு மிகவுமாசை யுண்டு. இவ்வாசை நிறைவேற வழியேது? ஆக இவ்வளவும் ப்ரக்ருத விஷயத்தில் அவதாரிகையாக இட்டது. இனி " ஓர் ஆராய்ச்சி " என்னும் பெயரால் வெளிவந்துள்ள சிறு சுவடியை எழுத்தெழுத்தாக வாராய்ந்து அத்தனையும் அபத்த ஸங்குலமென்பதை நிரூபிப்போமாக. ... ... *

அவதாரிகை முற்றிற்று.

---

விவக்ஷிதம்? என்று. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த நிர்த்தாரண நிபுணங்களான ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களை வாசிப்பதும் ப்ரவசநம் செய்வதுமாக இருப்பவர்களைத்தானே ப்ரமாதாக்களென்கிறீர்கள். அவர்களிடத்தில் புஷ்கலமான பலம் காணப்படுவதாக எழுதுகிறீர்கள். அந்த பலபௌஷ்கல்யம் ப்ரமாண ப்ரமேயங்களின் ப்ராபல்யத்தைப் பொறுத்ததாகுமேயல்லது வேறுவிதமாகத் தேருது.

8. விசிஷ்டாத்வைத மதத்தைச் சேர்ந்த வித்வான்களுக்கும் ப்ரபுக்களுக்கும் தங்கள் மதத்தில் திடமான அபிநிவேசமிருப்பதையும், தங்கள் ஆசாரியர்களிடத்திலே கனத்த பக்தியிருப்பதையும், அந்த ஆசார்யர்களுக்கு ஸகல தேவாலயங்களிலும் திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவாதிகளான அநேக மஹோத்ஸவங்கள் நடத்தி வருவதையுங்கொண்டே இவர்களின் மதத்தில் ப்ரமாத்ரு பலம் புஷ்கலமாயிருப்பதாக எழுதினேனென்னில்; இது அசட்டுத்தனம்மிக்க வார்த்தையாகும். எழுதியுள்ள பங்க்தி இவ்வபிப்ராயத்திற்குச் சிறிதும் சேராது. அப்போது வேறு விதமாகவே வாக்யம் அமைந்திருக்கவேண்டும்.

9. சாஸ்த்ரிகள் இதற்குமேலெழுதியுள்ளதாவது— அத்வைத மதத்தில் ப்ரமாண ப்ரமேய பலம் புஷ்கலமென்றும், ஆகையினால்தான் அந்த மதம் இமவந்தந் தொடங்கி இருங்கடலளவும் வியாபித்திருக்கின்றதென்றும், ப்ரமாதாக்களின் பலம் சிறிதுமில்லையென்றும் எழுதியுள்ளார்கள். இதுவும் அஸமஞ்ஜஸமான வார்த்தையே. அத்வைதமத மென்றால் என்ன? என்று கேட்போம். த்வைத மென்றால் பேதம்; அத்வைத மென்றால் அபேதம். சேதநாசேதநங்களுக்கும் பரப்ரஹ்மத்திற்கும் அபேதத்தை ப்ரதிபாதிக்கும் மதம் அத்வைத மதம் என்றதாகத் தேறிற்று. விசிஷ்டாத்வைதிகளான யாமும் இங்ஙனே அபேதத்தை ப்ரதிபாதிக்கிறோமென்பதை இவர்கள் அறியார்கள் போலும். அத்வைதத்தில் எமக்குச் சிறிதும் பகையில்லை. பகையிருந்தால் விசிஷ்ட அத்வைதிகளென்று எமக்கு வ்யபதேசம் வழங்க ப்ரஸக்தியிராது. நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் முதலான எமது ஆழ்வார்களருளிச் செய்துள்ள திவ்ய ப்ரபந்தங்களில் அத்வைத வாதம் விசேஷமாகவுள்ளது. திருவாய்மொழியில் * நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய் * என்றும் * எழில் மூவுலகும் நீயே, அங்குயர் முக்கட்பிரான் பிரமபெருமானவன் நீ, வெங்கதிர் வச்சிரக்கை இந்திரன் முதலாத் தெய்வம் நீ * என்றும் இப்படிகளிலே அருளிச் செய்திருப்பது அபரிமிதம். ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை யழைக்கும் போது * பூத்தண்டுழாய் முடியாய்! புனை கொன்றையஞ் செஞ்சடையாய்! வாய்த்த வென்னான்முகனே * முனியே நான்முகனே முக்கண்ணப்பா! * என்றிங்ஙனே யழைக்கின்றார்.

10. இப்படிப்பட்ட அத்வைத வாதங்கள் வடமொழி வேதத்திற்போலவே தென்மொழி வேதமாகிய திவ்ய ப்ரபந்தங்களிலும் மலிந்துள்ளன. இவ்வத்வைத வாதத்தை ஒரு சாஸ்த்ரத்திற்கும் விரோதமில்லாதபடி நிர்வஹிக்கும் வழியை அத்வைதிகளெனப்படுவார் அறிந்து கொள்ளவில்லை. விசிஷ்டாத்வைதிகளே அறிந்துள்ளார்களென்பது உலகமறிந்த பரமார்த்தம். அந்த நிர்வாஹ ப்ரணாளியை சாரீரகமீமாம்ஸையியற்றிய வ்யாஸ மஹர்ஷி தாமே பல அதிகரணங்களில் ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார். இங்குச் சுருக்கமாகவும் ஸாரமாகவும் அதைத் தெரிவிப்போம்.

*11.* ச்ருதிகளில் * ज्ञाज्ञौ द्वावजावीशनीशौ – ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ * இத்யாதிகளில் ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு ஈசத்வ அநீசத்வாதிகளாலே பேதம் தெரிவிக்கப்பட்டுள்ளது. * तत्त्वमसि– தத்த்வமஸி * இத்யாதிகளில் அபேதமும் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஜீவேச்வரர்களுக்கு அத்யந்த பேதத்தையே அங்கீகரிக்குமளவில் அபேத ச்ருதிகள் அமுக்க்யங்களாக வேண்டிவரும். ஸ்வரூபைக்யத்தை அங்கீகரிக்குமளவில் பேதச்ருதிகள் அமுக்க்யங்களாக வேண்டிவரும். இருவகையான ச்ருதிகளும் [அதாவது, பேதத்தைத் தெரிவிப்பவையான ' ज्ञाज्ञौ द्वावजावीशनीशौ ' இத்யாதிகளும், அபேதத்தைத் தெரிவிப்பவையான * தத்த்வமஸீத்யாதிகளுமான உபயச்ருதிகளும்] முக்க்யமாகவே உபபந்நமாவதற்காக ஜீவன் பரப்ரஹ்மத்திற்கு அம்சபூதன் என்று அங்கீகரிக்கவேணும். விசிஷ்ட வஸ்துவில் ஏகதேசமாயிருக்கைதான் அம்சத்வமென்பது. அப்ருதக்ஸித்த விசேஷணத்வத்தில் பர்யவஸித்து நிற்குமது. கோத்வ விசிஷ்டமான கோவுக்கு கோத்வமானது அப்ருதக்ஸித்த விசேஷணத்வேந எப்படி அம்சமாகிறதோ, அதுபோலவே சேதநா சேதந விசிஷ்டமான பரப்ரஹ்மத்திற்கு அப்ருதக்ஸித்த விசேஷணத்வேந ஜீவன் அம்சபூதனாகிறான். ஆக, அப்ருதக்ஸித்த விசேஷணபூத கோத்வாதி வாசிசப்தங்களுக்கு கவாதி வ்யக்திபர்யந்த வாசித்வம் தேறுவதுபோல, பரமாத்ம அப்ருதக்ஸித்த விசேஷணபூதனான ஜீவாத்மாவைச் சொல்லவல்ல த்வமாதிசப்தங்கள் விசேஷ்யபூதனை பரமாத்மாவளவும் சொல்லி நிற்பவையென்பது ஆக்ருத்யதிகரணந்யாய ஸித்தமாகையாலே * தத்த்வமஸி * இத்யாதிகளான அபேத ச்ருதிகளும் முக்க்யமாய், விசேஷண விசேஷ்யபூதர்களான ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு ஸ்வரூப பேதமுள்ளதனாலே பேத ச்ருதிகளும் முக்க்யமாய் நிர்வஹிக்கப்படுகின்றன. அம்சாதிகரண ஸ்ரீபாஷ்யாதிகளில் விரிவு காண்க.

*12.* ஏவஞ்ச அத்வைதத்தில் எமக்குப் பகையில்லையென்பது திண்ணமாக எண்ணத்தக்கது. விசிஷ்டாத்வைதமென்கிற பதத்திற்குப் பலவகையான பொருள்கள் கூறுவதுண்டு. விசிஷ்டஸ்ய அத்வைதம் விசிஷ்டாத்வைதம்; என்கிற வ்யுத்பத்தி ப்ரஸித்தமானது. விசிஷ்டம் ச தத் அத்வைதம் ச விசிஷ்டாத்வைதம் என்கிற வ்யுத்பத்தியும் கொள்ளலாமென்று நாம் உபந்யஸிப்பதுண்டு. விசிஷ்டமென்பதற்கு மிகச் சிறந்ததென்று பொருள். மிகச் சிறந்ததான அத்வைதம் விசிஷ்டாத்வைதமெனப்படுகிறதென்று கொள்க. ஒரு சாஸ்த்ரத்திற்கும் விரோதமில்லாதபடி நிர்வஹிக்கப்படுகையே சிறப்பு என்க. அத்வைத ச்ருதிகளைக் கைவிட்டார்கள் த்வைதிகள்; த்வைத ச்ருதிகளைக் கைவிட்டார்கள் அத்வைதிகள். சரீராத்மபாவத்தை ப்ரதிபாதிக்கின்ற கடக ச்ருதிகளை அறவே கைவிட்டார்கள் மேற்சொன்ன உபயமதஸ்தர்களும். விசிஷ்டாத்வைதிகளோ வென்னில் எந்த ச்ருதியையும் கைவிட்டவர்களல்லர். சேதநாசேதந ஈச்வரர்களுக்கு ஸத்யமான ஸ்வரூப பேதத்தை இசைகையாலே த்வைதவாதிகளாகிறோம். சரீர சரீரி பாவத்தாலே அபேதத்தை இசைகையாலே அத்வைதவாதிகளாகிறோம். இத்தகைய ஸாமரஸ்யத்தை சரீர சரீரி பாவப்ரதிபாதகங்களான கடக ச்ருதிகளைக் கொண்டே செய்கிறோமாகையாலே விசிஷ்டாத்வைதிகளாகிறோம்.

*13.* இனி, அத்வைதிகளென்று வழங்கப்படுகின்ற ஒரு வகுப்பினருடைய மதத்தில் எது ப்ரதான ப்ரதிதந்த்ரமாக ஒப்புக்கொள்ளப்படுகிறதென்று பார்க்கவேணும். * दृश्यं मिथ्या दृष्टिकर्ता च मिथ्या दोषो मिथ्येत्येव सिद्धान्त एषाम् - த்ருச்யம் மித்த்யா த்ருஷ்டிகர்த்தா ச மித்த்யா தோஷோ

மித்த்யேத்யேவ ஸித்தாந்த ஏஷாம் * என்கிறபடியே 'எல்லாம் புளுகு' என்பதுதான் எங்களுடைய மதத்திற்கு ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தமென்று இவர்கள் சொல்லித் தீரவேணும். இவ்விஷயத்திற்கு உபநிஷத்துக்களிலிருந்தோ ப்ரஹ்ம ஸூத்ரத்திலிருந்தோ மற்றும் எதிலிருந்தும் அணுவளவான ப்ரமாணமும் இவர்களால் காட்டமுடியாதென்பது கல்வெட்டாதலால் " அத்வைத மதத்தில் ப்ரமாண பலம் புஷ்கலம் " என்று சாஸ்த்ரிகள் எழுதுவது உண்மைக்கு மாறுனதே. இது மித்யாவாதமே. * ஸர்வம் மித்யா * என்று சொல்லுகிற ப்ராமாணிகர்களின் வாக்கில் [அதாவது ' अहमपि मिथ्या, मम वचोऽपि मिथ्या ' என்பவர்களின் திருவாக்கில்] " விசிஷ்டாத்வைதிகளுக்கு ப்ரமாண ப்ரமேய பலம் கிடையாது, அது அத்வைதிகளுக்குத்தானுள்ளது " என்று வெளி வருகின்ற இந்த வார்த்தையும் பொய்யாகத்தானேயிருக்கவேண்டும். இதுமட்டும் ஸத்யமென்றால் सर्वमिथ्यात्ववादம் எங்ஙனே ஜீவிக்கும்? இதில் நாம் அதிகமாக வாக்ப்ரபஞ்சம் செய்வது मृतदन्दशूकमारणप्रयासமாகுமத்தனை.

14. இந்த சாஸ்த்ரிகள் " அத்வைத மதாவலம்பிகளான பண்டிதர்களுக்கும் ப்ரபுக்களுக்கும் தங்கள் மதத்தில் திடமான அபிநிவேசமோ அபிமாநமோ கிடையாது; தங்கள் ஆசாரியர்களிடத்திலும் ஆழ்ந்த பக்தி கிடையாது " என்றெழுதுகிருர்கள். இதை இவர்களுடைய ரோதநமாக நினைக்கிறோம். இப்படிப்பட்ட ரோதநத்தைச் செய்தே இவர்கள் ஸகல காலத்தையும் கழிக்கலாம். ஏதோ வொரு ஆக்ரஹமே கொண்டு உலகை வஞ்சிப்பதற்காகவே எல்லாம் புளுகு என்று சொல்லுகிற மதத்தில் அபிநிவேசமோ அபிமாநமோ யார்க்குத் தானுண்டாகும்? முந்துற முன்னம் இவர்களுக்கு உண்டா? என்று கூட நாம் கேட்க முன் வருகிறோம். ஆளவந்தார் * अभिनिवेशवशीकृतचेतसां बहुविदामपि संभवति भ्रमः — அபிநிவேசவசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம: * என்று இவர்களின் மூல புருஷர்களைப்பற்றி யருளிச்செய்தார். கயிற்றைப்பார்த்துப் பாம்பென்று ப்ரமிப்பது ஸஹஜமே; ' கயிறுதான், பாம்பன்று ' எனறு தெளிந்த பின்பும் பரம்பரையாக ப்ரமம் அநுவர்த்திக்கிறதென்றால் இது ஸம்பாவிதமேயன்று, வீண் பிடிவாதமான கொள்கை என்பதுதான் வஸ்து ஸ்திதி. இந்த வஸ்து ஸ்திதியை விவேகிகளின் உள்ளம் உணராமற் போகாது.

15. விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களான ஆசார்யஸார்வபௌமர்களை மூலைக்கொருவராகக் கிளர்ந்து தூஷிப்பதுதான் அத்வைதமத ப்ரவர்த்தந ஸர்வஸ்வமென்று சிக்கனக்கொண்டு இரவும் பகலும் இதுவே பணியாகவிருந்து இவ்வளவால் தங்களை க்ருதக்ருத்யர்களாக அபிமாநித்திருக்கின்ற இவர்கள், தங்கள் மதம் ஆஸேது சீதாசலம் வியாபித்திருக்கின்றதென்று களிப்புக்கொள்வதில் குறை என்கொல்! காஷ்ட லோஷ்ட கரீஷ புரீஷாதிகள் ஒவ்வோரிடத்திலும் மலிந்து கிடக்கின்றனவென்று களிப்பாரில்லையோ? விஷ்ணுவாலயங்களிலோ சிவாலயங்களிலோ நடைபெறும் மஹோத்ஸவங்களில் கூடுகிற வைதிகர்களையும் பாமரர்களையும் கணக்கிட்டுப் பார்க்கலாமே; உலகத்தில் தேன்மாமரம் பலாமரம் எலுமிச்சை மரம் போன்றவை எத்தனை? நுணாமரம் வேப்பமரம் போன்றவை எத்தனை? என்றும் எண்ணிப்பார்க்கலாமே. * सर्वतः करवीरादीन् सूते सागरमेखला । मृतसंजीविनी यत्र मृग्यमाणदशां गता * என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ஸூக்தியை யநுஸந்தித்துத் தெளிவது.

16. சாஸ்த்ரிகள் விபர்யஸ்தமாக வொன்று தெரிவிக்கிறார்கள்; "परेषामिव मतान्तरस्थेषु अवज्ञाया अभाव: परम् अद्वैतिनां गुण: श्लाघास्पदम्" என்று. இதர மதஸ்தர்கள் அத்வைதிகளைத் திரஸ்காரம் செய்து பரிபவப்படுத்துவதுபோல அத்வைதிகள் இதர மதஸ்தர்களைத் திரஸ்காரம் செய்வதோ பரிபவிப்பதோ கிடையாதென்றும், இந்த வொரு குணம் அத்வைதிகளிடத்தில் கொண்டாடத்தக்கதாக விளங்குகிறதென்றும் இந்த வாக்யத்திற்குப் பொருள். இந்த மஹா குணத்திற்கு இந்த சாஸ்த்ரிகளே ப்ரதமோதாஹரண பூமி போலும். இவர் தமது சுவடியில் ஸ்ரீவைஷ்ணவாசார்ய ஸார்வபௌமர்களிடத்திலே எவ்வளவு மரியாதையாக நடந்து கொண்டிருக்கிறாரென்பதை மத்யஸ்த வித்வான்களன்றோ பரிசீலித்துணரவேணும். ஆளவந்தார் எம்பெருமானார் ச்ருதப்ரகாசிகாசார்யரான ஸ்ரீ ஸுதர்சனபட்டர் ஸ்ரீநிகமாந்த தேசிகன் முதலான ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள் அவதார புருஷர்களென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். இவ்வாசார்ய ஸார்வபௌமர்களை இவர் தம் சுவடியில் அகாரணமாகவோ ஸகாரணமாகவோ அடிக்கடி பிடித்திழுத்து 'யாமுந:, ஸுதர்சந:, வேங்கடநாத:' என்று அவலீலையாக எழுதிப் போருவதல்லாமல் இவ்வாசார்யர்கள் உலகை வஞ்சிப்பவர்கள், பொய் பேசுமவர்கள என்றும் கூசாது எழுதுகின்றார். இவ்வண்ணமாக இவர் அவஜ்ஞை பண்ணுவதனால் அம்மஹான்களுக்கு யாதொரு லாகவமும் விளையாதென்பதை விவேகிகள் உணர்வார்கள்.

## பகவத் ராமாநுஜமதம் நவீநமென்றதுபற்றிய விமர்சம்.

17. குருமுகமாக க்ரஹிக்க வேண்டிய ஸதாசார்ய திவ்யஸூக்திகளைக் கேவலம் புஸ்தகாவலோகநத்தினால் க்ரஹித்து வாக்யங்களேயும் அபார்த்தங்களேயே வெளியிடுமிவர் பரமார்த்த கௌசலத்தை எவ்வளவு உண்டுபண்ணியிருக்கிறார் தெரியுமோ? "विशिष्टाद्वैतमतस्य नवीनत्वं वेङ्कटनाथ एव वदति—விசிஷ்டாத்வைத மதம் நவீநமென்பதை வேதாந்த தேசிகனே கூறியுள்ளார்" என மகுடமிட்டு "விசிஷ்டாத்வைத மதம் நவீநமென்பது வேங்கடநாதராலே யதிராஜஸப்ததியில் *யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம்* என்று ஸ்பஷ்டமாக வொப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றது" என்றெழுதியுள்ளார். இப்படி யெழுதுமிவரை ஆர்ஜவமற்ற ஞானமுடையவரென்பதா விப்ரலம்பகரென்பதா சொல்லவேண்டும். இவர் ப்ரமமும் விப்ரலம்பமுமே வடிவெடுத்தவரென்பதை இவருடைய சுவடி ஒவ்வோரிடத்திலும் விசதமாகக் காட்டுகின்றது.

18. *யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம் ததபி கிம்* என்று மேலேயெடுக்த ஸ்ரீஸூக்தியில் என்ன சொல்லுகிறதென்பதை நன்கு நிரூபிப்போம். யதிராஜ ஸப்ததியில் இது ஐம்பத்தேழாவது ச்லோகம். இதற்கு முன்னே ஐம்பதாவது ச்லோகம் —* निराबाधा बोधायनफणितिनिष्यन्दसुभगा: विशुद्धोपन्यासव्यतिभिदुरशारीरकनया:। अकुण्ठै: कल्पन्ते यतिपतिनिबन्धा निजमुखै: अनिद्राणप्रज्ञारसधमनिवेधाय सुधियाम ॥ * என்றுள்ளது. இதில் "போதாயநபணிதி நிஷ்யந்த ஸுபகா:" என்றிட்ட பகவத்ராமாநுஜ திவ்யக்ரந்த விசேஷணத்தினால் ஸ்ரீபாஷ்யம் பகவத்போதாயந வ்ருத்தியை யநுஸரித்ததென்னுமிடம் நிஸ்ஸந்தேஹம். 'श्री भाष्यकारमतस्य नवीनत्वमेव स्थापितम' என்றும் 'शङ्कितं नवीनत्वं न प्रतिक्षिप्तम्' என்றும் 'बोधायनादिभि: प्रवर्तितत्वेन प्राचीनत्व नोक्तम्' என்று இவரெழுதியுள்ளது மருளினலா? அன்றி உலகை வஞ்சிப்பதா? என்பதை ப்ராமாணிகர்கள் தாம் நிர்ணயிக்கவேணும்.

யிருந்தோம்;— "வேதத்தில் * चक्षुर्देवानामुत मर्त्यानाम् — சக்ஷுர் தேவாநாம் உத மர்த்யாநாம் * என்கிற வாக்கியம் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் கண்ணாயிருப்பவனெம்பெருமான் என்னும் பொருளுடையது. இம்மறையுரையையுட்கொண்டே நம்மாழ்வார் திருவாய்மொழியில் * கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு * என்கிற பாசுரத்தை யருளிச்செய்தாரென்று நம்பிள்ளை முதலான ஆசாரியர்கள் அருளிச்செய்கிறார்கள். ஆனால் இப்பாசுரத்தில் 'தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே' என்று திருவேங்கடமுடையானை ப்ரஸ்தாவித்திருக்கிறது; உபாத்தமான வேத வாக்கியத்தில் அந்த ப்ரஸ்தாவமேயில்லை; ஆதலால் அந்த ச்ருதி வாக்யத்திற்கும் இந்தப் பாசுரத்திற்கும் சேர்த்தி சொல்வது பொருந்தாதென்று க்ஷேபிக்கலாகுமோ ?" என்றெழுதியிருந்தோம். இதற்குப் பிறர் கூறும் மறுப்பாவது — உபாத்தமான வேத வாக்யத்தை * கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கென்னும் பகுதியில் மாத்திரம் அருளிச் செய்திருக்கிறாரேயன்றி அப்பாசுரத்தின் எல்லா வாக்யங்களிலும் அருளிச் செய்திருக்கவில்லை; * உத்காயதீநாம் என்னும் ச்லோகமோவென்னில் * காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து வாச நறுங்குழலாய்ச்சியர் மத்தினாலோசை படுத்த தயிரரவம் கேட்டிலையோவென்னும் பகுதிக்கே மேற்கோளாகக் காட்டப்பெற்றிருப்பதால் அந்த ச்லோகத்தில் ஆபரணவொலியைப் பற்றின விசாரம் ஆவச்யகமேயாகும் — என்று

19. இக்கலக்கத்தையும் சமிப்பிக்கிறோம். * சக்ஷுர் தேவாநாமித்யாதி வேத வாக்யமானது * கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கென்னும் பகுதிக்கு மட்டுமே மேற்கோளாகவுள்ளதென்னுமிடம் நிர்விவாதம். * சக்ஷுர் தேவாநாமென்கிற வேத வாக்கியத்திற்கு விஷயபூத வ்யக்தியும் ப்ரக்ருதமான பாசுரத்திற்கு விஷயபூத வ்யக்தியும் ஒன்றேயாயிருக்க வேண்டுமே. பாசுரத்திற்கு விஷயபூதன் திருவேங்கடமுடையானென்பது ஸ்பஷ்டம். உபாத்தமான வேத வாக்யத்திற்கு விஷயபூதன் யாவனென்று ஆராய்வோம். இந்த வேத வாக்கியம் தைத்திரீய யஜுஸ் ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்தில் ஆறுவது ப்ரச்நத்தில் * प्राचीमनु प्रदिशम् * என்று தொடங்குமநுவாகத்தில் இரண்டாவது பஞ்சாதியிலுள்ளது. * अग्ने प्रेहि प्रथमो देवयतां चक्षुर्देवानामुत मर्त्यानाम् * என்பது அந்த வாக்யஸந்நிவேசம். இங்கு திருவேங்கடமுடையானைப் பற்றின ப்ரஸ்தாவமும் கிடையாது; நாராயணனைப் பற்றின ப்ரஸ்தாவமும் கிடையாது. ஆகவே இந்த வேத வாக்கியத்தை அந்தப் பாசுரத்திற்கு மேற்கோளாகக் காட்டியிருப்பது பொருந்தாதென்று விமதர்கள் சிலர் க்ஷேபித்து வருகிறார்கள். இந்த க்ஷேபத்தை நாம் இசைபவர்களல்லோம். அபர்யவஸாந வ்ருத்தியாலே, * साक्षादप्यविरोधं जैमिनिः * என்கிற ஸூத்ரத்தையுட்கொண்ட வைச்வாநராதிகரண மர்யாதையினாலே ஸமந்வயப் படுத்தும் வழியை நாம் நன்கறிவோம். ஆனால் இங்கு நம்முடைய வாதமென்னவென்றால், விசேஷ்ய நிர்தேசம் முக்கியமானது; அஃது இல்லை. அன்றியும் அந்த வேத வாக்யத்திற்கு மிகப் பொருத்தமாகப் பாசுரமிருக்கவேணுமானால் * கண்ணாவான் விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் * என்றிருக்கவேணும். மண்ணோர் விண்ணோர்க்கென்று மாறுடியிருப்பது கூடாது. "என்றும்" என்கிற அதிகமான சொல் இருக்கவுங்கூடாது. இதற்கென்ன மறுமொழி கூறினர் பிறர் ?

20. "* உத்காயதீநாமென்கிற ச்லோகம் *காசும் பிறப்பும்......... தயிரரவம் கேட்டிலையோ* என்னும் பகுதிக்கே மேற்கோளாகக் காட்டப்பெற்றிருப்பதால்" என்கிற பிறருடைய வார்த்தை மிகவும் சுஷ்கமானது. [ உத்காயதீநாம் இது பாசுரத்திலிருக்கிறதோ ? இல்லை; [ அரவிந்த லோசநம் ] இது பாசுரத்திலுள்ளதோ ? இல்லை. [ திவம் அஸ்ப்ருசத் ] இது பாசுரத்திலுள்ளதோ ? இல்லை. [நிரஸ்யதே யேந திசாம் அமங்களம் ] இது பாசுரத்திலுள்ளதோ ? இல்லவேயில்லை. [ வ்ரஜாங்கநாநாம் தத்ந: நிர்மந்தநசப்த: ] என்னுமிவ்வளவேயாயிற்றுப் பாசுரத்திலுள்ளது. ஆக, சுலோகத்தின் பொருளுக்கும் பாசுரத்தின் பொருளுக்கும் அதி

ஸ்வல்பமான ஒற்றுமையேயுள்ளது. இப்படியிருக்க, பாசுரத்திலுள்ளதெல்லாம் சுலோகத்தில் காட்டப்பட வேணுமென்றும், சுலோகத்திலுள்ளதெல்லாம் பாசுரத்தில் காட்டப்பட வேணுமென்றும் வீணன ஆக்ரஹங்கொண்டு எழுதுமதெல்லாம் சுஷ்க வாக் ஜாலமேயென்னத் தட்டில்லை.

*21.* இங்கு ஸாரமான வார்த்தை இவ்வளவே; ஆய்ச்சியர் மத்தினுலோசை படுத்த தயிரரவத்தையே ஆண்டாள் அடையாளமாகக் காட்டினுள். தயிர்கடையும் போது, நம போல்வாருடைய அகத்துப்பெண்கள் மௌனமாயிருந்து கொண்டோ, வம்புப்பேச்சுக்களைப் பேசிக்கொண்டோ கடையுமா போலன்றிக்கே அரவிந்த லோசனனை அச்சுதனைப் பாடிக் கொண்டே ஆய்ச்சியர்கள் கடைகிருர்களென்பது ஆசாரியர்களுக்கு விவக்ஷிதமாயிற்று. அதனுல், * **உத்காயதீநாமித்யாதி** ச்லோகத்தை யெடுத்துக் காட்டினுர்கள். தயிர்கடையும் போது கண்ணனைப் பாடிக்கொண்டே கடைவர்களோ வென்கிற சங்கைக்குப் பரிஹாரமாக * **விக்ரேதுகாமா கில கோபகந்யா** * என்கிற ரஸிக ச்லோகத்தையுமெடுத்துக் காட்டி ஸம்க்ஷேபமாக வியாக்யானித்தருளினுர்கள். * **உத்காயதீநாமித்யாதி** ஸ்ரீ பாகவத ச்லோகமானது திருப்பாவைப்பாசுரத்திற்கு ஸாக்ஷாத் ஸம்வாத ப்ரமாணமாக ஆவதற்கு ஔசித்யமே கிடையாதென்கிற தத்வம் விசேஷித்துக் குறிக்கொள்ளத் தக்கது, கண்ணபிரான் திருவாய்ப் பாடியிலே விஹாரம் செய்து கொண்டிருந்த காலத்து நிகழ்ச்சியைக் கூறுவது திருப்பாவைப் பாசுரம், கண்ணபிரான திருவாய்ப்பாடியை விட்டு நீங்கி மதுரைக்கெழுந்தருளின பிறகு கோகுலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுவது உபாத்தமான ஸ்ரீபாகவத ச்லோகம். இந்த நெடுவாசியையுற்று நோக்காமல் ச்வேதபத்ர சிதீகரணம் செய்வார்க்கு நாமுரைப்பதெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தையாமத்தனை.

*22.* ச்லோகத்தில் வகாரமிருந்தும் அது பிறருடைய சுஷ்கவாதத்திற்குக் கை கொடுக்க மாட்டாததாயிற்று. பாசுரத்தில் உம்மையில்லாதிருக்கவும் அதனையிழுத்து ஏறிட்டுக் கொண்டாலும் அனர்த்தமேயொழிய அர்த்தமொன்றில்லை — என்பது தேறி நின்றது. இன்னமும் தேறுமாறு காணீர்.

## அரவம் என்னுஞ் சொல்லின் தத்துவம்.

*23.* அரவம் என்கிற தமிழ்ச் சொல்லுக்குப் பாம்பு என்னும் பொருள் ப்ரஸித்தமானது. ப்ரக்ருதத்தில் அப்பொருள் இல்லை. ஓசை என்னும் பொருளே விவக்ஷிதமாயுள்ளது. இப்பொருளில் ரவ: என்கிற வடசொல்லே அரவமென்ருயிற்றென்பது அப்ரகம்ப்யமானது. **ரங்கம்** — அரங்கம்; **ரத்நம்** — அரதனம், **ரம்பா** — அரம்பை இத்யாதிவத் ரவ: அரவமாயிற்று. ஓசையென்கிற பொருளில் அரவம் என்றே ப்ரயோக முள்ளது; அரவு என்கிற ப்ரயோகம் ஓரிடத்திலும் கிடையாது. '' துஷ்யது துர்ந்யாயேந அரவு என்னுஞ் சொல் வடிவமிருப்பதாக வைத்துக் கொண்டாலும் அதன் மேலேற்றப்படுகிற உம்மையினுல் ஸமீஹித லேசமும் ஸித்தியாது '' என்னுங்கருத்துடன் நாமெழுதியிருந்தது கொண்டு அரவு என்கிற சொல்வடிவத்தை நாம் இசைந்து விட்டதாகப் பிறர் நினைப்பது ஊமனுர்கண்டகனவேயாம். ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோருத்தரே தக்ஷிணே ச பார்ச்வே ஒருவர்கூட அரவென்னுஞ் சொல்லுக்கு ஓசையென்னும் பொருளை இசையார். '' அரவு — ஆர்ப்பரவு '' என்று சிலர் காட்டியிருப்பது கண்டு மருளவேண்டா. இதைப்பற்றி '' **அரவாராய்ச்சி** '' என்றொரு தனிநூல் பிறந்து வெளிவரும். இதனிடையில் வேறொரு கூத்து கிளம்பியுள்ளது. அதாவது, அரவம் என்பது வடசொல்லின் விகாரமன்றென்றும், அதுவொரு தனித் தமிழ்ச் சொல் என்றும், தமிழுக்கே உரியதாயிருக்கின்ற அரவமென்னுமிச் சொல். [நீலம் என்பது நீல் என்று கடைக் குறையாவது போல] அரவ் என்று கடைக்குறையாகி உம்மையோடு சேர்த்து அரவும் என்ருகியிருக்கிறதென்றும் ........இப்படி கைபோன

போக்கெல்லாம் எழுதியுள்ளார்கள். சாகுந்தல நாடகத்தில் * स्त्रीणामशिक्षितपटुत्वम् – ஸ்த்ரீணும் அசிக்ஷித படுத்வம் * என்ற ச்லோகமே இங்கு நினைவுக்கு வருகிறது. வநப்ரஸ்தாநஸமயத்தில் பிராட்டி பெருமாளுக்குச் சில அபூர்வார்த்தங்களுணர்த்துகிருள்; அக்காலே "யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்கோ நிரயோ யஸ் த்வயா விநா இதி ஜாநந்" என்ருள்; இவ்விடத்திற்கு இன்சுவைப்பொருள் கூறுமவர்கள் "நீர் ஆண்பிள்ளைப்பள்ளியிலே ஓதியிருந்தீராகிலும், பெண்பிள்ளைப் பள்ளியிலும் சிறிது ஓதவேணுங்காணுமென்கிருள் பிராட்டி" என்று கூறுவதுண்டு. * போற்றும் பொருள் கேளாய் * என்ற விடத்து இப்பொருளை ஆசாரியர்களுமருளிச் செய்வதுண்டு. இதை அனுஷ்டாந பர்யந்தமாகக் காட்ட விரும்பிய பிறர் பெண்பிள்ளைப்பள்ளியிலே படிக்கத் தொடங்கிப் பெற்ற ஜ்ஞாந ப்ரவாஹமிது காணீர். * குறியதன் கீழ் ஆக் குறுகலுமதனேடுகரமேற்றலுமியல்புமாந் தூக்கின் * என்ற நன்னூற்சூத்திரத்தையெடுத்துக் கொடுத்திருந்தால் அதையும் எழுதிவைத்து ஒரு ஏடு ப்ரஸங்கம் செய்திருப்பர்கள். * परप्रत्ययनेयबुद्धिः * என்ற காளிதாஸோக்திக்கு இலக்காஞர் என் செய்வர் பாவம்!

24. அரவம் என்னுஞ் சொல்லைத் தமிழுக்கே உரித்தாக ஸாதிக்கவும், அது கடைக்குறையாய் அரவ் என்ருகுமென்று ஸாதிக்கவும் முன் வருபவர் "நீலம் என்பது நீல் என்று குறைந்திருக்கிறது; இது போன்று அரவம் என்னுஞ் சொல் அரவ் என்று நிற்கும்" என்றெழுதியிருப்பதற்கு அழுவதா? சிரிப்பதா? நீலம் என்பது கொழுத்த வடசொல்; அது நீல் என்று கடைக்குறையாகிற தென்று காட்டுவது நிஷ்ப்பலமன்றே. இப்படி வீணன பரிச்ரமங்கள் எதற்காகப் படவேண்டும்? "தமிழ் மொழியில் உலகம் உலகு" என்றெழுதியிருப்பதும் மிகத் தவறு. உலகம் உலகு என்பவை லோக மென்னும் வடசொல்லின் விகாரமேயல்லது தமிழ்மொழியல்ல. "கதவம் கதவு" என்றதும் மிகமிகத் தவறு. ஏனென்று கேண்மின்; கதவு என்பது நிஜமான சொல்வடிவு; அது அம் சாரியைபெற்றுக் கதவமென்ருகிறது. அரவு அரவம் என்னுஞ் சொற்களின் தன்மையும் இத்தகைத்தே. ப்ரக்ருத விவாதாஸ்பதமான அரவம் என்கிற சொல்லுக்கு இவை ஒருபடியாலும் த்ருஷ்டாந்தமாக மாட்டாதவை. ஸாமர்த்தியப்பொருளதான पाटवम् - பாடவம் என்னும் வடசொல் பாடவ் என்றே பாடவு என்றே கடைக்குறையாகுமாஞல், அபயம் என்னும் வடசொல் அபய் என்றே அபயு என்றே கடைக்குறையாகுமாஞல் அரவம் என்பதும் அரவ் என்றே அரவு என்றே கடைக்குறையாகுமென்று பறைசாற்றலாம். வடுகு கற்பவன் குதிரைக்கு குர்றம் என்றவுடனே 'ஆனைக்கு அர்றம், பூனைக்கு புர்றம் தெரிந்து விட்டது' என்ருஞம். அதே கதையாயிருக்கிறதந்தோ! (பக்கம் 16 முதல் வரியில்) "பிராமாணிகர் சிலர் கருதுகின்றனர்" என்று பிறரெழுதியுள்ளது "பேதையர் சிலர் பேசுகின்றனர்" என்று திருத்தத் தக்கது.

25. தொல்காப்பியச் சொல்லதிகார உரியியலில் "கம்பலை சும்மை கலியே அழுங்கல் என்றிவை நான்கும் அரவப் பொருள" என்னுஞ் சூத்திரம் தென்படுகிறதாம். இதஞல் அரவமென்னுஞ் சொல் தமிழுக்கே உரியதென்பது நன்கு விளங்குகின்றதாம். அந்தோ! இவை யென்ன மருள்வரிசைகள். அரவம் என்கிற சொல்லானது கம்பலை முதலிய சொற்களிடையேயிருந்தாலாவது இங்ஙனமெழுதலாம். அப்ரஸித்தமானதொரு சொல்லையிட்டு விவரித்திருக்கின்றதென்பது மட்டுமே இங்குள்ளது. "பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி" என்றதஞலும் இதுவே தேறிநிற்கும். "அரவப்பொருள" என்றதஞல் அரவமென்னுஞ் சொல் தமிழுக்கே உரியதென்று காட்டப்பட்டதாகப் பேதையும் பேசான். கிம்பஹுநா? "அரவமென்னுஞ் சொல் தமிழுக்கே உரியது" என்று பெருந்தமிழன் எழுதிவைத்திருப்பதாக எடுத்துக் காட்டிஞலுங்கூட தத்வவித்துக்கள் அதை ஏற்றுக்கொள்ளார்களே. விச்வகுணதர்பணகாரர் ப்ரஹ்லாதனை कायाधवः — காயாதவ: என்ருர். कयाधोरपत्यं सुतः कायाधवः என்று தத்திதவ்ருத்தி யென்பதைத் தெரிந்து கொள்ளமாட்டாதவரும்; கயாதுவென்பது ப்ரஹ்லாதமாதாவின் பெயரென்பதைத் தெரிந்து கொள்ளாதவருமான வியாக்கியானகாரர்

**काये अधव: — कायाधव:** = தன்னுடலில் அன்பில்லாதவராதலால் காயாதவரென்கிறது என்றெழுதி வைத்தார். இப்படி பல்லாயிரவர் பல்லாயிரமிடங்களில் மருண்டு எழுதி வைத்தவையுண்டு. விவேசசக்தி வாய்ந்தவர்கள் அவற்றைக் கண்டு நிலைதளும்பார்கள். ரவ: என்னும் வடசொல் அரவமென்றாயிற்றென்பதை யறியாதவர்கள் எதுபேசினாலென்ன ? சிரம் கரம், உரம், கந்தரம், அந்தரம், ... என்னுஞ் சொற்கள் வடசொல் திரிபென்பதை யுணராதவர்கள் மனம் போனபடி யெழுதிவைத்துப் பட்டபாடுகளை இவர்களறியார்களந்தோ !

25. குந்தலமென்னும் வட சொல் கூந்தலென்று திரிந்ததென்பதை யுணராத சிலர் ஏதோ எழுதிப் பங்கமடைந்தனர். திருமாலை முதற் பாட்டிலுள்ள ஆவலிப்பு என்னுஞ் சொல் அவலேபமென்னும் வடசொல் என்பதை யுணராதார் சிலர் விபரீதமாக வெழுதித் தகர்ப் புண்டனர். ம்ருத் என்னும் வட சொல்லே மண்ணென்று திரிந்ததென்று சிலர்க்கு உணர்த்தினோம். ஸஹபாணி என்பதே சப்பாணியாயிற்றென்று பலர் உணரப் பெற்றார்கள். दो: என்னும் வடசொல்லே தோளாயிற்றென்று பலர்க்கு உணர்த்தினோம். ஸாரு:—சாறு; தரா—தரை; ரூபீ—உரு; அரூபீ—அரு. இங்ஙனே பல பலவுணர்த்தினோம். திருக்கோவலூர்ப் பாசுரத்தில் * மண்டபமொண்டொளியனைத்தும் வாரமோத * என்றவிடத்து வீதிக்கு வாசகமாகத் தொளி யென்றுள்ளது. * रथ्या प्रतोलिर्विशिखा * என்ற அமரகோசத்தில் காட்டப்பட்ட ப்ரதோளி யென்னுஞ் சொல்லே தொளியாயிற்றென்றுணர்த்தினோம்.

26. தமிழுக்கே உரிய சொற்கள் பல பலவுள்ளன வென்பதை யாம் மறுப்போமல் லோம்;. அரவம் என்கிற விவாதச் சொல் வடமொழித் திரிபே யென்பதில் ஐயுற வேண்டா. 'தமிழுக்கே உரிய சொல் தானிது' என்று கொண்டாலும் லாபமில்லையே. அது அரவ் என்றுமாகுமென்பதைப் பிரயோகங்கள் காட்டியன்றோ நாட்ட வேண்டும். யாவதாயுஷம் தேடினாலும் கிடைக்காது கிடீர்.

## அரவும் என்கிற சொல்வடிவத்தில் ஆக்ஷேபமில்லையென்று கொண்டாலும் பெறுவதொரு பேறில்லையென்று நிரூபித்தல்.

27. "தயிரரவும் என்று உம்மையோடு கூடின பாடமிருந்தாலுங் கூட இந்த உம்மையானது கீழே சொல்லப் பட்ட ஆனைச் சாத்தத்தினரவத்தை ஸமுச்சயிக்க வல்லதாகுமே யொழிய பாசுரத்தில் சொல்லப் படாததான ஆய்ச்சியர் பாட்டொலியை ஸமுச்சயிக்க மாட்டாதென்பது கல் வெட்டு." என்று நாமெழுதி யிருந்ததை அநுவதித்து "இதற்கு திருப்பாவையிலேயே ஓரெடுத்துக்காட்டைக் காட்டி ஸமாதானம் கூறுவோம்" என்று பிடிகையிட்டு "புள்ளும் சிலம்பின காண்" (6) என்ற பாசுரத்தில் புள்ளுமென்றவிடத்துள்ள உம்மையைக் காடுபாய்ந்து எழுதப் பட்டிருப்பதும் அரண்ய ருதித ஸம சீலமே. பாசுரம் தொடங்கும்போதே புள்ளுமென்று உம்மை யிருப்பதற்குப் பூருவர்கள் செய்தருளின வியாக்கியானம் மிகப் பொருத்தம். புள்ளும் சிலம்பின காணென்கிற இந்தச் சொல் தொடரே பதின்மூன்றும் பாட்டிலும் வருகிறது. அங்கு அநுக்த ஸமுச்சயம் காட்டினதுண்டோ ? இல்லை; ஏனில்லை ? இவர்கள் தாமே திருவாய்மலர்ந்தருள்க.

28. அருளிச் செயல்களில் உம்மை வருமிடங்கள் ஒன்பதினாயிரமுண்டு. ஓரிடத்திலும் உம்மைக்கு அநுக்த ஸமுச்சய பரத்வத்தை நம் ஆசார்யர்கள் அருளிச் செய்தது கிடையாது. உபலக்ஷண மர்யாதையையே அவலம்பித்துள்ளார்கள். அதற்கு உம்மை அநபேக்ஷிதம். "தயிரரவம் என்பது பாட்டரவத்திற்கும் உபலக்ஷணம்' என்று இவர்களெழுதியிருந்தால் அவத்யம் கூறுவாரார் ? அஸம்பத்தமான பாடங்களை அபரிமிதமாகச் சொல்லி வருவார் வாயிலன்றி நல்லார்களின் திருவாக்கில் எங்கும் என்றுங் கேட்டறியாததொரு அபத்த

பாடத்தைக் கல்பனை செய்வதும், அதை ஸ்தாபிக்க அஸ்தானே சரணாகதி செய்வதும் வேண்டாவென்று ஹிதமுரைத்து நிற்கின்றோம். இவர்களுடைய கட்டுரையை முடிக்கும் போது "விக்ரேதுகாமா கில கோபகந்யா" என்பது விபரீதமாக எடுத்துக் காட்டப் பட்டிருப்பதிலிருந்து, இவர்களுக்கு எதிலும் விபர்யயம் தவிர வேறு கிடையாதென்பதை ப்ராமாணிகர்கள் திடமாகத் தெரிந்து கொள்வார்களாக. ... ... ...*

जगदीशपुरीति जगत्प्रथिते पुरुषोत्तमदिव्यपुरे भगवान् ।
निजया कृपया निरुपाधिकया ह्यवतारयतिस्म निबन्धमिमम् ॥

नित्यं प्रातस्सायं स्मर्यन्ते ये महामहाविबुधाः ।
कार्प्पङ्काडभिजातास्सिंहार्याः, तद्वचो हि जयति सदा ॥

किं तद्वच इति यदि वो जिज्ञासा स्यादथ स्वचरितकृतौ ।
तेषां छायाचित्रं विनिवेश्यालेखि यत्तदवधत्त ॥

अलुप्तमूर्धन्यलिपिक्रमाणां महात्मनां भाग्यमिदं बलिष्ठम् ।
य ईदृशग्रन्थगणावतारनिदानभूता विलसन्ति दैवात् ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியரெழுதிய

தயிரரவத்திருத்த மறுப்பு

முற்றிற்று.